அது இப்போதுவச்சிராயுதமாகும் நீபோய்கேழ்க்கு முன்னே அந்தக்கிருபாசொரூபியான முனிவன்கொடுப்பான் நீபோய்க்கேளென்ன இந்திரன் தேவர்களுடனே விரைவில் அம்முனிவனிடம்போக முனிவன் கண்டு அன்புடனே முக மலர்ந்து உபசரித்து நீங்கள் முமிகவும் இளைத்துவந்தீர்கள் நடந்த தென்ன ஒளியாமற் சொல்லுங்களென்ன இந்திரன் சுவாமீ தேவரீர் இல்லை யென்னுமல் அருள வேண்டியது அதுவோ அசுரர்களை யழித்து எங்கள் குடிகளை ரக்ஷிப்பது அது வேண்டி இந்தத்தேவர்களுடனே வந்தேன் அது என்ன வென்றுல் உமதுசரீரத்திலுள்ள தென்று சொல்ல எல்லாமுணர்ந்த அந்தமுனிவன் சூரியனைக்கண்ட தாமரைபோல முகமலர்ந்து இந்தத்தேகத்தை நாய்நமதென்னவும் நரிநமதென்னவும் தாய் தந்தை நமதென்னவும் யமன்நமதென்னவும் வியாதியும்பேயும் நமதென்னவும் மனத்திளெண்ணுவதுபோல நாமும் நமதென்று எண்ணப்படுகிற இந்தச்சரீரம் யார்க்குத்தான் சொந்தமாகும் பாம்புத்தோலும் பறவைக்கூடும் தானென்று சொல்லத்தக்கவோ அதுபோற் கூத்தாடிகள் போல பஞ்சேந்திரியங்கள் வாழுகிறவுடம்பை நானென்று எண்ணத்தக்கதோ நடுவுநிலைமையும் அருளுடைமையும் இல்லாத வசுரர்கெடவும் அவர்களாலே துன்பநோயைக்கொண்ட நீவிரெல்லாரும் சுகத்தை யடையவும் எனதுடம்பைக்கொடுத்து இந்திரனே அறத்தையும் புகழையும் யான் பெருவனேயானல் இதைவிட நான்கொண்ட வுடம்பாலடையும்பயன் வேறேயாதென்று அந்தக்கரணங்களொருமித்து எழுகிறகருத்து அறிவையீர்க்க நின்று பிரமநாடியாகிய வழியைக்கொண்டு கபாலங்கீண்டு விமானமேறி மோக்ஷலோகம் போய் வாழ்ந்திருந்தான் பின்பு அந்த முனியாகிய வள்ளல் கொடுத்த ஆயுதங்களெல்லாங் கூடிய முதுகந்தண்டைச்சத்துருக்களையழிக்கத்தக்க வச்சிராயுதமாகச்செய்து விசுவகர்மன் ஆசீர்வதித்துக் கையிற்கொடுக்கப்பெற்று மின்னலுடனே விளங்கிய மேகம்போல இந்திரனைவன் வஞ்சனையால்வென்றுபோன விருத்திராசுரனைக் கொல்லுதற்கு நாலுவகைச் சேனைகள்சூழச் சென்று விருத்திராசுரனைவளைக்க அவனும் வடவாக்கினியானது மலைபோலோங்கிக்கொதித்து வந்தாற்போல குரோதத்துடனே தனதுசேனைகள்சூழ யுத்தஞ் செய்யத்தொடங்கினன்.

அப்போது தேவர்சேனைவீரர்கள்மேல் அசுரர் சேனைவீரர்கள் நெருங்கி இடியேறுபோல கெர்ச்சித்துத் தங்கள்வல்லமையைச்சொல்லி கையில்வில்லையெடுத்து நாணேறிட்டு குணத்தொனி பண்ணி பாணவருஷங்களைப் பொழிந்தார்கள். சிலர் கைவேல்-சக்கரம்-முதலிய ஆயுதங்களை விட்டார்கள். அதற்கு தேவர்கள் நெருங்கி மலைபோலுந்தோள்களை தமதுகைகளாற்கொட்டி இடசாரிவலசாரியாகக் குதித்து கேடகங்களைநீட்டி மோதி அண்டம் வெடிக்கக்கெர்ச்சித்து வாளாயுதங்களா லோங்கி அசுரரை வெட்டினர்கள் அப்போது கால்களுந் தோள்களும் அறுபட்டு ஒடுகிற இரத்தவெள்ளத்தில் சிலராழுந்தினர்கள். சிலர் போரையும்தும்பைமாலையையும்விட்டோடினர்கள். சிலர் அகன்றமார்பு பிளந்து விழ்ந்தார்கள் சிலர் தலைகள் அறுபட்டு எமலோகத்தை யடைந்தார்கள் இப்படி அசுரர்கள்மாள அவ்வாறே கால்களுடனே வீரக்கழலும் தலைகளுடனே முடிகளும், தோள்களுடனே வீரமும் தும்பை மாலையுடனே சண்டைசெய்தலும் வாள்களுடனே கைகளும் மார்புகளுடனே கவசங்களும் சவுரியத்துடனே ஆண்மையும் அற்று தேவர்களிலும் சிலர்குறைந்தார்கள் கழுகுகளும் பருந்துகளுங்கூடி சரிந்துவிழுகிற குடர்களைப்பற்றி யிழுக்கவும் சிந்துகிற இரத்தத்தைக்குடித்துப் பேய்கள் நகைத்துப்பாடவும் குறைத்தலைமுண்டங்கள் எங்குங்கூத்தாடவும் பிணமலைகள் நிறைந்து பூமிமறையவும் அண்டம் உடையவும் இப்படி இருதிறத்தாரும் போர்செய்து மாளப்பின்னும் தங்களால் கூடியவரையிற்போர்செய்து அளவிறந்தவர் மாளக்கண்டு இந்திரனும் விருத்திரனும் கோபங்கொண்டு தெய்வாஸ்திரங்களைப் பிரயோகித்துப் போர்செய்யும்போது இந்திரன் அக்கினியாஸ்திரத்தைப் பிரயோகித்தான் அதை விருத்திரன் வருணஸ்திரத்தை விட்டறுக்க உடனே இந்திரன் வாய்வாஸ்திரத்தைப் பிரயோகித்தான் விருத்திரன் நாகாஸ்திரத்தைப்பிரயோகித்து விலக்கினன், இந்திரன் நாகாஸ்திரத்தை விட விருத்திரன் கருடாஸ்திரத்தை விட்டுவிலக்கினன், இந்திரன்மோகனஸ்திரத்தைவிட விருத்திரன் ஞானாஸ்திரத்தை விட்டு விலக்கி பின்னுந் தேவாஸ்திரங்களை விடக்கண்டு மானமுங்கோபமும் மூண்டு இந்திரனைவன் வச்சிராயுதத்தை எடுத்தவுடனே விருத்திரன் பயந்து முற்காலத்தில் மைநாகபர்வதம் முழுகிமறைந்ததுபோல கடலில் விழுந்துமறைந்தான் கூடவே இந்திரனுங்குதித்து தேடி அவனைக்காணுமல் பிரமதேவனிடத்திற்போய் நடந்தசெய்தியைச் சொல்ல அவன் அந்த விருத்திரன்மாளும்படியான ஆலோசனையைச்செய்து அகத்தியரிடத்திலனுப்ப இந்திரன் பொதியமலைக்கு வருவதுகண்டு இந்திரனையுபசரித்து வந்தகாரியம் என்னென்று கேட்க இந்திரன் எல்லாந்தெரிந்தவுமக்கு நான்சொல்லுவ தொன்று

மில்லை ஆனாலும் விருத்திரன் என்னோடு போர் செய்து வெல்ல மாட்டாமல் கடலில் மறைந்து போனதினாலே இனி யவன் மடியவும் எங்கள் துன்பந்தீரவும் வேண்டி சுவாமி தம்மிடத்தில் வந்ததென்ன அகத்தியர் சச்சிதானந்த சொரூபியான வெள்ளியம்பலத்தானது ஊழிச் செந்தீ வடிவினை மநத்துட் கொண்டு விருத்திரன் மறைந்திருக்கிற கடலை உள்ளங்கையில் உழுந்தளவாகக் கொண்டு ஆசமன்னியஞ்செய்தார் சிவனடியார்கள் முத்தொழிலுஞ்செய்ய வல்லவரென்றால் அகத்தியருக்கு இது வொரு பெரிதோ தீவினையாற்றேடிய செல்வம் போல் நீரில்லாமற்கடல்வற்ற அக்கடலில் ஒருமலையில் தனக்குவருவது தெரியாமல் தவஞ்செய்யும் விருத்திரனை இந்திரன்கண்டு புதியவச்சிராயுதத்தால் அவன்றலையைத் துணித்தான் துணித்தவுடனே இந்திரனை பிரமஹத்திபற்றிக்கொண்டு உம்மென்று மார்பைத்தட்டி கோபித்தெழுந்து கெர்ச்சித்துபோர்க்குவாவென்று வாயைமடித்துப் பல்லைக்கடித்து அவன்மேலேவிழுந்து அழுது சிரித்து சிறி கணப்பொழுதேனும் நீங்காமல் வருத்த இந்திரன் மிகவும்பயந்து ஈசானியதிசையில்ஒருகுளத்திலிறங்கிஒரு தாமரைத்தண்டுக்குள் புகுந்துமறைந்தான் அப்போது கற்பகநாடு அரசனில்லாதிருக்க பூலோகத்தில் நகுஷனென்பவன் அசுவமேதயாகஞ்செய்து முடிப்பதுகண்டுதங்களுக் கரசனில்லாமையால் தேவரெல்லாருங்கூடி அந்தநகுஷனுக்குமகுடஞ்சூட்டிஇந்திரனாகக்கொண்டார்கள் அப்போது இந்திரனாய்வந்த நகுஷன்இந்திராணியைக்கொண்டுவாருங்களென்ன பக்கத்துள்ளோர் இந்திராணிக்குப்போய்ச்சொல்ல அவள் தங்களாசாரியன் முன்புபோய் நின்று எனக்கு நாயகனிருக்க வேறொருவன் என்னைத் தனக்கு மனைவியாக்கிக்கொள்ளுவது தருமமோ சுவாமியென்னவியாழபகவான் சத்தரிஷிகள் தாங்கச்சிவிகைமேல் வருவானாகில் அவனே இந்திரன் அவனே உனக்குமணாளனுமென்ன அதற்கு இந்திராணி சம்மதித்து அப்படிப்பட்ட மேன்மையானசிறப்புடனே என்னிடம்வருகவென்று நகுஷனுக்குத் தூதனுப்பினாள் அப்போது நகுஷன்சிவிகைதாங்கிவருகிற மஹாிஷிகளை மதியாதவனாய் பின்வருவதுந் தெரியாதவனாய் இந்திராணிபோகத்தை அனுபவிக்கு மிகுந்தமோகத்தால் விரைந்துசெல்லவேண்டி சர்ப்ப ஏகுங்களென்னமுன் கொம்புதாங்கிச்செல்லுகிற அகஸ்தியர்முனிந்து நீ சர்ப்பமாகக்கடவையென்று சாபமிட உடனே அவன் சர்ப்பமாகி அற்பரானவர்க்குச் செல்வமல்லது பகைவேறுண்டோ வென்கிறபடியே இழிந்துபோனான்.

பின்புதேவர்கள் தேவருலகம் அரசனில்லாமல் வருந்துகின்றதே சுவாமியென்று தங்களாசாரியனாகிய வியாழபகவானை வணங்கிச்சொல்ல வியாழபகவானும் குளத்திலொளிந்திருக்கிறஇந்திரனிடம் போயழைக்க அவன் தங்கள் ஆசாரியனழைக்கிறாரென்றுதெரிந்து கொடும்பழி கொள்ளப்பட்டரூபத்துடனே வந்துவணங்கி என்னைவருத்துகின்ற இந்தப்பிரமஹத்தி நீங்குவதெப்படி சொல்லுமென்ன வியாழபகவான் பூலோகத்திற் சென்றாலல்லது நீங்குதலில்லை நீ அதுதீர்தற்காக வேட்டையாட வருகிறவனாய் பூமிமேல்வாவென்று ஈசனுக்குச் செய்தகுற்றத்தை ஆசாரியன் தீர்க்கவேண்டும் ஆசாரியனுக்குச் செய்தகுற்றத்தை அவ்வாசாரியனே தீர்க்கவேண்டுமென்கிறபடிதன்னால்வந்ததோஷத்தை தானே தீர்க்கும்வழிசொல்ல இந்திரன் ஆசாரியனுந் தேவர்களுந் தன்னைச்சூழ்ந்துவர குதிரைமேலேறிக்கொண்டு பூலோகத்திலிறங்கி பரமசிவனது கைலாயத்தை முன்னேவணங்கிக்கொண்டு தென்திசை நோக்கிவருகிறவன் கங்கைமுதலிய அளவிறந்ததீர்த்தங்களிலெல்லாமூழ்கி காசி காஞ்சி கேதாரம் முதலிய சிவஸ்தலங்கள் பலவும் வணங்கியும் விருத்திரனைக் கொன்றபாவம் விடாததாய் கேதுவால்விழுங்கப்பட்ட சந்திரன்போல ஒளிமழுங்கி கடம்பவனத்தின் எல்லையைச் சமீபித்தவுடனே தொட்டபழிவிட்டுப்போக மிகுந்தலைச்சுமையோடுவந்தவன் அந்தச்சுமைநீங்கினவன்போல அளவிறந்தசந்தோஷத்தையுடையவனாய் தனதாசாரியனுக்குத்தெரிவிக்க அவர் இவ்விடத்தில் நல்லதீர்த்தமும் தலமும் நாம்தெரிசிக்கக்கடவோமாதலால் சிலரைவிட்டு அவைகளை விசாரியென்ன அவிடம்விட்டு அப்பாற்போம்போது கற்றறிவில்லாதமந்திகள் அருவிநீரின்மூழ்கி அவ்வருவிவீசிய மணிகளைக்கொண்டுவந்து பாறைமேல்சிவலிங்கமாக வைத்து அருவிநீராலபிஷேகஞ்செய்து கரியவிரல்களால் மலர்களைப்பறித்துவந் தருச்சனை செய்து பழங்களை நிவேதித்துப் பூசிக்கவும் யாளியும் யானையும் புழைக்கையால் ஒருதுறையிலே நீராமுகந்து ஒன்றற்கொன்று ஊட்டியூட்டிப்பருகவும் புலிமுலைப்பாலை மான்கன்றுகள் பசிதீரப்பருகிமகிழவும் வெய்யிலில் வெறுநிலத்தில் பாம்புக்குட்டிகள்கிடந்து வருந்தக்கண்டு கருடன்தனதுசிறையைவிரித்து நிழலைச்செய்யவும் அதுகண்டு அச்கருடனாலே பாம்புக்குட்டிகள் வருந்துகின்றன ஐயோ வென்று பெண்குரங்குகள் சங்குகளாலே நீராமுகந்துவந்து அவைகளினுடல் குளிரச்சொரியவும் மயில்கள் பெட்டையோடு கூடியிருக்கும் மணவறையில் மாணிக்கங்களைக்கக்கிப் பாம்புகள் விளக்குவைக்கவும் குயில்

கள் ஓமென்றொலிக்க கிளிகள்பஞ்சாக்ஷரம் அதனோடுசேர்த்துச்சொல்ல பூவைகள் குருபதேசங்கேட்பதுபோலக்கேட்டுமகிழவும் இப்படிமிருகங்கள் பக்ஷிகள் செய்யுஞ் செய்கையைக்கண்டு இந்திரன் அதிசயித்து புளகாங்கிதனாய் மனமகிழ்ச்சியோடு செல்லும்போது ஒற்றர்கள் மீண்டுவந்து வணங்கி பால்குடிப்பவனுக்கு அப்பாலோடு தேனைச் சொரிந்தாற்போல மகிழ்ச்சிமேல் மகிழ்ச்சிபெருக ஐயா எந்த லோகத்திலும் நாங்கள் காணாதவதிசயங்களும் விசேஷங்களும் இந்தக் கடம்பவனத்திலேகண்டு மகிழ்ந்தோம் அதாவது ஒருபரிசுத்ததடாகக்கரையில் ஒரு கடம்பமரத்தி னிழலிலே ஒப்பில்லாதசோதிரூபமான ஒருசிவலிங்கம் விளங்குகின்றதென்று சொல்ல காதுகளில் அமுதஞ் சிந்தியதுபோலக்கேட்டு அவ்வொற்றர் வழிகாட்டச்சென்று திரிகரணமும் குணங்களும் ஒருமித்து தனதுபாவத்தைநீக்கித் துன்பத்தைப்போக்க முளைத்தெழுந்த சிவலிங்கத்தின்மேல் அன்புபற்றிஈர்க்க தலைமேற்கைகுவித்துச்சென்றுகாடுமூடிய அத்தீர்த்தத்தையுங்கண்டு கடம்பவனத்துட்புகுந்து.

அருவாகியுருவாகியருவுருவங்கடந்துண்மையறிவானந்த
வுருவாகியளவிறந்தவுயிராகியவ்வுயிர்க்கோருணர்வாய்ப்பூவின்
மருவாகிச்சராசரங்களகிலமுந்தன்னிடையுதித்துமடங்கநின்ற
கருவாகிமுளைத்தசிவக்கொழுந்தையாயிரங்கண்ணுங்களிப்பக்கண்டான்.

அப்படிக்கண்டு சாஷ்டாங்கமாக விழுந்து பணிந்து ஆநந்தக்கண்ணீர்பெருக பேரின்பக்கடலுள் முழுகி வாய்குழற உடல்நடுங்க அன்புருவாகிய இந்திரனானவன் சிவபெருமான் அருச்சனைக்கு வேண்டுவன வெல்லாங்கொண்டு வரும்படி சிலரைதேவலோகத்துக் கனுப்பி விசுவகருமனை ஒரு விமானம் அமைக்கச்சொல்லி அந்தத்தீர்த்தக் கரையிற் சென்று சிவார்ச்சனை பண்ணுதற்கு பத்திரபுஷ்பங்கிடையாது தேடும்போது சிவபெருமானருளாலே அந்தத்தீர்த்தத்தில் உதயகாலசூரியனைப்போல பொன்னிறத்தாமரை புஷ்பிக்கக்கண்டு அன்புமிகுதியால் ஆநந்தக்கூத்தாடி மகிழ்ந்து அதற்குப்பொற்றாமரைத்தீர்த்தமென்று பெயரிட்டு அதில் ஸ்நாநஞ்செய்து அம்மலரைப்பறித்து தன்பிறவிப்பிணிக்கு மருந்தாகிய சிவலிங்கத்தி னிடத்தில்வந்து நெருங்கிய காடுகளை வெட்டி நிலந்திருத்தி வரும்போது சிவலிங்கத்தின்மேல் சூரியகிரணம்பட மனம்வருந்தி தனது குடையை நிழல்செய்வதாகவைக்க எண்ணுகையில் சூரிய மண்டலம்போல விஸ்வகர்மனா லனுப்பப்பட்ட எட்டுயானைகள் சுற்றிலுந்தாங்க அதற்குமேல் முப்பத்திரண்டு சிங்கங்களும் அறுபத்துநாலு தேவகணங்களுந்தாங்க நிருமித்த அந்த இரத்தின விமானத்தைச்சார்த்தி இந்திரனானவன் அஷ்டமூர்த்தமாய் விளங்குகின்ற பரஞ்சோதி பூசைக்குவேண்டியபொன்னுடையும் இரத்தினாபரணங்களும் வாசச்சந்தனமும் கங்காதீர்த்தமும் தூபதீபங்களும் திருப்பள்ளித்தாமமும் தூங்காவிளக்கும் பஞ்சகௌவியமும் பழமுந்தேனும் திருவமுதும் கொண்டுவர பின்னும் பொற்றாமரையில் ஸ்நாநம்பண்ணி பவம்போக்குந் திருநீறுபூசி உருத்திராக்ஷமாலிகை யணிந்து அன்புவடிவாய் அருள்வடிவாகி அரவாபரணங்களை யணிந்தபசுபதியை அப்பரமசிவமருளிச்செய்த சைவாகமப்படிமெய்யான அன்புபெருகபூசைசெய்து ஆநந்தக்கடலுள்மூழ்கி பூமியிற்படிய அஷ்டாங்க பஞ்சாங்க விதிப்படிவணங்கி திரிகரணமும் ஒன்றுபட்டுவலஞ்செய்து தேகங்கம்பித்து தண்டனிட்டு கூத்தாடிதனதுதோளின்மாலைமிதக்க ஆநந்தக்கண்ணீர்பெருகி நின்று அன்பு அடங்காம லதிகரிக்கதொழுது.

அங்கணாபோற்றிவாய்மையாரணாபோற்றிநாக, கங்கணாபோற்றிமூலகாரணாபோற்றிநெற்றிச்
செங்கணாபோற்றியாதிசிவபரஞ்சுடரேபோற்றி, எங்கணாயகனேபோற்றிஈறிலாமுதலேபோற்றி.

யாவையும்படைப்பாய்போற்றி யாவையுந்துடைப்பாய்போற்றி
யாவையுமானாய்போற்றியாவையுமல்லாய்போற்றி
யாவையுமறிந்தாய்போற்றியாவையுமறந்தாய்போற்றி
யாவையும்புணர்ந்தாய்போற்றியாவையும்பிரிந்தாய்போற்றி.

இடருறப்பிணித்தவிந்தப்பழியினின்றென்னையீர்த்துன், னடியிணைக்கன்பனுக்குமருட்கடல்போற்றிசேற்கண், மடவரன்மணாளபோற்றிகடம்பமாவனத்தாய்போற்றி, சுடர்விடுவிமானமேயசுந்தரவிடங்கபோற்றி.

பூசையும்பூசைக்கேற்றபொருள்களும்பூசைசெய்யு, நேசனும்பூசைகொண்டுநியதியிற்பேறுநல்கும்
ஈசனுமாகிப்பூசையான்செய்தேனெனுமென்போத, வாசனையதுவுமானமறைமுதலடிகள்போற்றி.



౨

వం। వెంకటకృష్ణరాజు నాయకు అచ్చువేసిది।

என்று துதித்த இந்திரனை பரமசிவம் கிருபைக்கண்ணாற்பார்த்து இனிதான குறுநகைதோன்றஇந்திரனே உனக்கு வேண்டியதியாது சொல்லென்ன இந்திரன் விரைவில் வணங்கி தலைமேற்கைகுவித்து சுவாமி உமதுதலத்தில் எல்லைக்குச் சமீபனாய் நான் வரும்போது தீராதபழியும் முற்காலத்தில் நான்செய்தபாபங்களுந்தீர்ந்து உமதுதிருவடியைத் துதித்துப் பூசைசெய்யத்தக்கவனான இதிலும் சிறந்தபேறு வேறேயாது ஆதலால் இன்னமும் உமதுதிருவடித் தாமரையை எக்காலமும் இந்தப்படியே பூசித்து உமதடியாருள் யானுமொருவனாகவேண்டிய இதுவே அடியேன்வேண்டத்தக்கதென்று பாதத்தில் விழுந்து சேவித்த இந்திரனுக்குப் பரமசிவம் கிருபையுண்டாகி இருதுக்களிற் சிறந்த வசந்தருதுவும் மாதங்களிற் சிறந்தசித்திரைமாதமும் நட்சத்திரங்களிற்சிறந்த சித்திரைநட்சத்திரமும் திதிகளிற்சிறந்த பூரணையும் கூடியசித்திரைமாதஞ்சித்திரை நட்சத்திரம் பௌர்ணமிதோறும் வந்துவந்து நம்மை அருச்சனைசெய்வாயானால் வருடம் முந்நூற்றறுபத்தைந்து நாளும் அருச்சனைபண்ணிய பலன்கிடைக்கும் ஆதலால் நீ சொர்க்கலோகத்துக்குப்போய் நன்மையான பலபோகங்களையும் அனுபவித்தபின்புமலபரிபாகம்பிறக்க பிரமாவிஷ்ணு முதலிய பெரிய பதவிகளின்மே லாசையும் மற்றவைகளும் மறக்கும்படி நாம் மோக்ஷந்தருகிறோமென்றுதிருவாய்மலர்ந்தருளிபெருங்கருணை நிரம்பி அருள்செய்ய இந்திரன் புளகாங்கிதனாய் முடிமேல் கைகுவித்து வணங்கி எழுந்து கண்ணீர்துளும்ப பலமுறைதுதித்து ஆநந்தக்கூத்தாடிசுவாமிதிருவடியைவிட்டுப்பிரிய அஞ்சினவனாய்பின்பு பரமசிவத்தின் அருளாகிய ஆக்கினையையெண்ணி பிரியாதவிடைபெற்று சுவர்க்கலோகத்தைச்சேர்ந்து இருபுறத்திலும் அரமங்கையர் சாமரம்வீச பஞ்சதருக்களும் பூமழைபொழிய தேவர்கள் முடிகளையடிகளிற்சூட்ட இந்திராணி போகத்தையனுபவித்து மார்புந்தோளும்பூரித்து தேகம் காமவெள்ளத்தில்முழுக உள்ளம்சோமசுந்தரக்கடவுளது கிருபை வெள்ளத்தில் முழுக பழையபடியே சுவர்க்கலோகத்தில் நீதிசெலுத்திக்கொண்டிருந்தான்.

இந்திரன்பழிதீர்த்தபடலம் - முற்றியது.





## இரண்டாவது.

## வெள்ளையானைச்சாபந்தீர்த்தபடலம்.

### கொச்சகக்கலிப்பா.

மட்டவிழுங்கொன்றைச்சடையான்மகவானைத், தொட்டபழியின்றொடக்கறுத்தவாறேதிப்
பட்டமத்வேழம்பரனைப்பராய்முநிவ, னிட்டகொடுஞ்சாபநீத்தேகியவாறேதுவாம்.

### அறுசீரடியாசிரியவிருத்தம்.

இம்மையிலறமுன்மூன்றுலெய்தியபயனையெய்தி,யம்மையின்மகவானீரோழரும்பதமளவும்வானில் [ர்.
வெம்மையில்போகமூழ்கிவெறுப்புவந்தடையவுள்ளச்,செம்மையில்விளைபேரின்பச்சிவகதிச்செல்வராவா

இறக்கமுத்தியைத்தருங் காசியென்னுந் திருப்பதியில் துருவாசமஹாமுநிவர் பழைய ஆகமப்படியே தமதுபெயர்விளங்க சிவலிங்கப்பிரதிஷ்டைசெய்து சந்தோஷத்துடனே அருச்சித்துதுதிக்கும்போது பரமசிவன்தனதருளால் தனதுதிருமுடிமேலிருக்கும் ஒருதாமரைமலரைவிழச்செய்ய அதனைதனது கையை விரித்துத்தாங்கி கண்களிலுந் தலையிலும் மார்பிலும் அணைத்து தேகம்பூரித்து மிருந்தமெய்பின்பு அதிகரிக்க அவ்விடம் விட்டு தேவலோகத்துக்குப்போகும்போது இந்திரன் சங்கந் தொனிக்க அசுரரை செயங்கொண்ட பிரதாபத்தினாலே தனது பெரியபட்டணத்தில் தேவர்களாகிய சேனைசமுத்திரம்,ஆரவாரிக்க மங்களவாழ்த்தும் வேதங்களும் முழங்க நாலுதிக்கிலும் வாத்தியங்கள் கல்லென்றொலிக்க அரம்பை முதலியோர் அமிர்த ரசஞ்சிந்துகின்ற பாடல்களை காதிற் புகட்டவும் வரிசையாக சாமரங்கள் வீச ஐராவதத்தின்மேல் பவனி வர அவ்விடத்தில் தேவர்கள் நெருங்கிவந்து வேறு வேறு கையுறைகள் கொடுத்து, கைகள் குவித்து கண்டுகொள்ள அங்ஙனம் வந்த துருவாச முநிவரும்,

குற்ற மில்லாத ஆசிகளைச் சொல்லி தமது கையிலிருந்த தாமரை மலரை நீட்ட இந்திரன் அளவிறந்தசெல்வச்செருக்கால் மதியாமல் ஒருகையைநீட்டி அதனைவாங்கி மதயானைத்தலைமேல்வைக்க அந்தயானை பரிமளிக்கும் அம்மலரை துதிக்கையாற்றள்ளி காலால் மிதித்துத்தேய்த்தது அதைக்கண்ட துருவாசமுனிவர் காமதகனனைப்போல நெருப்புப்பொறி சிதறப்பார்த்து கோபித்து தேவர்களஞ்சியோட ஆலகாலவிஷத்தையுண்டபரமசிவனைப்போலநின்றுசிவனடியார்கள் அருவருத்துத்தள்ளிய செல்வச்செருக்கினையுடையாய் என்னசெய்தாய் தேவர்கள் கையுறையையே நன்குமதித்தாய் பரமசிவனது திருமுடிமேல் சாத்திய தாமரைமலரை மதியாமல் யானை மிதித்துத்தேய்க்க அதன்றலைமேல் வைத்தாயே புத்தியீனனே மஹாவிஷ்ணுவின்பெருமையும் பிரமாவின் பெருமையும் தேவர்வணங்கவாழும் உன்பெருமையும் சிவபூசையின் பலனென்று எண்ணினையில்லை உயர்ந்தயானைமேல்வருகிற இந்திரா உன்றலையானது பாண்டியரிலொருவன்வளையால் உடைபடக்கடவது உன்னுடைய நாலுகொம்பினையுடைய வெள்ளையானையும் காட்டானையாகக்கடவதென்று சபிக்க தேவர்கள் அம்முனிவரன் பாதத்தைவணங்கி ஜிதேந்திரியராகிய பெரியவரே எங்களரசனும் வெள்ளையானையும் அபராதிகளானபடியால் நீர் சபித்தசாபத்தை இனிவிமோசனஞ் செய்யவேண்டுமென்று குறையிரந்துருகினர்க்கு மனமிரங்கி துருவாசமுனிவர் சாபவிமோசனஞ் செய்ததாவது மனவாக்குக்கெட்டாதபரமசிவம் அருளியசேஷத்தை நிந்தித்தபாவம் பரிகாரத்தாற்போகாது ஆனால் தலையளவு வந்தது முடியளவாகத்தக்கது யானையும் காட்டானையாய் நூறுவருஷங்கழிந்தபின்பு பழையவடிவாகத் தக்கதென்று பிறிதுசாபம் நியமித்தபடி இந்திரன் மருடபங்கமானது பின்புசொல்லுகிறோம் அதுநிற்க அங்குநின்றவெள்ளானை தேவலோகத்தைவிட்டு மதிகலங்கி நீலமலைபோல மண்ணுலகில் வந்து காட்டானைக்கூட்டத்தோடு கூடி மிருகசஞ்சாரமாய் வேடர்கள்திரிகிற காடும் முல்லைவனங்களும் ஆற்றைச்சார்ந்தகாடும் குறவர்கள்தங்கள் தெய்வத்தோடு சஞ்சரிக்கிற மலையும் திரிந்தலைந்து நூறுவருஷமுங்கழிய பின்பு காட்டோடுநெருங்கியதெய்வீகமான கடம்பமாவனத்தில்வந்து பரமசிவனது திருவருள்பெருங்காலம்நேரிட்டதனல் பொற்றாமரைத்தீர்த்தத்தைக் கண்டபோது தன் பழையவறிவுதோன்ற வத்தீர்த்தத்தில் முழுகியபோது பழையவடிவும் பரமசிவத்தினது கிருபாநோக்கமுந்தோன்றி பரமாநந்தவடிவாகிய சிவலிங்கமும் எதிர்தோன்றக்கண்டு வணங்கி அந்தத்தெய்வநாயகனைப்பூசிக்க அன்புதோன்றி துவாரம்பொருந்திய துதிக்கையினலே மொண்டுவந்து திருமஞ்சனஞ்செய்து தேனொழுகாநின்ற திருப்பள்ளித்தாமமும் சாத்தி அரவாபரணத்தை அணிந்த வேணியினையுடையபரமசிவத்தை அருச்சித்துப்பூசிக்க அதனது உள்ளத்திலுண்டாகிய அன்பினையறிந்த அப்பரமசிவம் வெள்ளையானையைநோக்கி நீயிங்குவந்த காரணம் என்ன உனக்கு வேண்டும் வரம்யாது சொல்லுவாயென்று கேட்க இத்தெய்வயானையானது உள்ளத்திலன்புமிகுந்து வணங்கி முன்னேதனக்குச்சம்பவித்ததும் இங்குவந்தமுறைமையும் கிரமமாகச்சொல்லி என்தந்தை யாகிய உம்மையடையப்பெற்ற எனக்கு இனி ஒருகுறைவுண்டாகுமோ சுவாமி உம்மைத்தாங்கிய இவ்வெட்டுயானைகளோடு அடியேனும் ஒன்பதாக உன்னடியைப்பிரியாது உன் சந்நிதானத்தில் இந்த விமானத்தை முதுகிற்சுமக்க வேண்டுமென்னும் அன்பு என்னுள்ளத்தில் பொருந்துதலினல் அதுவேவேண்டுமென்று இடையறாத அன்பினல் யானையிவ்வாறுசொல்ல தேவலோகத்தை யாளுகிற இந்திரன் நம்மிடத்து மெய்யன்புடையவனதலால் நீயங்குசென்று அவனைத்தாங்கி யிருப்பதே நமக்கு மிகுந்த சந்தோஷமென்று பின்னும் அதற்குவேண்டிய வரங்களைத்தந்து செலவுகொடுத்தருளினர்.

பரமசிவத்தினிடத்துச் செலவு பெற்றுக்கொண்டு வணங்கிச்செல்லும் வெள்ளையானை அச்சிவலிங்கத்துக்கு மேற்றிசையை யடைந்து தன்பேரால்ஒருதடாகமும் அதன்பக்கத்தில் சிவலிங்கத்தையும் கணேசனையும் பிரதிஷ்டைசெய்து அவற்றை அருச்சித்து நீங்காத அன்பும் தானுமாக அங்கு யிருக்குஞ்சமயத்தில் இச்செய்தியை அறிந்த இந்திரன் தூதுவரை யழைத்து எம் யானையைக்கொண்டு வாருங்களென்று அனுப்ப அத்தூதுவர் விரைவில் வந்து அழைக்க நான் வருகிறேன்நீங்கள் முன் செல்லுங்களென்று அனுப்பிவிட்டு தான் அங்குநின்று எழுந்து அதற்குக்கீழ்த்திசையில் ஓரிடத்தில்வந்து தனது பேரால் ஒரூர் உண்டுபண்ணி அதில் இந்திரேச்சுரமென்ன இந்திரன்பேரால் ஒரு சிவலிங்கம் ஸ்தாபித்து அவ்வரனைப் பூசித்து அங்கிருக்க இந்திரன் யானை இன்னும் வந்ததில்லை யென்று பின்னும் மனத்தினும் வேகமாகச்செல்லுகின்றதூதரைவிட அவர்களோடு அயிராவதம் தேவலோகத்தை அடைந்து இந்திரனைவணங்கிக் காட்டிலும் கடியமலையிலும் பலநாள் துன்பநோயுறவந்தசாபம் பரமசிவனைக்கண்டு நீங்கியதும் சொல்லி உயர்ந்த திக்குயானைகளின்

இனத்தினின்று நீங்கியதெய்வயானை இன்பத்தை யுடையதாக வீற்றிருந்தது.

மேற்றிசையில் ஐராவத க்ஷேத்திரத்திலுள்ள தீர்த்தத்தில் மூழ்கி ஐராவதப்பிள்ளையாரைத் தொழுது ஐராவதேச்சுரத்துக் கடவுளைப் பணிந்தவர்சாபத்தொடர்பினும் பாபத்தொடர்பினும் நின்று நீங்குவர் அயிராவதமென்னும் யானைசென்ற வழியே போய் வைகைநீரின்மூழ்கி அதற்குத் தென்கரையிலுள்ள இந்திரேச்சுரன் திருவடியை வணங்குவோர் இப்பிறப்பில் தருமமுதலாகிய மூன்றால் வரும்பயனை யடைந்து வருபிறப்பில் இந்திரபதவி முதலிய அரியபதவியெல்லாம் பெற்று சுவர்க்கலோகத்தில் வெறுப்பில்லாத போகத்தில் மூழ்கிப்பின்பு அதில் வெறுப்புத்தோன்ற மனச்செவ்வையினாலே உண்டாகிற பேரின்பமாகிய சிவகதியை அடைவார்கள்.

வெள்ளையானைச்சாபந்தீர்த்தபடலம் - முற்றியது.

மூன்றாவது

## திருநகரங்கண்டபடலம்.

### கலிநிலைத்துறை.

தானவாறிழிபுகர்முகத்தடகரிசாபம், போனவாறுரைசெய்துமேற்புதுமதிமுடிமேல்
வானவாறினன்கடம்பமாவனமுதுநகர, மானவாறதுதனைச்சிறிதறிந்தவாறிசைப்பாம்.

### எழுசீரடியாசிரியவிருத்தம்.

பவநெறிகடக்கும்பார்த்திவன்கிரணம்பரப்பிளம்பரிதிபோன்மலயத்
துவசனைப்பயந்துமைந்தன்மேன்ஞாலஞ்சுமத்திநாள்பலகழித்தொருநா
ணவவடிவிறந்தோனலயத்தெய்திநாதனைப்பணிந்துமூவலஞ்செய்
துவமையிலின்பவருணிழலெய்தியொன்றியொன்றாகிநின்றான்.

ஏழிசையையுங் கண்டத்திலேயுடைய வண்டுகள் கின்னரம்போலபாடுகின்ற கடம்பவனத்தின்கிழ்த்திசையில் தென்னர்சேகரனென்றும் மன்னர்சேகரனென்றுஞ் சொல்லப்படுகின்ற குலசேகரபாண்டியன் அரசாட்சிசெய்யும்மணவூரில் வைசியர்களில் ஒருவனாகிய தனஞ்செயனென்பவன் திரவியந்தேடுதல்போல சிவார்ச்சனைமுதலிய சிவதருமங்களையும் தேடுகிறவனாய் சிவனிடத்தில் சிறந்தமெய்யன்புடையவனாய் அவ்வூரிலிருந்து மேற்குத்திக்கில் சென்று பெரியவர்த்தகஞ்செய்துபின்பு தன்னூருக்குத் திரும்பும்போது பழையதாகியபிறவிக்கடலின் கரை தெரியச்செய்து அடியார்கள்துன்பத்தைத்தீர்க்குங் கடவுள்வசிக்கிற கடம்பவனத்தின்வழிவரும்போது சூரியன் அஸ்தமித்தகாலமாக நெருங்கியஇருளில் தனியனாய்சிவநேசத்தையுடையவன்நான்குகொம்புள்ள மதயானைகள் பிடரிமேற்றாங்குதலாய் ஆயிரங்கிரணங்களாலே எட்டுத்திக்கிலுமுள்ள இருளைப் போக்கிவிளங்குஞ்சூரியனைப்போல அவ்வனத்திலிருளைப்போக்கி விளங்குகின்ற இந்திரவிமானத்தை நேரேகண்டு சமீபத்தில்வந்து அந்தச்சோதிவிமானத்திலெழுந்தருளிய பரமசிவத்தைத் தரிசித்துவணங்கி ஆநந்தநிரம்பினநெஞ்சினனாய் அவ்விடத்தேதானே அன்றிரவைக்கழிக்க எண்ணி அங்கிருக்கும்போது அன்றிராத்திரியில் சோமவாரமாகையால் தேவர்களெல்லாம் அங்குவந்து பார்வதிசமேதராகிய பரமசிவனது திருவடிகளை வணங்கிசிவராத்திரிபோல அன்றிராத்திரி நான்குசாமத்திலும் அக்கடவுளுக்கு உவப்பாக அருச்சனை செய்துகொண்டிருக்க அங்கே தேவர்கள்வந்ததும் அருச்சனை செய்வதும் இவையெல்லாம்அடியாரன்பிற் கெளியவனாகிய நீலகண்டனது கிருபாநோக்கத்தால் திரிபுண்டரதாரியாய் சிவபத்தி பரிபாலனான தனஞ்சயன் கண்டு சிவார்ச்சனைக்குவேண்டிய வாசனைத்திரவியங்களை தேவர்களிடத்திற் கொடுத்து அருச்சனைசெய்யச்செய்து இந்திரன் தங்கள்தெய்வமாகிய பரமசிவத்தை வணங்கி அருகினிலிருக்க அக்கடவுளைப்பூசித்த தேவர்கள் பாபராசியும் இருளும் போய்விடிய குற்றமில்லாத தனஞ்சயன் ஒருவரையுங் காணாதவனாய் அந்தவிமானத்தின்மேல் ஒப்பற்றுவிளங்குகிற சிவலிங்கத்தை மாத்திரங்கண்டு மிகவும் ஆலோசிக்குஞ் சிந்தையு

ள்ளவனாய் ஆச்சரியப்பட்டு அக்கடவுள் திருவடியின்கிழே வணங்கி யெழுந்து இரண்டுகைகளையுந் தலைமேற்குவித்து பிரதக்ஷிணஞ்செய்து ஒரு விதத்தில் தன்னூருக்குப்போக மநந்துணிந்து மிகுந்த பக்தியோடு சிவபெருமானிடத்தில்விடைபெற்றுக்கொண்டுவந்து அவ்வூரரசனாகிய குலசேகரன் அரண்மனைக்குட்சென்று சத்துருசிங்கமான அவனைவணங்கி அவன்முன்னே நின்று எட்டுத்திக்கையுஞ் செயங்கொண்ட ஆக்கினைச்சக்கரத்தை யுடையவனே நேற்று அந்தக்கடம்பவனத்து வழியாய் நான்வர்த்தகஞ் செய்து வரும்போது பொழுதுபோயிற்று அப்போது நான்கண்ட அதிசயமாவது அன்றிராத்திரிக்கும் எனது பிறவிக்கும் முடிவுண்டாக சூரியமண்டலத்தைப்போல் விமானமும் அதில் ஒருசிவலிங்கமுங்கண்டேன் அந்த விலிங்கத்தை இராத்திரி முழுதும் தேவர்கள்வந்து அருச்சனைசெய்து போனார்கள் நானும் விடியுமளவுங்கண்டிருந்து அக்கடவுளிடத்தில் விடைபெற்று திரும்பிவந்தேன் என்று சிவநேசம் பெருகிச்சொல்ல அதைக்கேட்ட குலசேகர பாண்டியன் சுவாமியினுடைய திருவடிகளையும் தனதிரண்டு கைகளையும் தலைமேல் வைத்து உள்ளத்திலே அதிக அன்பும் ஆச்சரியமும் நிரம்ப இருக்கும்போது சூரியன்அஸ்தமித்தான் அன்றிராத்திரி அவ்வரசன் கனவில் இருவினையொப்பு மலபரிபாகம் சத்திநிபாதம் தத்துவதரிசனம் ஆகிய விவற்றையருளும் பரமசிவமே ஒருசித்தராகிவந்து ஓ பாண்டியனே அந்தக்கடம்பவனத்தை காடுபோக்கி நாடு நகரமாகச் செய்யக்கடவை யென்று தெரியச்சொல்லி மறைந்தருள குலசேகரபாண்டியன் விடியற்காலமாய் கண்விழித்து கனவில் சித்தவடிவாய்வந்த கடவுளுக்குச் செய்யுங் காலைநியதியெல்லா முடித்து அரசாட்சியில்வந்து மந்திரிகளுக்கும் பெரியோர்களுக்கும் இராத்திரி தான்கண்ட கனவிசேடத்தையும் நேற்றுத் தனஞ்சயனென்னும் வர்த்தகன்சொல்லிய விசேடத்தையும் சொல்லி அவர்களும் சந்தோஷித்து சொல்லத் தெரிந்து கொண்டு மந்திரிகளுடனே புறப்பட்டு கடம்பவனத்துக்கு வந்து பொற்றாமரைத் தீர்த்தத்தில் முழுகி இந்திர விமானத்திலிருக்குங் கடவுள் சந்நிதி முன்னே நின்று தலைமேற்கைகுவித்து அன்பு பின்றள்ளவும் முன்பு அருட்கண்ணீர் பெருகவும் என்புருகவும்.

சரணமங்கையோர்பங்குறைசங்கரசரணம், சரணமங்கலமாகியதனிமுதல்சரணம்
சரணமந்திரவடிவமாஞ்சதாசிவசரணம், சரணமும்பர்கணாயகபசுபதிசரணம்.

ஆழிஞாலமேலாசையுமமரர்வான்பதமேல், வீழுமாசையும்வெறுத்தவர்க்கன்றிமண்ணுண்டு
பீழைமூழ்கிவானரகொடுபிணிபடச்சுழலு, மேழையேங்களுக்காவதோவெந்தைநின்கருணை.

சூளதாமரைச்சென்னியுந்தொடத்தொடநீண்ட, நீளனீயுனக்கன்பிலமாயினுநீயே
மூளவன்புதந்தெங்குடிமுழுவதும்பணிகொண், டாளவேகொலிக்கானகத்தடைந்தனையென்னா.

தோத்திரங்கள் பண்ணி பெருகிய அன்பு இரண்டு கண்ணின் வழியிலும் ஒழுகுவதுபோல ஆநந்தக்கண்ணீரொழுக சிவாநந்தக்கடலின் மூழ்கிமெய்யன்போடு பிரதக்ஷிணஞ்செய்து வெளியேவந்து ஒரு புறத்திலிருந்துத்தரவுசெய்தபடியே மந்திரிகளே வலால் காடுவெட்டுவோர்கள்வந்துகூடிகொடுவாள் கோடாலிகொண்ட கையினராய் காடுவெட்டத் துணிந்து வெட்டும்போது இருண்டவனங்க ளெல்லாம்வெட்டுண்டு மெய்ஞ்ஞானிகளுள்ளம்போல் வெளியாய் செவ்வையாகக்கோலி இனிநகர்செய்வதெப்படியென்று மந்திரிகளோடாலோசிக்குஞ் சமயத்தில் அரசன்மகிழ இரவில்வந்தபடியே விபூதிதூளிதராய் பாதம் பூமியிற்பட சித்தவுருவமாகவந்து தோன்றி தாம்முன்புசொன்ன முதனூல் வழிநூல் சார்புநூற்படி வழுவாமல் நல்லகோயில் மண்டபம் கோபுரம்பட்டணம இவைகளை இன்ன இன்னபடிசெய்கவென்று விடைகொடுத்தருளியுடனே மறைய அப்படிமறைந்த சர்வவியாபியான கடவுள் திருவடியில் நிறைந்த பேரன்புடைய பாண்டியன் உலகத்தில் சிற்பசாத்திரங்களால் தெளிந்தவர்களாலே சிவபரஞ்சோதி சொன்னபடிகோயில் வேதபாராயணஞ் செய்கிற மண்டபம் அருத்தமண்டபம் சபாமண்டபம் அறுகாற் பீடிகை நிருத்தமண்டபம் உற்சவமண்டபங்கள் வேள்விமண்டபங்கள் திருமடைப்பள்ளி சுற்றிலுந் தேவர்சந்நிதிகள் வலப்புறத்தில் பார்வதிகோயில் மாளிகைகள் சுற்றுமதில்கள் கொடிகள்கட்டிய நெடியசூளிகைகள் சந்திரனைப்போலப் பிரகாசிக்கிறவீடுகள் செய்குன்றுகள் செம்பொற்கோபுரங்கள் பெரியமதில்கள் அகழிகள் சித்திரங்களெழுதிய பீடிகை வீதிதெற்றிகள் உற்சவவீதி சாளரங்கள் பெரியவீதி நாற்சந்தி முச்சந்தி அம்பலம் சபை மேடை நாடகசாலை முநிவர்வீதி பிராமணர்வீதி அரசர்வீதி வைசியர்வீதி வேளாளர்வீதி சூத்திரவீதி யானைக்கூடம் தேர்ச்சாலைகுதிரைச்சாலை பள்ளிக்கூடம் அன்னசத்திரம் முதலிய எல்லாஞ்செய்வித்து துணிகயம் கீழ்நீர்க்கூவல் பூவோடை குளம் பொய்

கைகந்தனவனம் பூஞ்சோலை துடைவை உய்யானம் இவைகளும் அந்நகருக்கு அழகாகச்செய்வித்து குலசேகரபாண்டியன் தனக்கும் அரண்மனை முதலியவைகள் ஈசானதிசையில் செய்வித்துக்கொண்டு அப்பட்டணத்துக்கு சாந்திசெய்யஆலோசிக்கும்போது சோமசுந்தரக்கடவுள் தெரிந்து வெளிவந்துதமது பொன்னிறமான சடையில் முடித்த சந்திரனது புத்தமுதத்தைச்சிந்த அவ்வமுதஞ்சென்று அறிவுருவமான தமதுபாதத்தை அடைந்தவர்களைத்தாம் சிவமயமாக்கினாற்போல அப்பட்டணத்தை சாந்திசெய்து தன்போற்பரிசுத்தமாய் மதுரமயமானதினாலே அதற்குமதுராபுரியென்றுபேரிட்டு கிழ்த்திசையில் ஐயனாரும்தென்றிசையில் சப்தமாதரும் மேற்றிசையில் துளசிமாலையணிந்த விஷ்ணுவும்வடதிசையில் எண்டோளியாகிய துர்க்கையும் காவலாக நிலைபெறநிறுத்தி யானைப்பிடரியில் பொன்மலை யிருந்ததுபோல விளங்குகிற கோயிலில் மதுரேசனை சாஸ்திரோக்தமா யருச்சனைசெய்வதற்கு பொய்யில்லாத வேதாகமப்படி நடக்கவல்ல பெரியோர்களையும், ஆதிசைவரையும், காசியிலிருந்து வருவித்து மதுரையில் நிலைபெறச்செய்து உத்தமகுலத்தினராகிய நால்வகைக்குடிகளும் உயர்வுந்தாழ்வுமாகக் கலந்த புறக்குடிகள்மூன்றும் வேதநெறிபிசகாமல் மநுநீதிப்படிநடக்க வைதிகதருமமும்சைவதருமமும்சிறக்க உலகத்தின்முகத்திலே திலதமிட்டாற்போல,பட்டணத்தைவளஞ்செய்து அன்றுமுதல்பாண்டியன் மங்கலவாத்தியங்கள் முழங்க நல்லசுபதினத்தில் குடிபுகுந்து பரமசிவனதுகோயில் மூன்றங்கமும் குறைவுபடாமல் பூசைநடக்க விஷ்ணுவைப் போல குலசேகரபாண்டியன் அரசாட்சிசெய்து சிலகாலத்துக்குப் பின் மலயத்துவசபாண்டியனைப்பெற்று வளர்த்து அவனுக்குப்பட்டங்கட்டி ஒருநாள் கடவுள் கோயிலிற்சென்று வணங்கி மூவலஞ்செய்து ஒப்பில்லாத பேரின்பமாகிய அருணிழலெய்திஒன்றியொன்று நிலையில் நின்றனன்.

திருநகரங்கண்டபடலம் - முற்றியது.



நான்காவது.

## தடாதகைப்பிராட்டியார்திருவவதாரப்படலம்.

### கலிவிருத்தம்.

கன்னியொருபங்கினர்கடம்பவனமெல்லா, நன்னகரமான்துநவின்றுமுலகின்ற
வன்னைமகளாகிமலயத்துவசனுக்குந், தென்னனிடைவந்துமுறைசெய்ததுரைசெய்வாம்.

### அறுசீரடியாசிரியவிருத்தம்.

சிவபரம்பரையுமதற்குநேர்ந்தருள்வாடென்னவர்மன்னனுய்மலயத்
துவசனென்றொருவன்வருமவன்கற்பின்றுணைவியாய்வருதியப்போதுன்
றவமகவாகவருவலென்றன்புதந்தனள்வந்தவாறிதுவென்
றுவமையில்பொதியத்தமிழ்முனிமுனிவர்க்கோதினனுள்ளவாறுணர்ந்தார்.

மநுமுதலிய தருமநூல்களைவிரும்பி எல்லோருந் தன் செங்கோல்வழியேசெல்ல நடத்துகின்றபரிசுத்தனை மலையத்துவசனென்று வெற்றிமாலையால் அலங்கிருதனைக் கனிந்த அமுதம்போலுங் கிருபைக்கிருப்பிடமாய் காணுதற்குநல்லவனைவடமொழிக்கடலுந் தென்மொழிக்கடலுங்கடந்து மன்மதன் போல வடிவுள்ளவனைக் காமவிதைமுளைக்கிற நிலம் போலும் பதினாயிரம் மனைவியருள்ளவனைச் சூரியகுலத்திற்பிறந்த சூரசேனமஹாராஜன்குமாரியான காஞ்சனமாலையை விவாகஞ்செய்துகொண்டு சோமசுந்தரக்கடவுளை திரிகாலமும் வந்துவந்து வணங்கும் செயலைக்கற்றவனைப் அநேககாலம் பிள்ளையில்லாமல் அநேகதருமங்களைச்செய்து வேதாகமப்படி தொண்ணூற்றொன்பது அசுவமேதயாகமுஞ் செய்துமுடித்தபின் இந்திரன்வந்து இன்னம் ஒருயாகத்தைபுஞ்செய்து முடிப்பாயானால் எனது பதவிநொடியளவில் மாறுமாகையால் அதுசெய்யவேண்டாமென்று தடுத்து நீநல்லகாரியத்தைச்செய்யத் தொடங்கினதினாலே அதற்குத்தகுதியாக உலகமெல்லாம் மகிழும்படியானபிள்ளையைத் தருகிற யாகத்தைச்செ

ய்தால் நல்லபிள்ளையைப் பெறுவாயென்று புத்திர காமேஷ்டியாகஞ்செய்யச்சொல்லி இந்திரன் போன பின்பு வேப்பமாலையையணிந்த மலயத்துவஜபாண் டியன் அந்த்யாகத்துக்குவேண்டிய வைகளெல்லாங் கொண்டு அந்தநியமத்துக்குத் தகுதியானதனதுதே வியானபொன்மாலையுடனே யாக்சாலையிலிருந்துஇ ந்திரதிக்கைநோக்கி வைதிகர்கள் சொல்லிய் சடங்கி ன்படிஉதாத்தம்அநுதாத்தக்கிரமமான மந்திரங்களு ம்ஆகுதிகளுக்குரியவைகளுஞ்சேரச்சொல்லி வேள் விவளர்க்க அந்தவேள்வியில் புகை ஆகாசமும் பூமி யும் திசைகளும் பரவி போர்வைபோலமறைக்கப் பி ன்னும் குடங்குடமாக நெய்யும் பொரியும் சமித்து க்களும்தேவர்களுக்குப் பிரீதியாகதேவாமிர்தம்போ ல ஆகுதிகொடுத்து பரமசிவனுடைய சொல்வழி யே நெய்நிரம்பப்பெய்து வேள்வியில் அக்கினியை யதிகப்படுத்தும்போது பாம்பலங்காரப்பரஞ்சோதி தனியாகவும் இமவான்மனைவியாகிய மேனை தலைகு னியவும் மலயத்துவஜபாண்டியன் வலதுதோள் து டிக்கவும் பொன்மாலை கொங்கைகள்ததும்பி தீம்பா ல்வெள்ளம்பெருகவும் அவளிடக்கண் துடிக்கவும்இ ந்தப் பாண்டியநாடேயல்லது எந்நாடும் மகிழ்ச்சி பெருகவும் சைவமுதலிய தவமார்க்கங்க ளுபரவும் பாபங்கள்கெடவும் புண்ணியங்கள் வளரவும்தெய்வ வேதங்களும் தெய்வதுந்துபியும்திசைகளெல்லாமு ழங்கவும்தேவரம்பைகள்கூத்தாடவும்அந்தமதுராபு ரியிலுள்ளவர்கள் திரிகரணங்களும் வேறுபடாமல்த ங்களையறியாதஆநந்தத்தையடையவும்பதினெண்பா ஷைகள்வழங்குகிற நாடுகளில் தமிழ்நாடு சிறப்பை யடையவும் தமிழ்நாட்டுமூவேந்தரில்பாண்டியர்கள் மேன்மேலான பெருமையடையவும் அக்கினிதேவ ன் இதுவரையிலுஞ்செய்த தவப்பயனை யடையவும் மாந்தளிர்போல நெருப்புக்கொழுந்துவீசுகிற அந்த வேள்விக்குண்டத்தில் நெருங்கிய தளிர்களையுடைய ஒருவாசனைக்கொடி அநேகவிதழ்களையுடைய தாம ரைமலரை அப்பொழுது மலர்ந்துகொண்டுமுளைத் தெழுந்தாற்போல உலகத்தில் தருமத்தின்வழியிற் சென்றோருக்கு இகபரபோகவீட்டையருளுமம்மை சூழியக்கொண்டை வட்டமதியின் மாசுபோலவுமதி லே தொங்கவிட்டமுத்துமாலைஅந்தச்சந்திரனிலிரு ந்துவருகிற கிரணத்தைப்போலவும் அமுதம்போலு ம் இனியகுதலை மார்பின்வழியேயொழுகி முத்துமா லை யொடுவிளங்க சூரியப்பிரகாசத்தைவென்று பவ ளமாலிகையொளிவீச சிறிய இடையிற்சூழ்ந்தசிற்று டையும் நவரத்னமேகலையும்அசைய காதிற்குண்டல முங்குதம்பையும் இருளைப்போக்கிச் சிறியதோள்க ளைத்தொட்டாடதெளிந்தவமுதம்போலமழலைசிந்த இளநகைதோன்ற மூன்றுவயதுள்ள மூன்று முலை யோடுகூடிய பெண்பிள்ளையாகி சராசரங்களையெல் லாம்பெற்ற உமையவள் விளங்கினாள் சிறிய தளிர் போலுமெல்லடியிலணிந்த சிறியமணிச்சிலம்புஞ்சத ங்கையும் ஒலிக்க நல்லகொடிபோலசைந்து தளர்ந டையிட்டு இளமுறுவல்தோன்ற பெண்ணுகப்பிறந் து பெரும்பயனைப்பெற்ற பொன்மாலை மடியில்வந் து ஒருபெண்குழந்தையாயிருந்தனள் அப்படியிருந் தபிள்ளையை செவ்வாய் வெளிறாமலும் முலைக்கண்க ருகாமலும் கருங்கண்பசவாமலும் பத்துமாதந்தாங் கி வயிறுவருந்தாமலும் பெற்றுக்கொணடு எடுத்த ணைத்து உச்சிமோந்து வாய்முத்தங்கொண்டு பார்வ தியைப்பெற்றமேனைபோல மகிழ்ச்சியடைந்தாள்ப ராசத்தி ஆதிசத்தி இச்சாசத்திஞாநாசத்தி கிரியாச த்தியாய் உலகங்களையெல்லாம் படைத்தும் காத்து ம்அழித்தும் மறைத்தும் அநுக்கிரகித்தும் தனதுவ டிவுவேறாகிவாக்குக்கும் வேதத்துக்கும்எட்டாத ஒ ப்பற்றகாரணியானவள் திருமகளாய்வர இந்தப்பா ண்டியன்செய்ததவமோ போதுமானதன்று இந்திரி யகரணங்களெல்லாங்கடந்து ஆநந்தவெள்ளமாகிய பரஞாநமேவடிவாகவுடைய ஒருமுதல்விதனதுகரு ணையினாலேயே இன்று எல்லாருமறிய ஒருபெண்பி ள்ளையானாள் அப்படியவள் பிள்ளையானகிருபையை யும் தன்மனைவிசெய்ததவப்பேற்றையும் மலயத்து வசன் ஆலோசியாமல் நான்பிள்ளையில்லாமல் நெடு நாள்வருந்தி அரியதவங்களைச்செய்துபின்பு பிள்ளை ப்பேறுண்டாக இந்த யாகத்தைச்செய்தேன் இந்த யாகமும் ஐயோஒருபெண்குழந்தையைத்தந்தது அ ந்தப்பெண்குழந்தையும் முலைமூன்றுள்ளதாய் என் பகைவர் நகைக்கலாயிற்றென்று துன்புறும்போது சிவனருளாலே ஆகாயத்தினின்று மோர்வாக்கு இ ராசனே உனதுகுமாரியை குமாரனாகவெண்ணி சட ங்குகளெல்லாந்தப்பாமல் வேதஞ்சொன்னபடிசெ ய்து தடாதகையென்றுதிருநாமமிட்டு உனதுமுடியு ம் சூட்டக்கடவை சூட்டினபின்பு குமாரிக்கு நாயக ன்வரக்காணும்போது நடுமுலைமறைந்துபோம் நீகி லேசியாதையென்று உண்டாயிற்று அவ்வாக்கு கா துநிரம்பவும் அன்பும்மகிழ்வும்உள்ளத்தில்நிரம்பவு ம் உலகமெல்லாம் திரிகரணங்களொருமிக்கவும் ஆ நந்தக்கண்ணீர் உடல்நிரம்பவும் கடவுளைத்துதித்து யாகத்தைமுடித்தெழுந்து மனைவியோடு யாகசாலை யைவிட்டு இருகைப்புறத்திலும் வாத்தியங்கள் ஒலி க்க தனதரண்மனையிற்சென்று மங்கலவாத்தியத்து டனே எதிர்கொள்பவர்முகத்தில் மகிழ்ச்சிபெருகஇ ராஜரீகஞ்செய்யும் மண்டபத்தில் சிங்காசனத்தின் மேலிருந்து கற்றுக்கேட்டுவல்லரான வைதிகர்கள்

கையில் சுவர்னமழையைப்பெய்து மற்றெல்லார்க்கும் போதும்போதுமென்னக் கொடுத்து மான்மழு வேந்திய கடவுள்கோயிலுக்குஅதிகசிறப்புகள்பெருகக்கொடுத்து பின்னும் சிறையில்கிடப்பவரைச் சிறைநீக்கி ஏழுவருஷம் குடிகளிடத்தில்வாங்குகிற இறைப்பொருளைவிட்டு அயல்வேந்தரிடத்துக் கொள்ளுந் திறையையும்விட்டுஆயத்துறைப்பொருளையும் விட்டு கோயில்களும் தருமசத்திரங்களும் பெருகச் செய்யுங்களென்றும் சத்துருத்துவேஷங்களையும் விடுங்களென்றும் வள்ளுவனாலேபறையறையச்சொல்லி பொக்குஷத்தைத்திறந்துவிட்டுப் பலரும் வேண்டியவளவிற்கொள்ளக்கடவதென்று சிலர்க்கு ஆடையாப்ரணமுதலிய வெகுமதிகளைச்செய்து இராஜவீதியெல்லாம் சந்தோஷமாய் எண்ணெய்விழா சுண்ணவிழாமுதலிய ஆடச்செய்து அந்தமதுராபுரியேயன்றி எல்லாப்பட்டணங்களும் சந்தோஷிக்க மலயத்துவசபாண்டியன் பெருங்களிப்படைந்து கடவுளருளியபடி தன்பிள்ளைக்கு சாதகர்மம்முதலிய கிரியைகளெல்லாஞ்செய்து தடாதகையென்று பெயரிட்டு வேதங்களும் யதார்த்தங்காணக்கூடாத தேவியை இமவானையும் மேனையையும்போல்வளர்த்துக் களிக்குங்காலத்தில்.

பிரமாண்டங்களெல்லாம் சிறுவீடாக விளையாடுகிறவளாகிய செகன்மாதா இப்போது தடாதகையாய் மழலைப்பிள்ளைகளுடனே வீதியில்வந்து மணலாலே சிறுவீடுகட்டி மணற்சோறுக்கி தன்னொடொத்தபிள்ளைகளுக்கு விருந்திட்டும் முருகவேளும் வாய்வைத்தருந்தாத தனதிளமுலைப்பாலை பாவைக்குக்கொடுத்தும் பொன்மாலையை மகிழச்செய்து தோழிமார்கள் கண்களிகூர அவர்கள்கற்க ஆடிக்காட்டுகிறவள்போல கழங்கு பந்து அம்மனைகளாடியும் இருவினையாகிறகயிறுபூட்டி மேலுலகமும் கீழுலகமும்சென்றுவர நம்மை ஆட்டுகிறதுபோல முத்துவடம் பூண்ட ஊசலாடியும் இனி தனது தந்தைக்கு மகிழ்ச்சி செய்வாளாய் மெய்யான வேதங்களும் அறுபத்துநான்குகலைஞாநங்களுந் தெளிந்துயானை இரதம் குதிரை ஏற்றங்களும் தனுர்வேதமும் தெளிந்து வருகிறதைக்கண்டு மலயத்துவச பாண்டியன் வேதவேதாங்கங்களெல்லாம் மேகலையாக இடையில்தரித்த தனது சிறுமகளுக்கு மகுடஞ்சூட்டுதற்கு நல்லநாள் நியமித்து திசைகளுக்கெல்லாம் ஓலைபோக்கி அரசர்களை வருவித்து பட்டணமெல்லாந்திருவிழாவர்க அலங்கரித்து சுமதியாகிய மந்திரியால் அபிஷேகத்துக்கு வேண்டுவனவெல்லாஞ் சேகரித்து மங்கலவாத்தியங்கள் முழங்க யானையின் தலைமேற் பொற்குடங்களில் கங்கைமுதலிய தீர்த்தங்களெல்லாநிரப்பிப் பூசித்து மந்திராக்கினிவளர்த்து அமுதம் நிவேதித்து செம்பொன்னாலும் இரத்னங்களாலுஞ் செய்த சிங்காசனத்தை விசுவாசத்துடனே பூசித்து தெய்வத்தைத்துதித்து திருமுடியை மதயானைமேல்வைத்து பட்டணப்பிரவேசஞ்செய்து பூசித்து இரத்தினங்களாலே ஐந்துதலைகளும் பொன்னாலுடலுமான நாகம்படங்களைப்பரப்பி குடைபோற்கவிய சிங்காசனத்தின்மேல்வைத்து தடாதகைப் பிராட்டியாரை சுவர்னகும்பத்தால் நன்னீர் அபிஷேகஞ்செய்து தேவர்கள் மந்தாரப்பூமழை பொழிய முநிவர்கள் மங்கள்ஞ்சொல்ல தெய்வரம்பைகள்போல்வார் நடனஞ்செய்ய ரிஷிபத்தினிகள் பல்லாண்டுபாட வேதங்கள்முழங்கமாணிக்கக்கிரீடஞ்சூட்டி காருண்ணியரூபியான தடாதகைப்பிராட்டியாருக்கு தனதரசாட்சியும் மந்திரிமுதலியோர் தமதுகாரியங்களைச் செய்யவும் செங்கோல்கொடுத்து பூரணச்சந்திரன் போலும் வெள்ளைக்குடைநிழல் செய்யவும் அந்தச் சந்திரகிரணங்கள்போல இருபுறத்திலும் சாமரம்வீசவும் தேவர்கள் பூமழைபொழியவும் வெள்ளிமலைமேல் சூரியனுதயமானதுபோல வெள்ளையானைமேலேற்றி வேப்பமாலையணிந்து பெண்ணரசியைமங்கலவாத்தியங்கள் முழங்க நகரைவலஞ்செய்வித்து அசரீரிசொல்லக்கேட்ட அப்போதிலும் இப்போது திருமகள்விளங்குகிற செவ்விநோக்கி பேராநந்தம் அதிகரித்து பின்புசிலநாள்கழித்து வீரலட்சுமி கொண்டாட தன்றோள்களாற்சுமந்த உலகமெல்லாம் மகளுக்குக்கொடுத்து மலயத்துவசன் வானாட்டைப் பெற்றான்.

பின்பு தேனிற்சுவை போலவும் பூவில்மணம் போலவும் பரமசிவன் இடப்பாகத்தைப் பிரியாத நமதுதாயாகிய தடாதகைப்பிராட்டியார் தந்தைக்கு அந்தியகாலக்கடன்களெல்லாம் வழுவாதுசெய்துபின்பு இரத்நசிங்காதனத்தின் மேலிருந்து உலகமெல்லாம் ஒருகுடைநிழலிலாள்வாளாய் உலகத்தரசர்கள் வணங்க உலகத்தைமநுநீதிவழுவாமற் காத்து மலயத்துவசபாண்டியன் சுவர்க்கலோகஞ்சென்றபின்பு பரமசிவன் தமதுள்ளத்தில் மதிக்கின்ற அரசவம்சம்போல பாண்டியன்பெற்ற கன்னிப்பெண்ணரசியானவள் ஆக்கியாசக்கரஞ்செலுத்திய பெருமையெப்படியென்றால் சூரியனுதயமாக ஐந்துநாழிகைக்குமுன்னே நாகசுரமுதலிய நல்லிசைகேட்டு எழுந்து திருமஞ்சனமாடி தங்கள் அரசகுலத்துக்குத்தக்க நித்திய கருமாநுஷ்டானங்களும் தேவபூசையும் குறையின்றி முடித்து மெய்ஞ்ஞாநிகள் சூழ்ந்துவர சிவபெருமான் கோயிலுக்குப்போய் சோமசுந்தரக் கடவுளை விதிப்படிவணங்கி மீண்டு தனதரண்மனையி

ல் ராஜரீகநடத்துங் கொலுமண்டபத்தில் புஷ்பங்க
ளாலலங்கிருதமான அரதநசிங்காதனத்தின்மேல் அ
முதத்தாற் செய்தபாவைபோலிருந்து அனிந்திதை
யும் கமலினியும் உலககன்னிகைகளாகவந்து அடப்
பையுங் களாஞ்சியுந்தாங்க சரஸ்வதியும் லட்சுமியு
ம் அப்படியே உலககன்னிகைகளாகவந்து சாமரம்
வீசவுங்கண்ணப்பநாயனுர் அருச்சித்தமலர்கள்போ
ல சோழனும் சேரனும் முதலிய அரசர்கள் தங்கள்
முடிமாலை பாதத்தில்விழவணங்கி அருளினபடிஏவ
ல் செய்ய கத்தி கேடகங்கள்கொண்டு குவித்தகையி
னராய் செகதீஸ்வரியான பிராட்டி எப்போது கிரு
பாநோக்கஞ்செய்வாளோவென்று இமையாமற்பார்
த்து அவள்பார்க்கும்போது இரண்டுகையுங்குவித்
து பிழைத்தோமென்று வாய்பொத்தி உழையர்கள்
ஏவல்செய்யவும் கஞ்சுகிகள் அவன் மராடராஜன்
அவன் கருநாடராஜன் இவன் விராடராஜன் இவன்
குருநாட்டுவேந்தன் உவன் சேரன் உவன் சோழன்
என்று ஐம்பத்தாறு தேசத்தரசர்களையும் பிரம்பாற்
குறித்துக்காட்டவும் செந்தமிழும் வடநூலும் முடி
வு தெரிந்தவர்களும் வேதசாஸ்திரமுதலிய கலைஞா
நந் தெரிந்தவர்களும் ஆறுசமயநூற்றெரிந்தவர்களு
ம் இருவகைப்பற்று விட்டவர்களும் சைவமாதவர்க
ளும் மெய்ஞ்ஞானத்தால் அஞ்ஞாநத்தைவென்றவீ
ரர்களும் சமூகத்திலிருந்து நன்குகத் தெளிவிக்கும்
ஆசாரியர்களும் பஞ்சாங்கத்தால் முக்காலமுந்தெரி
ந்தபுரோகிதர்களும் பின்னனுபவமும் முன்னனுபவ
முந்தெரிந்து நடத்தும் சுமதிமுதலிய மந்திரிகளும்
சூழ்ந்திருக்க பிராமணர்கள் தொழிலாளிகள் தேவ
ஸ்தானபூசை தருமசத்திரம் விரோதமில்லாதகுடிக
ள் முதலானவர்களை மந்திரிகளாலே தெளிந்தும் ஒ
ற்றர்களாலேயறிந்தும்யாதேனுங்குறைவுண்டானல்
தண்டித்துத்தீர்த்தும் உத்தேசம்லக்ஷணம் பரீக்ஷை
என்னும் மூவகையாலே நியாயநூலை அநுவாதித்து
முறைப்படிகண்டித்து கிரமத்தினிறுத்தி தார்க்கிகர்
கள் தர்க்கஞ்செய்யுங் கூட்டத்தில் மகிழ்ச்சிகொண்
டும் மஹாவிஷ்ணுமுதலியதேவர்கள்தங்கள்வலிமை
யாற்கடைந்தெடுத்த அமுதமெல்லாம்வாரி அஞ்ஞா
நந்தீரக்கற்ற வித்வான்கள்பொழிவதுபோல கவிகளி
லுண்டாக்கி ஊட்ட காதுகளிரம்பவுண்டும் பிராம
ணர்கள் சைவர்கள் பெரியோர்கள் எல்லாருக்கும்சு
யம்பாகிகள் தேவாமிர்தத்தையும் வெறுக்கச்சமைத்
தமுல்லையரும்புபோன்றஅன்னமுதலிய நாலுவகை
யுண்டியுங்கொடுத்து அவர்கள்சொல்லும் உபசார
மாகிய விருந்துண்டும்மத்தியானகாலத்தில் புராணி
கர்களாலே பதினெண்புராணங்கள்கேட்டும் மநுமு
தலிய தருமசாஸ்திரங்கள்கேட்டும் பின்பு சித்திரப்
பிரதிமைபோல நாடகிகளாடலும்பாடலுங்கேட்டு
ம் இவ்வாறு முன்னோர்கள்செய்த தருமபரிபாலன
மும் வேறேதருமங்களும் யாகவகைகளும் செய்வித்
தும் செல்வமுங்கல்வியும் தனக்கிருகண்களாக வள
ர்த்துவருகிறுளென்று சொல்வதுபெரிதோ மும்மூ
ர்த்திகளாலே முத்தொழிலையு நடத்துகிறுளென்று
சொல்வதும் ஆதிமத்தியாந்தரகிதையான தேவிபுக
ழுக்கு ஈடன்றென்றால் புல்லறிவினனுகிய என்னுற்
சொல்லிமுடியுமோ முடியாதுதடாதகைப்பிராட்டி
யார் கன்னியாகவிருந்து அரசாட்சி செய்ததனுலே
அந்நாட்டுக்குக் கன்னிநாடென்று பெயராயிற்றென்
று அகத்தியர்சொல்ல முநிவர்கள்கேட்டு மகிழ்ந்து
த்து ஐயா முன்னே தக்கன்செய்த தவத்தாலே தா
க்ஷாயணியாகவும் பருவதராஜன்செய்ததவத்தாலே
பார்வதியாகவும் வேதாந்தங்களுக்கும் எட்டாததே
வி அவதரித்தாள் இங்குமனிதனுகிய மலையத்துவச
ன் மகளென்றுபிறக்க காரணமென்ன சொல்லியரு
ளவேண்டுமென்ன.

அகத்தியர் கேளுங்கள் முநிவர்களே முற்கால
த்தில் விச்சுவாவசு என்னும் விஞ்சையன்பெண்ணு
கிய விச்சாவ்தி என்பவள் பார்வதிபக்தியுள்ளவளா
ய் வருகிறவள் ஒருநாள் தாதையைவணங்கிஐயாநா
ன் பார்வதியைப்பூசித்து ஈடேறவேண்டுகிறேனுகை
யால் அந்தவுமையவள்மந்திரத்தை எனக்குபதேசியு
மென்று தந்தையாலுபதேசிக்கப்பெற்றுப் பின்னும்
ஐயா நான் உமையைப்பூசிக்க இவ்வுலகில் சிறந்த த
லம் யாதென்று கேழ்க்க தந்தை உலகத்தில் பெரி
யோர்கள் எப்போதுஞ் சஞ்சரிப்பதாய் துவாதசமு
டிவென்றும் பூலோக சிவலோகமென்றும் சொல்ல
த்தக்கது மதுரை அதுவோ திரிலோகங்களிலும்சிற
ந்த சத்திபீடம் அறுபத்துநான்கிற்கும் முதற்பீடம்
வேண்டினோருக்கு போகமும் வீடும் சித்தியும் தரத்
தக்கது பின்னும் இரவும்பகலும் சுவர்க்கலோகத்திற்
கதவடையாமல் தேவர்கள்வந்து பூசித்து உமாதே
வி அருளுகிற சித்தியால் வினையைவெல்வார்கள் அ
துவுமல்லாமல் எந்தந்தைமுதல் ஐந்துபேர்கள் பூசி
த்து அந்தமதுரையில் நல்லவரங்களெல்லாம் பெற்
றுர்கள் சராசரங்களெல்லாம் பெற்ற அங்கயற்கண்
ணம்மை தன்னைப் பூசிப்போர்க்கு வேண்டிய இகப
ரபோகங்களைக் கொடுத்துப் பேரருள்செய்து விள
ங்குகின்றுளென்றுசொன்ன தந்தையைவணங்கி அ
வரனுமதிபெற்றுக்கொண்டு ஒருபூங்கொடிபோல் ந
டந்து காடு மலை ஆறுகள் கடந்து நமது ஆதிபராப
ரையினுடைய பரிபூரணகிருபைதங்கிய அந்த மது
ரையில்வந்து பெண்யானை நீராடுதல்போல பொற்
றுமரைக்குளத்தில் முழுகி வேதக்கொழுந்தாகிய க

டவுள் இடப்பாகத்தில் எழுந்து படர்ந்த பொன்மலைவல்லியாகிய அங்கயற்கண்ணியையவணங்கிதைமாதம்தொடங்கி பகலுணவு இராத்திரி போஜனம் அல்லது கிடைத்த சோறு - இலை - காய் - கனி - கிழங்கு - மா - எள் முதலிய வுணவுகளும் சாந்திராயணம் - பஞ்சகௌவியம் - பால் - நன்னீர் - தருப்பைமேனுனிநீர் - வாயு - இவைகளைப்புசித்தும் பட்டினிகிடந்தும் இப்படி பனிரண்டுமாதகாலம் விரதங்கள்செய்து இளைத்து மேல்வரும் தைமாதத்தில் சன்னிதிக்குப்போய் வணங்கிநின்று மாந்தளிர்போலும் திருவடிகளையும் இருமணிக் கோவை சூழ்ந்த முன்போலும் இடையையும் நூலிழையும் நடுப்புகுதாத திருக்கொங்கைகளையும் வரிசையாய் பொன்வளையல்களணிந்த செங்காந்தள் மலர்போலும் திருக்கைகளையும் திருமங்கிலியக் கழுத்தையும் பூரணசந்திரன்போலும் திருமுகத்தையும் வண்டுகள் இன்னிசைபாடுகின்ற இருண்ட திருக்குழற்கற்றையையும் இப்படி பாதாதிகேசபரியந்தம் தேவியைத்தியானித்து வீணைக்கடவுளைத்துதித்து கைகுவித்துஇளஞ்சூரியன்போலு நிறத்தையுடைய மகமல்பட்டால் அளவுக்கிசையத்தைத்து செம்பொன்மயமான கவசத்தை அவிழ்த்து முல்லைப்பூமாலையை முடியிற் சூட்டி சுரைப்பத்தர் பின்னேதோன்ற பூங்கோதையைப்பொருந்திய பிடரியில்கிடக்க வீணையைதோள்மேலணைத்து மீன்போலும் கண்களை யுடைய விச்சாவதி தந்திகளை முறுக்காணிகளால் சுதிகூட்டி பண்விளங்கத் தெறித்துப் பாடத் தொடங்கினள் எப்படியென்றால்.

ஒளியாலுலகின்றுயிரனைத்துமீன்போற்செவ்வியுறநோக்கி
யளியால்வளர்க்குமங்கயற்கணன்னேகன்னியன்னமே
யளியாலிமவான்றிருமகளாயாவியன்னமயில்பூவை
தெளியாமழலைக்கிளிவளர்த்துவிளையாட்டயருஞ்செயலென்னே.

அண்டக்குவைவெண்மணற்சிறுசோறாக்கித்தனியேவிளையாடுங்
கொண்டற்கோதாய்படியெழுதலாகாவுருவக்கோகிலமே.
கொண்டற்குடுமியிமயவரையருவிகொழிக்குங்குளிர்முத்தால்
வண்டற்குதலைமகளிரொடும்விளையாட்டயரும்வன்பென்னே.

வேதமுடிமேலானந்தவுருவாய்நிறைந்துவிளையாடு
மாதரரசேமுத்தநகைமானேயிமயமடமயிலே
மாதரிமவான்றேவிமணிவடந்தோய்மார்புந்தடந்தோளும்
பாதமலர்சேப்புறமிதித்துவிளையாட்டயரும்பரிசென்னே.

இப்படி விச்சாவதி மீனாட்சியை வீணாகானத்தால் தோத்திரம்பண்ண ஆழ்ந்த மெய்யன்பாகியவலைக்குள் அகப்படுகின்ற அங்கயற்கண்ணம்மையாகிய காருண்ணியரூபி சூழியக்கொண்டைமுடித்த சிறிய திருமுடியும் கொவ்வைக் கனிபோலும் திருவாயில் மழலையமுதஞ்சிந்த மூன்றுவயது பச்சிளம் பெண்பிள்ளைவடிவாய் சன்னிதிமுன்னே வேண்டும்வரமருள வந்து நின்றாள்.

அப்படிவந்துநின்ற மூன்றுவயதுக் குழந்தையை விச்சாவதி சாஷ்டாங்கவந்தனஞ்செய்யஅவ்வுலோகமாதாவானவள் விச்சாவதி நீவேண்டியதென்ன சொல்லென்றுகேட்க அதற்கு விச்சாவதிதாயே எக்காலத்தும் உனது பாதகமலங்களினீங்காத பரிபூரண பக்தியை அருளவேணுமென்ன அப்படியே தந்தேன் இன்னமுனக்கு வேண்டியதேதென்ன தாயே இப்போது நான்கண்ட பிள்ளைவடிவாய் என்னிடம்வந்து அருள்சுரந்து மடியிலிருக்க திருவுள்ளஞ் செய்யவேணு மென்று வணங்க சிவபரம்பரையாகிய தேவி சம்மதித்து விச்சாவதியே நீமலையத்துவச பாண்டியனுக்கு மனைவியாக பிறந்துவந்தபோது நான்பிள்ளையாய் உன்மடியில்வந்திருப்பேனென்று அருள்செய்ய அப்படியே விச்சாவதி பொன்மாலையாய் வந்தகாலத்து மதுரைமீனாக்ஷி தடாதகைப் பிராட்டியாக அவதாரஞ்செய்தாளென்று அகத்தியர் அருளிச்செய்தார்.

தடாதகைப்பிராட்டியார்திருவவதாரப்படலம் - முற்றியது.



ஐந்தாவது

# திருமணப்படலம்.

## அறுசீரடியாசிரியவிருத்தம்.

தரைபுகழ்தென்னன்செல்வத்தடாதகைப்பிராட்டிதானே
திரைசெய்நீர்ஞாலங்காத்தசெயல்சிறிதுரைத்தேன்றெய்வ
விரைசெய்பூங்கோதைமாதைவிடையவன்மணந்துபாராண்
டரசுசெய்திருந்ததோற்றமறிந்தவாறியம்பலுற்றேன்.

மனித்தருக்கரசாகித்தெவ்வேந்தர்க்குமடங்கலாய்மடநல்லார்க்
கினித்தவைங்கணைக்காளையாய்நிலமகட்கிணர்த்துழாயணிமாலா
யனித்தநித்தமோர்ந்திகபரத்தாசைநீத்தகந்தெளிந்தவர்க்கொன்றாய்த்
தனித்தமெய்யறிவானந்தமாம்பரதத்துவமாய்நின்றான்.

என்று அகத்தியமுனிவர் கேளுங்கள் முனிவர்களே லோகமாதாவானவள் பெண்ணரசியாகி ஆக்கினைசக்கரம் பகையிருளைப் போக்க வெள்ளைக் குடையாகிய சந்திரன் குளிர்ந்த நிழலைக் கொடுக்க மனுநீதிப்படியே பெரிய உலகங்களெல்லாம் தனியரசு நடாத்திவருங்காலத்தில் திருவிடைஇளைத்து மறையவும் செம்பொன்மலைபோலக் கொங்கைகள் வளரவும் கரியகூந்தல் பாதிராத்திரி இருளை வெல்லவும் வீணைபோல் கொஞ்சுங் குதலைச்சொல்லும் இனியநகையையு முடைய பெண்ணரசுக்கு திருக்கல்யாணகாலம் நேரிட்டதாயிருக்க அந்த குளிர்ந்தசந்திரனைக்கொண்ட கொம்புபோன்ற தடாதகையைப் பெற்ற பொன்மாலையானவள் கண்டு நிறையப்பூத்து வளைந்த கொம்புபோன்ற வுனக்குக் கன்னிப்பருவம் பழுக்குங்காலம்வந்தும் இன்னம் கல்யாணம்கூடாதிருக்கின்றதே யென்று கிலேசித்துச் சொல்லக் கேட்டு தாயே நீ நினைத்த எண்ணம் கூடுங்காலம்வரும்போது கூடும் இப்போது நீ கிலேசிக்க வேண்டாம் நான் சென்று எட்டுத்திசைகளும் சமுத்திரதீவுகளும் எனதுவிசையம் நிலைபெறச் செய்துவருகிறேன் நீ இங்கிருக்கக்கடவையென்று தடாதகைப்பிராட்டி விரைவில் எழுந்துவந்து சபைகூடக்கண்ட அரசர்களும் மந்திரிகளும் முதலியயாவருங்கூடி பிராட்டியின் திருவுள்ளந் தெரிந்து தாவுகின்ற குதிரைகட்டிய தேரைக் கொண்டு வந்து சாரதி நிறுத்த அத்தேரில் உலகங்களுக்குள்ள இடையூறுதீர எழுந்தருளி சங்கமுழங்கவும் அஷ்டாதசவாத்தியங்கள் முழங்கவும் வாள்வீரர்கள் வேல்வீரர்களாக சிலபெண்படைகளும் தேரேறிச் சூழ்ந்துவர சதுரங்கசேனைகளும் சூழ மீனக்கொடியும், புலிக்கொடியும், விற்கொடியும், பீலிக்குடைகளும் சாமரங்களும், வேப்பம்பூமாலையணிந்த தேவிதேரைச்சூழ்ந்துவர வெண்கொற்றக்குடை நிழலைச்செய்ய வேதங்கள் முழங்க பக்கத்தில் வியாழபகவானையொத்த சுமதியென்னு மந்திரி கையிற் பொற்பிரம்பை நீட்டி சதுரங்கசேனைகளுஞ்செல்லச் சேவகஞ் செய்துவர இந்திரலோகமுதலான லோகங்களிலுள்ள செல்வங்களெல்லாங்கொள்ளவெண்ணி கெஜபதி முதலிய வடதிசை அரசர்கள் புஜபலமடங்கவென்று அவ்வரசர்களாலே தேர் முதலிய சேனைகளும் ஊழியப்பெண்களும் இன்னும் பலபொருள்களுந் திறையாகக் கொடுக்கக்கொண்டு வேறே பகைவரில்லாமையால் திக்குப்பாலர்களை வெல்லக்கருதி இந்திரதிசையிற் சென்று அவன் சேனைகளோடெதிர்த்து இந்திரன் சூடிவந்த தும்பைமாலையற்று அவனது கெருவபங்கமாய் ஊழியப் பெண்களும் சதுரங்கசேனைகளும் சிந்தாமணியும் கற்பகமுதலியவுந் திறையாகக் கொடுக்கக்கொண்டு அப்படியே மற்றதிக்குப்பாலரையும் வென்று அவர்கள்கொடுக்குந் திறைகளைக்கைக்கொண்டு ஈசானியதிக்கிற்சென்று கைலாயத்தைச்சமீபித்து தனது சதுரங்கசேனைகளின் முழக்கமும் பலவாத்தியங்களின் முழக்கமும் முன்சென்று பரமசிவத்துக்குரைக்க நெருங்கி மலைகளோடு மலைகள்மோதிச் சண்டை செய்வதுபோல யானைகள் கெர்ச்சித்துப்பாயவும் முதுகில் அம்பறுத்தூணிகட்டி அம்புகள்பூட்டிய வில்லுடனே வீரர்கள் இடிபோல் முழங்கி சூழ்ந்து கொண்டார்கள். அதுகண்ட மலைகாவலர் நந்திதேவரது சந்நிதியிற்போய்ச் சொல்ல அப்போது நந்திதேவர் கைலைக்கடவுளது திருவுள்ளந் தேர்ந்து பிராட்டி சேனைகளின்மேல் ஜெயம்பொருந்திய சிவகணங்களையனுப்ப இரண்டுசேனைகளும் கடலுங்கடலும் பொருதாற்போல கண்களில் நெருப்

புப்பொறிசிந்த வெகுண்டு சூலங்கள் - மழுக்கள் - தோமரங்கள் - சக்கரங்கள் - பிண்டிபாலங்கள்-கழுக்கள் - வாளாயுதங்கள் - தண்டாயுதங்கள் - கலப்பைகள் - வேலாயுதங்கள் முதலிய ஆயுதங்களை எறிந்து ஊழிகாலத்துக் கடல்போல் வீரர்கள் கெர்ச்சித்து எறிவனவும் செலுத்துவனவும் பிரயோகிப்பனவுமாகிய படைகள் சில இரத்தத்தில்முழுகி வெளிப்படுவனவும் தப்பிப் போவனவும் பட்டுமுறிவனவும் வினைக்கொத்த போகம்போலாக காணவந்ததேவர்களின் வாகனங்களில் அன்னமுங் கருடனும் பறந்து ஓடிப்போயின சிலர் வாகனங்கள் ஆயுதங்களாலழிந்தன எமனது எருமைக்கடா துர்க்கைபலிகொண்டதுபோல ரத்தத்தைக்கக்கின அப்போது சுவாமிதரிசனத்துக்குவந்த விஞ்சையரும் அவர் மனைவியரும் இவ்வனர்த்தத்தைக்கண்டு பயந்து வேறுவழியிற்செல்ல சந்திராஸ்திரம், சூரியாஸ்திரம், அக்கினியாஸ்திரம், வருணாஸ்திரம், நாரசிங்காஸ்திரம், சரபாஸ்திரம், வாயுவாஸ்திரம், நாகாஸ்திரம், இவைகளை இருதிறத்தாரும் ஒன்றற்கொன்று மாறுகவிட்டுப் போர்செய்யும்போது நந்திதேவரைச்சேர்ந்த கணங்கள் முறிந்தோட தடாதகைப்பிராட்டியார் புற்றினின்றும் அரவம் சீறிவந்ததுபோல் வில்லில் நின்றும் பாணவருஷங்களை வருஷித்து கணங்கள் கையிலுள்ள அஸ்திர சஸ்திரங்களை யெல்லாம் அறுத்து அவர்களை நிராயுதராக்க அவர்கள் மலைகளைவாரி பிராட்டியார் சேனைகளின்மேல்விடுக்க அவைகளையெல்லாம் வச்சிராயுதத்தாலே அறுத்துப் பொடியாக்கி தண்டாயுதத்தா லவர்களையடிக்க அவர்களெல்லாமுறிந் தோடிப்போனார்கள். அண்டங்களையும் சராசரங்களையும் உண்டு பண்ணி அவைகளில் எங்கும் வியாபித்திருக்கிற தேவியின்பெருமையை யாராலே சொல்லிமுடியும் ஆதலால் கணங்கள் ஆயுதங்களுமற்று விமானங்களுமழிந்து அணிந்த மாலைகளும் உதிர்ந்து போர் செய்ய மூண்ட புஜவலியுங் கெட்டு கோபமுங்குலைந்து வீரநகையுமிழந்து வீரசிங்கம் போன்ற நடையும் தளர்ந்து நிற்கிற நிலையை நந்திதேவர்கண்டு எல்லாரையும் அடிமையாகவுடைய கடவுளடியில்வணங்கி இவைகளைச்சொல்ல கங்காதரனைகடவுள்கேட்டு புன்னகைசெய்து தருமசுவரூபமாகிய சிவந்த கண்களையுடைய இடபவாகனத்திலேறி வலியவில்லும் ஜெயத்தைத்தருகிற தெய்வாஸ்திரங்களையுங் கைக்கொண்டு யுத்தகளத்துக்குவந்து பூதவீரர்களோடு போராடி ஜெயங்கொண்டும் இனியார்வந்தாலும் ஜெயங்கொள்ள வல்லேனென்று பெண்சிங்கம்போல் நிற்கிறதேவிதிருவடிவையும்சேவகத்திறத்தையும் கண்டார் அவர்கண்டபோதே வீரக்கழலணிந்த ஒருதிருவடியும் பாம்பாலிறுக்கியுடுத்தின புலித்தோலும் வெற்றிமழுவைக்கொண்ட திருக்கரமும் திருவெண்ணீரணிந்த அழகிய மூந்நூன் மார்பும் சிவந்த சடைக்கற்றையும் தன்னையே பார்க்கின்ற கிருபாதிருஷ்டியும் கொண்டு விளங்குகின்ற தனதுவலப்பாகத்தை தடாதகைப் பிராட்டியுங் காண கண்டவுடனே தனது மூன்றுமுலைகளி லொருமுலைமறைய. மறையவே உள்ளத்தில் நாண்மடம்அச்சம்தோன்றி வளையும்பூங்கொம்புபோல் துவண்டு துவண்டு பழையவன்பு வந்துதங்க கூந்தலவிழ்ந்து பிடரியிற்றெங்க மீன்போலுங் கண்கள் புறவடியை நோக்க காற்பெருவிரலால் நிலத்தைக் கல்லிக்கொண்டு மின்னலைப்போல் நின்றாள் அப்படிநிற்கிற தடாதகைப்பிராட்டிக்காக முன்னே ஆகாசவாக்காக கடவுள்கூறிய திருவார்த்தை தெரிந்த மூதறிவுள்ள சுமதிதேவி திருவடியையவணங்கி தாயேயிந்தக் கொன்றைமாலையை யணிந்தசெஞ்சடைக்கடவுளே உனக்கு மணவாளன் என்று சொல்ல அப்போதுசிவபரஞ் சோதியானவர் அன்புமிகுந்து தடாதகையைநோக்கி பெண்ணே நீதிக்குவிசயம்பண்ண என்று புறப்பட்டாயோ அன்று தொடங்கி நாமுமதுனையைவிட்டு உன்கூடவே திரிகிறோம் இனி உன்னை வேதவிதிப்படி விவாகஞ்செய்துகொள்ள இனிவருகிற திங்கட்கிழமை நல்லசுபமுகூர்த்தத்தில் உன்பட்டணம்வந்து சேருகிறோம் நீமுன்னே செல்லக்கடவையென்று விடைகொடுக்க அப்படி விடைதந்த நாயகன்மேலன்பையும் உயிரையும் வைத்து பெண்படைகள்சூழ மலைபோலுந் தேர்மேற்கொண்டு பலவாத்தியங்களுங் கடல்போல்முழங்க வழியில் அநேகமலைகளுங் காடுகளும் ஆறுகளுங்கடந்து சந்திரகுலதீபம்போல மங்கலமெதிர்கொள்ள மதுராபுரியில்வந்து இந்திரசெல்வ நிறைந்திருக்கின்ற மாளிகையில் வந்திருந்தனளாக.

பின்பு மந்திரிகள் திருக்கலியாண விசேஷங்கண்டெழுதி எங்கும் ஓலைகளனுப்பி கலியாணத்துக்குத்தக்கபடி பட்டணம் அலங்கிருதமாக வேண்டுமென்று யானைமேல் முரசறைவிக்க அந்தக்கலியாணவாத்தியங்கேட்டவுடனே பட்டணத்திலுள்ளவர்கள் அளவிறந்த மகிழ்ச்சியடைந்து தெய்வத்தைத் துதித்து வணங்கிதேகம்புளகாங்கிதங்கொள்ள அழகிய பெண்களை அலங்கரிப்பதுபோல பட்டணத்தையலங்கரிக்கத்தொடங்கி கழித்தெறிந்தமாலைகளும் சந்தன முதலியனவுமாகிய குப்பைகளைநீக்கி குளிர்ந்த பனிநீரைத்தெளித்து வீதிகளிலுள்ள புழுதியடங்கச்செய்து ஆடவரும் மகளிரும் பாண்டியகுமாரியாகிய தடாதகைக்கு கலியாண மென்கிற பெருங்

க்ளிப்பால் குண்டலங்கள் வளையல்கள்கண்டிகைகள் முதலியவை கழன்று விழ்வனதெரியாமல் அலங்காரஞ்செய்வார்கி ஒருவரை யொருவர் முகுர்த்தமென்றென்று விசாரிப்பார் சிலர்சோமவார மென்று சொல்லுவார் அப்படிச்சொல்லுவோரைசிலர்விரைவில்வந்துதழுவிக்கொள்ளுவார்கள் சிலர் அளவிறந்தசந்தோஷத்தால் மகிழ்ந்து நிற்பார்கள் சிலர் சோமவாரம் இன்னம் ஆறுநாள் ஆறுயுகமாகவெண்ணிக் காலங்கழிப்பார்கள் முன்னேநமக்குத் தோள்துடித்தது தடாதகைப்பிராட்டியார் திருமணக் கோலங் காணத்தானே வென்பார்கள் சிலர் சுவர்களை சுண்ணச்சாந்தால் புதுக்கி சித்திரங்களெழுதி தெற்றிகளுக்கு குங்குமக்குழம்புபூசி முளைப்பாலிகைகளும் பூரணகும்பங்களுந் திண்ணைகளில் வரிசையாகவைத்து வாயில்களுக்குநேரே தோரணங்கள்கட்டி வீதி முழுதும் நடைபந்தலிட்டு பாளைகள் குலைகளுடனே கமுகுகளும் வாழைகளும் கரும்புகளுநிறுத்தி நிலைகண்ணாடிகள் வரிசையாகவைத்து கொடிகள் கட்டி பூவும்பனிநீருமிறைத்து நிலைவிளக்குகள் வைத்து மலர்மாலைகளைத் தொங்கக்கட்டி நவரத்நமாலைகளும் தொங்கவிட்டு யானைகளுக்கு சிந்துரங்களாலலங்கரித்து முகபடாமணிந்து குதிரைகளுக்கு கழுத்தணி காலணிகலனைகளா லலங்கிர்தஞ் செய்து தேர்களையுமலங்கரித்து மாணிக்கதீபங்கள் வைத்து பட்டணத்தை யிவ்விதமாக அலங்கரித்தும் பட்டணத்திலுள்ளவர்கள் புதியவாபரணங்களை யணிந்தும் சந்தனம்பனிநீர்குங்குமகளபகஸ்தூரி திமிர்ந்தும் கண்களுக்குமையிட்டும் பாதங்களிற்செம்பஞ்சுக்குழம்பு பூசியும் சிலம்புமுதலியவை யணிந்தும் கின்னரமிதுனம்போல விரலியர்பாடிப் பரிசுகள்பெற்றும் களியாட்டங்கொண்டும் பிராமணப் பெண்களும் அரசர்கன்னிகைகளும் வந்து பொன்மாலையை சோபனம்விசாரித்தும் பிராட்டியார் திருமணக்கோலங் கண்டும் வரிசைபெற்றுக் கொண்டும் போவாராக யானைத்தலைகளின்மேல் கங்கைமுதலிய தீர்த்தங்களை பொற்குடங்களில் நிரப்பிப் பட்டுவஸ்திரங்களால் மூடி மங்கலவாத்திய முழங்கக் கொண்டுவரவும் அவரவர்களுந் தங்கள் தங்கள் வீட்டில் கலியாணம்போல அறுசுவை யுணவுகள்சமைத்து சந்நியாசி முதலானவர்களை எதிர்கொண்டு வணங்கி உபசரித்தும் இவ்வாறாக.

தடாதகைப்பிராட்டியார் இந்திரனைச் சயித்துக்கொண்டுவந்த விமானங்கள் போலவும் தங்களிராஜகுமாரியென்று காணவந்தமலைகள்போலவும் சுற்றிலுந்தேர்களைநிறுத்தி பளிங்காற்செய்த யானைமேல் நீலரத்நத்தாற்செய்த யாளிகளைச்சுற்றுரேங்களில் நிறுத்தி பளிங்காற்செய்த சுவரில் மரகதச்சாளரங்கள்வைத்து ஆயிரம்பவளத்தூணிறுத்தி அதன்மேல்வைத்த இந்திரநீலப்போதிகைமேல் பொன்னுத்தரங்களிட்டு அரதநவிட்டங்கள் பரப்பி இப்படி சந்திரகாந்தக்கல்லால் வீடுபோலவேள்வி மண்டபஞ்செய்து முத்தினாற்பாளைகளும் மரகதத்தாற்பச்சிலைகளும் பவளத்தால் பழுங்களும் வெள்ளியால் அடியும் உள்ளதாகக் கமுகுகள் நட்டு மரகதத்தால் வாழைகள்நிரைத்தும் அதைச்சுற்றிலும் வண்டுகள்பாட தேன்கள்சிந்த தென்றல் சாளரவழியில்வீச பலவித பூமரங்களை சோலைபோலவைத்தும், யாகசாலையும், வேதியும், மேகலையும், குண்டமும், விதிப்படியமைத்தும், கண்ணாடிமுதலிய அஷ்டமங்கலங்கள் வைத்தும் வாசனைச்சந்தனத்திலே குங்குமப்பூ கலந்து சவ்வாது கஸ்தூரியுஞ் சேர்த்துக்குழப்பி நிலமெழுகியும் இருபுரத்திலும்பாவைகள் மாணிக்கதீபங்களேந்த சூரியமண்டலம்போல் விளங்கவும் ஆகாசத்தில் நட்சத்திரம்பூத்தாற்போல நவரத்நங்களால் மேற்கட்டிகட்டியும் கோயிலுக்குமுன்னே ஆகாயத்தையளாவப்பந்தலிட்டும் முளைதெளித்து பொற்பாலிகைகள் வைத்தும்பிரமாமுதலானதேவர்களுக்குத்தகுந்த பிரப்பம்பாய்விரித்துமேலேசெம்பொன்மயமான ரத்தினக்கம்பளம்விரித்தும் சிவகணங்களிருக்க சுற்றிலும் ஆசனங்களிட்டும் நடுவில்கற்பகத் தருவேண்டியனவெல்லாம் கொடுக்க வயிரமணியாலே செய்த சிங்கத்தின்பிடரியில் பொன்னாலாகிய பலகையைப் பொருந்தப்பரப்பி சதுரமாக தூண்கள்பச்சைமணியால் நிறுத்தி பளிங்கினாலே உத்திரமிட்டுபவளத்தினாலே கொடுங்கைகூட்டி இப்படியாக மூன்றடுக்கி பவளக்குடம்வைத்த விமானம் பலரத்தினங்களாலும் விளங்கசாஸ்திரப்படியே அங்கங்களாறும் கால்களாக முதலெழுத்து பொற்பீடிகையாக வேதசாஸ்திரங்களெல்லாம் முத்துக் கோத்த ஊஞ்சற்கயிறாக நமதுநாயகன் பிராட்டியோடு எழுந்தருளியிருப்பதற்கு ஒருசிங்காசனரூபங்கொண்டுநின்றாற்போல நவரத்தினகசிதமான ஆசனஞ்சமைத்து இந்திரன் கொடுத்த கற்பகமானது பொன்வஸ்திரங்கள் பொன்னாபரணங்கள் பஞ்சாமிர்தம் அறுசுவையுண்டி, சந்தநம், பனிநீர், புஷ்பம், முதலியனவெல்லாம்கொடுக்கசிந்தாமணி சிந்தித்தனவெல்லாம் உதவஇப்படி இந்திரலோகமும்தோற்க அலங்கரித்து நிற்க பாண்டியகுமாரியான பிராட்டி திருமணவோலை எங்கும்போய்ச்சேர எதிர்கொண்டுவாங்கி வணங்கி தங்கள்மணிமுடிமேல் ஓலையைவைத்துக் கொண்டு அதுகொண்டுவந்த தூதருக்கு வஸ்திராபரணங்கள் வெகுமதிசெய்து சந்தோஷமுன்னே செல்லமனத்தினும் வேகமாய்ப்பிரயாணப்பட்டு கொங்கர்-சிங்களர்-பல்லவர்-வில்லவர்-கோசலர் - பாஞ்சா

லர் - வங்கர் - சோனகர் - சீனர் - சாளுவர் - மாளவர் - காம்போசர்- அங்கர் - மாகதர் - ஆரியர் - நேரியர் - அவந்தியர் - வைதர்ப்பர் - கங்கர்-கொங்கணர் - விராடர் - மராடர் - கருநாடர் - குருநாடர் - கலிங்கர் - சாவகர் - கூவிளர் - ஒட்டியர்-கடாரர்-காந்தாரர் - குலிங்கர் - கேகையர் - விதேகர் - பௌரவர் - கொல்லர்-கல்யாணர்-தெலுங்கர்-குர்ச்சரர்-மச்சர் - மிலேச்சர் -செஞ்சையர்முதலான தேசாதிபதிகளெல்லாம் பூமி தாங்கமாட்டாமல் முதுகுநெளிக்க சேனைகளோடுகூடி பலவரிசை வளங்களுடனே வந்து பிராட்டியாருக்கு தெரிவிக்கஅருள்செய்தபடியே தருமந்தழைத்து அருள்பழுத்து சிங்காசனத்தின்மேல் விளங்குகிற கொடிபோன்ற பாண்டியராஜகுமாரியைக்கண்டு கண்களிகூர்ந்து முடிமாலைதிருவடியில் விழவணங்கி அருளின்படியே அவரவர்கள் இருக்கைசென்றிருக்கப்பின்பு மலைவளம் காட்டுவளம் நாட்டுவளம் கடல்வளம் முதலியன வெல்லாம்நிறைந்து மங்களவாத்தியங்கள் மதுராபுரியெல்லா முழங்கிக்கொண்டிருக்க.

அங்கே கயிலாயத்தில் வேதவரம்புகடந்தகடவுள் தமது ஏகநாயகியான தடாதகை போர்செய்வதைவிட்டு மதுரைக்குத் திரும்பினபின்பு பரமசிவம் உயிர்களுக்கெல்லாம் தானே போகங்களை கற்பிக்கிறநியதிதெரிந்து நந்திதேவரானவர் இந்திரன்விஷ்ணு பிரமன் உருத்திரகூட்டங்கள்வரவேணுமென்று சங்குகன்னன்முதலிய சிலகணதிபர்களை யனுப்ப அவர்கள்போய்இந்திராதிதேவர்களுக்குத் திருமணச்சோபனஞ்சொல்ல அவர்கள்பேரன்புபின்தள்ளதசவுருத்திரர்களும் அவர்களைச்சேர்ந்தபூதகணங்களும் சதவுருத்திரர்களும் அவரைச்சேர்ந்தபூதகணங்களும் புத்தியட்டகரும் அவரைச்சேர்ந்த பூதகணங்களும்நூறுகோடியுருத்திரர்களும் பசுபதியுருத்திரர் முதலான அஷ்டமூர்த்திகளும் நீலலோகிதர்களும் ஏகாதசவுருத்திரர்களும் வயிரவரும் விஷ்ணுவும் பிரமனும் இந்திரன்முதலிய திக்குப்பாலகர்களும் அஷ்டவசுக்களும் சத்தமருத்துக்களும் அச்சுவினி தேவர்களும் துவாதசாதித்தர்களும் சந்திரனும் வியாக்கிரமபாதரும் பதஞ்சலியும் உபமன்னியரும் அகஸ்தியரும் சனகாதிகளும் வாமதேவரும் சுகரும் வியாசரும் நாரதரும் சத்தமாதர்களும் சித்தரும் விஞ்சையரும் இயக்கரும் கின்னரரும் தேவரிஷிகளும் யோகிகளும் உரகரும் நிருதரும் அசுரரும் பூதவேதாளகூளிகளும் அரம்பையரும் வருஷங்களும் அயநங்களும் பருவங்களும் மாதங்களும் பக்ஷங்களும் ஐம்பொழுதும் யோகங்களும் கரணங்களும் இராவும்பகலும் நாழிகையும் நிமிடமுதலிய சிறுகாலங்களும் கடலும் நதியும் திக்குகளும் குலவரைகளும் திக்கியானைகளும் மேகங்களும் இடியும் மின்னலும் பஞ்சபூதங்களும் மந்திரங்களும் புவனங்களும் தத்துவங்களும் கலைஞானங்களும் வருணங்களும் நிலைகளும் வேதங்களும் தந்திரங்களும் சமயநூல்களும் தர்மார்த்தகாமமோக்ஷங்களும் சரியை கிரியை யோகஞாநங்களும் சதுட்பாதமும் அஷ்ட சித்திகளும் அண்டங்களுடைபடும்படி வாத்தியங்கள் முழங்க சிவகணங்கள் முதலிய யாவரும் வெள்ளிமலைக்குச் சமீபத்தில்வந்து தங்கள்தங்கள் வாகனத்தை விட்டிறங்கி வணங்கி சிவநாமங்களைத் துதித்து பரமசிவமாகிய தேனை வண்டுகள்போல மொய்த்து சூழ அப்போது நந்திதேவர் பிரம்புகொண்டு அடித்துச் சந்தடிவிலக்கி சிவபெருமானுக்குத் தெரிவிக்க சுவாமியருளினாலேவந்து காண்பவரில் சிலர்க்கு வார்த்தை சொல்லியும் சிலர்க்கு நகைமுகங்காட்டியும் சிலரைக் கண்ணுற்பார்த்தும் சிலர்க்குத் திருமுடியசைத்தும் இப்படியுபசரித்து தான் ஒருமண்டபத்திற்சென்று மணக்கோலஞ்செய்துகொள்ளநினைத்த குறிப்பறிந்து குபேரனானவன் மிகுந்த அன்பும் ஆதரவுங்கொண்டு வேதங்களும் பிரமா விஷ்ணுமுதலிய தேவரிஷிகளுந் தொடப்படாத திருமேனியைத் தன்கையாற்றொட்டுப் பட்டுவஸ்திரத்தைக் கொய்து பின்கோவணஞ் சாத்தி முன்கொய்சகம் வைத்து அதன்மேல் இரட்டைப் பொன்னரைஞாணல் இறுக்கி சிகையில் திவ்யபுஷ்பங்களை யணிந்து கற்பகமலராலே சிகழிகைமுடித்து திருநீறணியுந் திருமேனியில் பனிநீர்கலந்து குழைத்த சந்தனகஸ்தூரிகளைப்பூசி சூரியசந்திரர்போல்விளங்க இரண்டுசெவிகளினும் பொற்குண்டலமணிந்து தோளின்மே லசையவும் நீலகண்டத்தில் கண்டிகைசாத்தி முப்புரிநூலணிந்தமார்பிலே முத்துமாலைசாத்தியும் அரதநமாலையுஞ் சாத்தி நான்குதோளிலும் கேயூரங்க ளணிந்து யானைத்தோலைநீக்கிப் பொன்னுத்தரீயமணிந்து பவித்திரமுதலிய மோதிரங்கள் விரல்களுக்கிட்டு உடுத்த கோவணத்தின்மேல் ஐந்தலைநாகம்போலதொங்கசரிகைவஸ்திரத்தைச் சூழக்கட்டி திவ்வியபுஷ்பமாலைகள்கழுத்திலணிந்து சிலம்பும் வீரக்கழலும் திருவடிகளிலணிந்து ஆநந்தித்துநிற்க இந்திரன்முதலிய தேவர்க்கெல்லாம் அழகுசெய்விக்குங் கடவுள் தானும்அழகுசெய்துகொண்டு தேவர்கள் பூமழை பொழியகும்போதரன் முதுகின்மேல் பாதங்களைவைத்துமால்விடைமேலேறி ஆகாசவாசிகள் ஐந்துவாத்தியங்களும் முழக்கிச்சூழ அரக்கர் இயக்கர் பூதர்கள் மங்கலவாத்தியங்கள் முழக்கிக்கொண்டுவர விஞ்சையர்கள் தாளம்போட கந்திருவர் வீணைவாசிக்க தேவர

ம்பைகள் நடனஞ்செய்ய ஆயிரஞ்சிங்கங்கள் முழங்கினாற்போல பானுகம்பன் ஆயிரம்வாயினாலும் சங்கத்தொனிசெய்ய வாணாசுரன் ஆயிரங்கைகளாலும் மத்தளமுழக்க தேவரிஷிகள் கைகள்கொட்டி ஆநந்தக்கண்ணீரொழுகக் கணாதிபர்களுடனே ஆடிப்பாடிச் சூழ இந்திரன் அரதநக்காளாஞ்சிகொண்டொருபுறத்தில்வர ஈசானியன் ஒருபுரத்தில் அடைப்பைதாங்கிவர வாயுபகவான் விசிறிவிசற அக்கினி சாம்பிராணிப்புகைகொடுக்க வருணன் கெண்டிகை சுமந்துவர நிருதி கண்ணாடி கொண்டுவர குபேரன் அடிக்கடி சுவர்னமழை பொழிந்துவர தண்டியடிகள் சேவகஞ்செய்ய கொடிகளுக்கரசாகிய விடைக்கொடி புடைபெயர்ந்தாட குண்டோதரன் சூலந்தாங்கிவர பதினெட்டாயுதங்களும் சூழ்ந்துவர புட்பதந்தன் வடமொழிப்பாடல்கள்பாட அவரது நிழல்வடிவமான ஆலாலசுந்தரன் திருமாலையும் விபூதியுங் கொண்டுவர அன்னவாகனத்திலேறி பிரமன்வலப்புறத்திலும் கருடவாகனத்திலேறி விஷ்ணு இடப்புறத்திலும் கைகுவித்துத் துதித்துவர வெள்ளிமலைமேல் வந்தாற்போல இடபவாகனத்தின்மேலெழுந்தருளி மதுராபுரிவீதியில்வருமுன்னே பொற்சின்னங்கள்.

தேவர்கள்தேவன்வந்தான்செங்கண்மால்விடையான்வந்தான்
மூவர்கள்முதல்வன்வந்தான்முக்கணெம்பெருமான்வந்தான்
பூவலரயன்மால்காணாப்பூரணபுராணன்வந்தான்
யாவையும்படைப்பான்வந்தானென்றுபொற்சின்னமார்ப்ப.

பெண்ணரசியாகிய தடாதகைவாயில் மந்திரிகள்முதலான அரசர்களும்சேனைகளும் கடவுள் சுந்தரபாண்டியனாகவருகிறதை எதிர்கொண்டு வணங்க இந்திரலோகமென்று அதிசயிக்கத்தக்க மதுராபுரிக்குள் முகவாயில்கடந்து மாடவீதியை வலம்புரியாக வரும்போது பொன்கொம்புபோலப் பெண்களும் தோழிகளும் வந்துகூடிக் குமிழம்பூ கோங்கம்பூ காந்தட்பூ அசோகப்பூ என்கிற பலமலர்களும் பூத்த நந்தவனம்போல மொய்த்து மேகலைகளும் வளையல்களும் உங்களுக்குக் கடவுள் கோலங்கண்டால்விட்டுவிடும் சொன்னோம் சொன்னோம் என்று தடுப்பதுபோலக் கால்களிலே சிலம்புகள் ஆரவாரிக்க தாமரைக்காடுபூத்த கருணைக் கடலைப் பாதமுதல் முடியளவும்கண்டு கைகளை தலைமேற் குவித்து இந்தத்தடாதகை என்னதவத்தைச் செய்தாளோ இந்தச்சுந்தரனை யணையவென்பார்கள். சிலர்அப்படியே சொல்லத்தகு மிந்த சுந்தரக்கடவுளுக்கு மென்பார்கள். சிலர் இந்தமதுரை என்னதவத்தைச் செய்ததோ இந்தத் திருக்கலியாணத்தைக்காண நாம் என்னதவத்தைச் செய்தோமோ மலையத்துவசபாண்டியன் பெறாது பெற்ற திருமகள் மணக்கோலத்தைக் காணாதுபோயினனே இங்கே கோலம் வருகிற குழகன் கன்னியழகுக்கேற்ற அழகனே என்பார்கள்சிலர் இந்தச்சுந்தரனே மதுரைக்கரசன் வேறில்லை ஆனாலும், இந்த நங்கைக்கேற்ற நம்பியைப் பொருந்தச்செய்த மந்திரிசுமதி நல்ல தந்திரவான் கன்னியே அல்லது பொன்மாலை இப்படி மகளுக்கேற்ற மாப்பிளை கிடைக்கச்செய்த தவமே தவம் என்றுஇடையிலாடையை நெகிழ்த்துக் கொங்கைகளைக் கசக்கிப் பூசினசந்தனத்தை உதிர்த்துக்கொண்டு நாணிநிற்பார்கள் சிலர் கூந்தலை அவிழ்த்துவிட்டு வாரிக் கூட்டி முடிக்கும்போது உடம்பெல்லா மன்மதபாணம்பட்டு நடுங்குவார்கள் சிலர் குளிர்ச்சியான மலர்கள் அம்பாய்த் தைக்கின்றதே என்று தலையிற்சூடின நீலமாலையையும் முறுவலாகிய முல்லைமாலையையும் மன்மதபாணங்களென்று வெறுத்து ஒருவர்க்கொருவர் முகம்பாராமல் தலைகளைக் குனிந்துகொண்டு உடம்பெல்லாம் பொன்னிறப் பசலைபடர கடவுள் விடைமேலழகனாய் வீதியிலேபோகாமல் நமதுமனங்கள்மேலும் செல்லலாமோ இதுவோ சடைக்கொன்றைமாலை அக்கினிபோலே சந்திரன் சுடலாமோ கடவுள்தலைமேலிருந்தால் அவனைச்சுடாதோ கங்காநீர் அந்தச்சூட்டை மாற்றுமல்லவா என்று மேகலை வெட்கம் கருத்து நிறம் எல்லாம்வெவ்வேறாய் உலையிலிட்ட மெழுகுபோல கடவுள் பவனியைக்கண்டு கடவுள் மெய்யன்பராய் நன்றி மறந்தவர்போலச் சிலநீங்க சிலம்புகலங்க ஒருத்தி விடைமேலழகனைக்கண்டு முப்புரத்தையெரித்த நகையும் காமனை எரித்தகண்ணும் என்னைச் சுடாது விடுமோ வென்றாள் இன்னமொருத்தி உருவெளியாகத் தோன்றுகிறகடவுளை ஆலிங்கனஞ்செய்து நாணினாள் ஒருத்தி தேவர்கள்பிழைக்க நஞ்சுண்டு கறுத்ததன்றுகண்டம் தமது நெஞ்சு இரும்பென்று தெரியவைத்த குறி யென்றாள் ஒருத்தி இந்தச்சுந்தரனுக்கு முன்னே தூதுபோன என்மனது ஏனின்னம் வரவில்லையென்று வருந்தினாள் ஒருத்தி முன்னேகாமனை எரித்த கண்ணாலே பாராமல் ரக்ஷித்தீரோயானால் புகழுண்டு இல்லாவிட்டால் பெண்பழி பெருகுமென்றாள் ஒருத்தி இந்த விடையழகன் என்னைக் கடைக்கண்ணாலும் பார்க்கவில்லையென்று ஒருவனை படத்தில் எழு

திக்கொடென்றுகேட்க அவன் இவனழகை எழுதி முடியாதென்ன மயங்கினுள் ஒருத்தி வலப்புறத்தில் பிரமனும் இடப்புறத்தில் விஷ்ணுவும் விண்ணோர் மண்ணோர்கள் சூழ்ந்துவரவுங் காணமல் சிவயோகிகளைப்போலே எங்கும் மான்மழுவேந்தின கடவுளாகக்கண்டாள் இடபம் விரைந்து செல்லக்கண்டு முன்னே ஒருத்திபார்க்க ஓடும்போதுமேகலையவிழ்ந்து காலிற்சிக்கி தடுமாறிவிழுந்தாள் ஒருத்தி அத்துடனே விலங்கிட்டதுபோல நடந்தாள் இப்படிவிடைமேல்வருகிற ஆனந்தத் தேன்கடலைக் கண்ணுற்பருகி-உடை-கலை-வளை நெகிழ்வது தெரியாமல் பெண்களெல்லாம்மயங்கி எழுதினசித்திரங்கள்போல் காமவெள்ளத்தில் முழுகிநின்று கடவுளென்றுதெரியாமல் தழுவநினைத்து அவர்கள் உதிர்த்தவைகளும் தேவர்கள் சிந்தினமலரும் வீதிநெருங்க அரசிலையாலும் தருப்பையாலும் பொற்கலசத்து நீரில்தோய்த்துப் பிராமணர்கள்வீச அந்த பிராமணப்பெண்கள் ஆலாத்திசுற்ற * அஷ்டமங்கலங்களும் பெண்கள் தாங்க கர்ப்பூரதீபமும் வலஞ்செய்துகாட்ட மும்முரசு முழங்கக் கோயிலுக்கு முன்னே வந்தவுடனே வைதிகர்கள் வேதஞ்சொல்ல நந்திதேவர்கையைப்பற்றி வாகனத்தைவிட்டிறங்கி இருபுறத்திலும் வந்து நின்ற பிரமன் கையையும் விஷ்ணுகையையும் பிடித்துக்கொண்டு வேதமாகிய பாதுகைமேல் பேரின்பத்தைத் தருகிற திருவடிகளைவைத்து கீழே விரித்திருக்கிற நடைபடாத்தின்மேல் நடந்து மந்தாரமழை பொழிய உள்ளே எழுந்தருளுமளவில் பொன்மாலையானவள் மங்கிலியப்பெண்களுடனே எதிர்கொண்டுவந்து பொன்குடத்தி னிரப்பியிருந்த கங்காசலத்தை மங்கிலியப்பெண்கள் வார்க்க சிவபெருமானது பாதங்கள் விளக்கி அந்தநீரைத் தலைமேற் றெளித்துக்கொண்டு ஈரம்போகப் பாதகமலங்களை வெண்பட்டாலே துவட்டி பனிநீராட்டிக் கஸ்தூரிச்சேறுபூசி மந்தாரமலரா லருச்சித்துத் தலைமேலிருகைகளையுங் குவித்துக்கொண் டொதுங்கி ஒருபுறத்திலே நின்று சுவாமி அருமையாகநான்பெற்ற பெண்ணரசியை மணம் புணர்ந்து இந்தராஜலக்ஷுமியையும் என்கன்னியையும் உமது வசஞ்செய்துகொண்டு ஆள்கவென்று துதிக்க அதற்கு உள்ளே நகையுடையராய் மருமகனை கடவுள் மங்களவாத்திய முழங்க கலியாணமண்டபத்தில் வந்து வேதங்கள் முழங்கசிங்காசனத்தி லெழுந்தருளியிருந்து சுற்றிலுநின்ற பிரமன், விஷ்ணு, உருத்திர கணங்கள் தேவர்களானவர்களை யெல்லாம் தகுந்த ஆசனங்களிலிருக்க கடாக்ஷஞ் செய்து எல்லாரையும் பூமிதாங்க முன்கலியாணத்தில் அகத்தியரைப் பொதிகையிலிருக்கச்செய்ததுபோலே இப்போது வடக்கிலிருக்கச் செய்தாரே னென்னத் தமதருளாலே நிரம்பியிருக்க கலியாண முகூர்த்தகாலம் வருமளவும் பெண்களாடல்பாடல்களாலே போது போக்குதலாக.

தடாதகைப்பிராட்டியை ஒரு ரத்ந சிங்காதனத்திலிருத்தி கஸ்தூரி யணிந்து குங்குமச் சேறுபூசி வாசனைத் திருமஞ்சனத்தா லபிஷேகஞ்செய்துமுரசுஞ்சங்குமுழங்க மெல்லியவஸ்திரஞ்சாத்தி ராஜகுலத்துக்குத்தக்கபடி வேதப்பிராமணர்களுக்கு வேண்டிய தானங்கள் கொடுத்து பின்பு திருமகளும் கலைமகளும் தங்கள் தவப்பலன்பலித்ததாக மகிழ்ந்து பிராட்டியினது அனிச்சப்பூவிலு மென்மையானபாதங்களுக்குச் செம்பஞ்சுக் குழம்புபூசி கூந்தலுக்கு மயிர்ச்சாந்தம்வழியவார்த்து கொங்கைகளில்பனிநீரிலே குழைத்துச் சந்தனம்பூசிக் கால்களிற் சிலம்பணிந்து பாதசாலமுங் கிங்கிணியும் புலம்ப முப்பத்திரண்டுகோவையான இரிசிகையும் இருபத்தொருகோவையான கலாபமும் பதினன்கு கோவையான பருமமும் எட்டுக்கோவையான மேகலையும் இரண்டுகோவையானகாஞ்சியும் ஒருபூங்கொம்பிலே வண்டுகள்புலம்புகிறதுபோலப் பூட்டி காந்தளில் வண்டுபோல மணியாழி விரலுக்கிட்டு கைகளில் வைரக்கடகமணிந்து தோளில் கேயூரம் பூட்டி மரகதமாலை செம்பொன்மாலை பவளமாலைகளை மேருவைச் சூழ்கிற கிரகங்கள்போல முலைகளைச்சூழ வணிந்து காதிலேகுண்டலமுதலியன அணிந்து மேகத்துக்குஞ் சந்திரனுக்குநடுவே இந்திரவில்லைப்போல நெற்றிப்பட்டங்கட்டி புஷ்பமாலைகளாலே கூந்தலை யலங்கரித்து திவ்வியாபரணங்க ளெல்லாம்விளங்க அணிந்து சுந்தரக்கடவுளுக்கு மிகவுமகிழ்வு தோன்றச் சிங்காரித்து சோபனமென்றுவாழ்த்தி இருகைகளையும் அவ்விருவருந்தாங்க எழுந்தபோது வாத்தியங்கள்முழங்கிச் சங்கந் தொனிக்க பூமழைபொழிய சாமரைவீச பல்லாண்டுகள்பாட வேதங்கள்முழங்க இந்திராணி அடைப்பைதாங்க திலோத்தமை கண்ணடிகொள்ள விந்தைசந்தடிவிலக்க அரம்பைகாளாஞ்சிதூக்க ஊர்வசி விசிறிவிசற மேனகை கோடிகமேந்த சந்தனகந்தகளபகஸ்தூரி பனிநீரிறைக்க தூபதீபங்கொடுக்க சோபனங்கள்பாட புஷ்பங்கள்பரப்பின பூம்படாத்தின்மேலேபாடகக் கால்களைப் பையப்பைய வைத்து சரஸ்வதியும் லக்ஷுமியும் கைப்பற்றித் தொடர செல்வங்கல்விபெற வேண்டினர்க் கிதுவே சமயமென்று சிலம்புகள்சொல்ல நடந்து துவண்டு அன்புமிக்கிருந்த பிரானருகேபீடரிமேலே தலையை

* கொடி-முரசு - கண்ணடி - குடம் - மணி - விளக்கு அங்குசம் - கவரி.

ச்சாய்த்துக்கொண்டு இருந்தருள அந்த ரத்நபீடத்திலே சுந்தர பாண்டியனென்கிற கடவுளோடிருந்த தடாதகையைக்கண்டவர்கள் மேருமலைமேலே கற்பகத்தருவைச்சேர்ந்த பச்சைக்கொடிபோலிருக்கின்றதென்று புகழ பண்ணுமிசையும் நீருங்குளிர்ச்சியும் பாலுஞ் சுவையும் பூவும் வாசமும் வெவ்வேறுவடிவு கொண்டிருந்தாற்போல அம்மையும் அப்பனுமிருக்க எல்லாரும் கடவுளடிநிழலிற் கலந்தது போலக்கலந்து மகிழ்ந்திருக்க அப்போதில் மகாவிஷ்ணு பொன்கலசத்தில் நீராலே சிவபரஞ்சோதி பாதம் விளக்கி புஷ்ப சந்தனங்களணிந்து தூபதீபங்கொடுத்துப் பூசித்து பிரமன் முதலானவர்களெல்லாம் பாததீர்த்தங்கொள்ள அவ்விடத்தே நின்ற மகாவிஷ்ணு கடவுள் கையிலே பிராட்டி கையைவைத்து மந்திரங்கள் சொல்லித் தாரைநீர்வார்க்கத் தேவர்களெல்லாரும் பூமழைபொழிய அரம்பைகளாடவிஞ்சையர் கீதம்பாட அரவென்று சிவகணங்கள் சொல்லப் புளகாங்கிதராய் கலியாணமென்கிற ஆனந்தக்கடலிலே எல்லோரு மூழ்கினர்கள் பின்னும் தேவர்களுமுனிவர்களும் ஆசீர்வதித்து முறைப்படி சேஷையிட்டு உலகத்துக்கெல்லாம் தாயுந்தந்தையுமான இவ்விருவரும் அருள்விளையாட்டாலேயிப்படிக் கூடக்கண்டோமென்று கொண்டாடி பொற்கலத்திலே காமதேனுவின்பால் கற்பகக்கனி நெய் கரும்புக்கட்டி தேன் இவற்றைக்கலந்து கடவுளைஅமுதுகொண்டருளச் சொல்ல கடவுளும் மனமகிழ்ந்து அமுது செய்தருளி நகைக்க பெண்களெல்லாம் மங்களம்பாட பிரமதேவன் தன்னுடைய புத்திரர்களுடனேயிருந்து நெய் முகந்து வார்த்து வேள்வி வளர்க்க அந்தத்தெய்வாக்கினி வலஞ்சுழித்தோங்க வேதங்கள் முழங்க சங்கங்களூத சாஸ்திரப்படி சடங்குகளெல்லாஞ்செய்து திருமங்கிலியஞ்சாத்திப் பிராட்டிகையைப்பற்றி அக்கினியும் அக்கினிவளர்ப்பவனும் ஆவுதிகொள்ளுகிறவனுந் தானேயான பரமயோகி திருக்கலியாண நிறைவுபெற்று தன்பத்தினியுடனே பொரிமுகந்து செந்தீயிற்பெய்து வேதப்பிராமணர்களுக்குத்தக்க தானங்கள்செய்து அக்கினியை வலம்வந்து மணட்டிபாதத்தை அம்மிமேலே யெடுத்துவைத்து அருந்ததியை நோக்கிவிதிப்படிதப்பாமல் வேள்விச்சடங்குகளெல்லா முடித்து இப்படி உலகத்தார்தெளிய புருடனும் பெண்ணுமாகி மணவறைக்குள்ளேசெல்ல அந்த அழகு கண்ட மனிதருங் கண்களிமையாமல் ஐயன் மணக்கோலங் காண்கிற தேவர்கள்போலாக உயர்ந்தவர் தாழ்ந்தவ ரென்கிற பேதமில்லாமற் கடவுளருளாலே நிறைய மணவறையிலிருந்து கலியாணமண்டபத்தில்வந்து பிரமன்முதலானோர்க்கெல்லாஞ் சிறப்புகள்செய்து அவரவர் தங்கள் தங்களிடங்களுக்குச் செல்ல விடைகொடுத் தனுப்பி அரசர்களுக் கரசு செய்து காட்டுவான்போல சௌந்தர பாண்டியனென்கிற திருநாமங்கொண்டு அரசாட்சிசெய்யத்திருவுள்ள மாய்க் கருணைபூத்து விடைக்கொடி மீனக்கொடியாகவும் பாம்பாபரணம் பொன் னுபரணமாகவும் கொன்றைமாலை வேப்பமாலையாகவும் புலித்தோல் பொன் வஸ்திரமாகவும் மதிமுடி வயிரமுடியாகவும் மதுராபுரியில் சோமசுந்தரக்கடவுள் பாண்டியனாகி வீற்றிருக்க அவர்திருவிளையாடலுக்குத் தகுதியாய்ச் சங்குகன்னன் முதலாகிய கணநிபர்கள் தாங்களும் உருமாறி ஏவல்செய்துகொண்டிருந்தார்கள் பின்பு சௌந்தரபாண்டியனை கடவுள் அரசர்கள் சிவபூசைசெய்வது வேதவிதிதானென்பதை நிலைநிறுத்த அந்த மதுரைநடுவிலே கோயிலுண்டாக்கி சிவலிங்கமும் நிலைபெறச் செய்து இம்மையே நன்மை நல்குமிறையென்று பெயரிட்டுப் பூசைசெய்து கடம்பவனத்துக் கடவுளை மூன்று காலமும்போய்த் தொழுதுகொண்டு உலகமெல்லாம் தமது செங்கோல் செல்ல மனிதருக்கு அரசனாகவும் பகைவருக்குச் சிங்கமாகவும் பெண்களுக்கு மன்மதனாகவும் நிலமகளுக்கு திருமாலாகவும் விளங்கி சாதனசதுட்டயந் தெளிந்தவர்களுக்குச் சச்சிதானந்தமான பரதத்துவமாகிய கடவுள் பூசித்த சிவலிங்கப்பெருமையை யாராலே சொல்லி முடியும்.

திருமணப்படலம் – முற்றியது.

ஆறுவது

# வெள்ளியம்பலத்திருக்கூத்தாடியபடலம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

உலகியனிறுத்துவான்வந்தொருபரஞ்சுடர்வான்றிங்கட், குலமணிவிளக்கைவேட்டுக்கோமுடிகவித்துப்பாடிலகுறுதோற்றமீதான்முனிவரரிருவர்தேற், வலகிலானந்தக்கூத்துச்செய்தவாறறையலுற்றும். [ராண்

குனிவிலாதிரைத்தினந்தொடுத்தெதிர்வருகொடுவிலாதிரையெல்லை
புனிதவாடகமுளரிதோய்ந்தத்தனிப்பொதுநடந்தெரிசித்தந்
கினிதமர்ந்துநூற்றெண்மடங்கைந்தெழுத்தெண்ணியிங்கிலைநிற்குங்
கனியுமன்பினுறெண்ணியாங்கெய்துவர்கருதியவரமெல்லாம்.

சோமசுந்தரக் கடவுளாகிய பாண்டியன் மீனாட்சிதேவியைத் திருக்கலியாணஞ்செய்தபின் அத்திருமணத்திற்குவந்த பூலோகத்தரசர்களையும் தேவர்களையும் இருடிகளையும் மற்றவர்களையும் போசனஞ்செய்யவாருங்களென்று அழைக்க யாவரும்விரைந்துசென்று பொற்றாமரைத் தீர்த்தத்தில் ஸ்நாநஞ்செய்து தங்கள் தங்கள் நித்யகர்மாநுஷ்டானங்களை முடித்துக்கொண்டு வந்தார்கள். அப்பொழுது வியாக்கிரமபாதரும் பதஞ்சலிமுநிவரும் வந்து சோமசுந்தரக்கடவுளை வணங்கித்துதித்து திருச்சிற்றம்பலத்துளாடும் நினது திருநடனத்தைத்தரிசித்து உண்பது அடியேங்களுடைய நியமமென்ன ஆதற்கு அந்நடனத்தை இந்த விடத்துச்செய்கின்றோம் உலகமெல்லாமுருவயாகிய வொருபுருடனுக்கு திருச்சிற்றம்பலம் இதயமாகும் இந்த மதுரை துவாதசாந்தமாகும் என்றுகடவுள் அருளிச்செய்ய ஐயனே அப்புருடனுக்கு மற்றையங்கங்களெவையென்று அவ்விருவருங்கேட்க அதற்குச்சுவாமி அரைக்குமே லேழுலகமென்றும் அரைக்குக்கீழேழுலகமென்றும் அப்புருடனுக்குச் சொல்லுகின்றதால் இந்தத்தரையினிடத்து அநந்தந்தேவஸ்தலமுண்டு அவற்றைச்சொல்லப்புகின் அளவுபடாதாகையால் அவற்றுள் சிலதலங்களைச்சொல்லுகின்றோம் கேளுங்கள் அப்புருடனுக்குத் திருவாரூர் மூலாதாரம், திருவண்ணாமலை சுவாதிஷ்டாநம், திருவானைக்கா மணிபூரகம், நீங்களிருவருமிருந்து தரிசிக்கின்ற சிதம்பரம் அநாகதம், திருக்காளத்தி விசுத்தி, காசி ஆக்ஞை, கயிலை பிரமரந்திரம், இம்மதுரை துவாதசாந்தமாகும் ஆதலால் அவற்றுளீததிகமாகும் எப்படியென்றால் எவற்றினுக்கும் இஃது முன்னர்த்தோன்றினதாலென்று சொல்லி கடவுளவ்விருவரோடும் ஆலயத்துட் சென்றார் அப்பொழுது தனதுகிருபையால் நீங்கிவந்ததன்னைத்தேடிக்கொண்டு கைலாய மலைவந்ததோ அல்லது இடபம் தன்னுருமாறி அம்பலவுருவமாகி வந்ததோ அன்றி சந்திரமண்டலந்தானோவென்று யாவரு மதிசயிக்க இந்திரவிமானத்தின் கீழ்பால் வெள்ளியம்பலம் உண்டாக சோதிமயமாகிய ஆதித்தன் திருப்பாற்கடலின்மீது தோன்றினாற்போல அந்த வெள்ளியம்பலத்தினிடத்து மாணிக்கப்பீடிகையொன்று தோன்றிற்று அத்தன்மையாகிய பீடத்தின் மீது தனதாயிரங்கரங்களினாலும் அள்ள நெருங்கிய இருளைவிழுங்காநின்ற கோடிசூரியர் ஏககாலத்திலுதயஞ்செய்ததுபோல சோமசுந்தரக்கடவுள் மநமுதலிய அந்தக்கரணங்களுக்கெட்டாத ஞானப்பேரொளி வடிவமாகத்தோன்றி எதிராகவிருக்கின்ற சிவகணங்கள் மொந்தையென்னும்வாத்தியமும் மத்தளமும்அடிக்க நந்திதேவர்குடமுழாவென்னும் வாத்தியம் அடிக்க திருமால் இடக்கை என்னும் வாச்சியம்ஒலிக்க நாரதர் தும்புருவர் கந்திருவர் நூலின் விதிப்படி பாட ஐந்து துந்துபியும்சமுத்திரகோஷம்போல்ஒலிக்க நாமகள் சுருதிகூட்டபிரமன் சாமகீதத்தை யாழிற்பாட சந்திரன் பக்கத்தில் நெருங்கியிருக்கும் நக்ஷத்திரங்களைப்போல் தேவர்கள் தூற்றும் மலர்மாரி-யெங்கும் போர்ப்ப கடல்போன்ற நிறத்தினையும் சிவந்த அக்கினிபோல மிகுந்த புறமயிரினையு முடையமுயலகன்மீது வடவாமுகாக்கினிபோலுங் கண்கள்பிதுங்க முதுகுநெரியவலதுதாளையூன்றி கரியகடலிலே முளைத்த சூரியனைப்போலத் தோன்றி நின்று கொய்யாநின்றசெங்கமலமலர் கூம்பினாற்போல தூக்கிநடனஞ்செய்யும் தாமரைமலர்போன்ற தாளும் எட்டுத்திக்கையுங்கடந்துள்ள பத்துத்திருக்கரங்களும் அவற்றில் பலம்பொருந்திய ஆயுதங்களும் தேவமகளிரது மங்கலியசூத்திரத்தைக்காத்த காளகண்டமும்சங்கக்குழையணிந்த காதுகளும் செவ்வானம்போன்ற சடையும் அழகுபொருந்திய திருவெண்ணீறும்திருநேத்திரமும் அரவக்கச்சும் ஆதிவராகத்தின் முள்போன்ற பல் பிரகாசிக்கின்ற மார்பும் அஞ்சனந்தீட்டிய கரியகண்களையுமுடைய அங்கயற்கண்ணம்மை பூங்கொடிபோல ஒதுங்கி நிற்கும் பக்கமும் அவ்வங்கயற்கண்மேல்வைத்த பார்வையும் புன்முறுவலுந் தோன்ற ஆடும்போது சடையிலிருக்கின்ற கங்கையலம்பும் ஓசையும் தரித்தகொன்றைமாலையில்வண்டுகளாரவாரிக்கும் ஓசையும் மங்கலவாத்தியங்களினோசையும் வேதமந்திரவோசையும் செங்கையினின்றும் ஆடாநின்றமழுவாகிய அக்கினியினோசையும் திருவடியிற்றரித்த சிலம்பின தோசையும் எவ்விடங்களிலும் நிரம்பி அன்பர்களது இரண்டுகாதுகளிலும் அமுதத்தைச்சொரிய நின்மலனாகிய சோமசுந்தரக்கடவுள் நடனஞ்செய்தார் நிருத்ததரிசனஞ்செய்துண்ணு நியமம்பூண்ட இருவருங்கண்டு இரண்டுகைகளையுங் கூப்பி முடியின்மீது வைத்து திருவடியில்வீழ்ந்து ஆயிரம்வேதங்களையும் நாவாரப்பாடி பரமாநந்தக்கடலில் மூழ்கி அன்புருவமானார் இவ்விருவர் நிமித்தமாக ஆண்டவனது திருநடனத்தைமுநிவரும் கந்திருவரும் தேவர்களும்தானவர்களும் யோகர்களும் கிம்புருடர்முதலிய தேவர்களும்வணங்கிப் பேரின்பத்தில் மூழ்கினார்கள் திருக்கலியாணத்திற்குவந்த மனிதர்களுங் காணப்பெற்றார்கள் பதஞ்சலிமகாமுநிவன் அளவில்லாத வாநந்தமூறி மநத்தினிட மெல்லா நிரம்பி மேலே வழிகின்றதுபோல மார்பிற்பூசிய திருநீறு கரைந்திடப் பொழிகின்ற கண்ணீருள் நனைந்து இருகரங்களையுங்குவித்து நாதனைப்பாடத்தொடங்கி.

பராபரமுதலேபோற்றிபத்தியில்விளைவாய்போற்றி, சராசரமாகிவேறாய்நின்றதற்பரனேபோற்றி
கராசலவுரியாய்போற்றிகனகவம்பலத்துளாடு, நிராமயபரமானந்தநிருத்தனேபோற்றிபோற்றி.

ஒன்றாகியைந்தாயையைந்துருவாகிவருவாய்போற்றி,யின்றாகிச்சென்றநாளாயெதிர்நாளாயெழுவாய்போற்றி
நன்றாகித்தீயதாகிநடுவாகிமுடிவாய்மன்று,ணின்றாடும்பரமானந்தநிருத்தனேபோற்றிபோற்றி.

அடியரேம்பொருட்டுவெள்ளியம்பலத்தாடல்போற்றி, பொடியணிதடந்தோள்போற்றிபுரிசடைமகுடம்போற்றி
கடியவிழ்மலர்மென்கூந்தற்கயல்விழிபாகம்போற்றி, நெடியதற்பரமானந்தநிருத்தனேபோற்றிபோற்றி.

என்று இப்படித் தோத்திரஞ்செய்த இருவரையும் வெள்ளியம்பலத்தினிடத்து நடனஞ்செய்த சோமசுந்தரக்கடவுள் நோக்கிக்கிருபைகூர்ந்து உங்களுக்கு வேண்டியதென்னென்றுகேட்க அவர்கள கடவுளது திருவடியை வணங்கி எந்தையே இந்தத்திருநடனத்தை இவ்விடத்து என்றுஞ்செய்தருளியாவர்க்கும் பந்தபாசமறும்படி கிருபைசெய்ய வேண்டுமென ஐயன் கன்னிநாடு செய்த தவப்பேற்றை யடையும்படி அவ்வாறுதந்தனமென்ன பின்னும் பதஞ்சலிபகவான் எம்பெருமானே இந்தநிராமயபரமானந்த நிருத்ததரிசனத்தைக் கண்டவரெல்லாம் பூமியினிடத்துவந்து பிறவாமல் ஒப்பற்றமோக்ஷத்தையடையவேண்டுமென்று வணங்க பகவனும்அவ்வாறாகுகவென்றருளிச்செய்ய சிவகணங்கள் சந்தோஷமிகுதியால் ஆரவாரித்தார்கள் கைகோத் தாடினார்கள் தேவர்கள் மலர்மாரி பெய்தார்கள் முனிவர்கள் ஆநந்தக்கண்ணீர் பொழிந்தார்கள் சரீரம்மயிர்க்கூச்செறியப்பட்டார்கள். அவ்விருமுனிவரரையுந்தழுவிக்கொண்டார்கள் அநித்தியமாகிய பஞ்ச பூதமும் ஐம்பொறிகளும் ஐம்புலனும் இவைமுதலிய தத்துவ முப்பத்தாறும் மாயையும் இருவினைகளும் அஞ்ஞாநவிருளுமாகிய இவற்றிற்கு வேறாகித்தனித்தயோகிகள் உள்ளத்துப்பரிபூரணமாக நிறைந்து ஆடிய ஒப்பற்ற பெரிய நடனத்தைத் தரிசித்தவர்க்கு இகபரபோகங்களைக் கொடுத்து அம்மதுரையின்கண்ணுறைகின்றவனது நடனத்தை திருவாதிரைத்தினமுதல் பின்வருந் திருவாதிரைவரையில் பரிசுத்தமான பொற்றாமரைத்தீர்த்தத்தில் ஸ்நாநஞ்செய்து தரிசித்து அவ்விடத் தினிதாகவமர்ந்திருந்து நூற்றெட்டுதரம் பஞ்சாக்ஷரத்தை யெண்ணி யன்போடு அம்மதுரையில் வசிக்கின்றவர்கள் நினைத்தவரங்களையெல்லாம் பெறுவார்கள்.

வெள்ளியம்பலத்திருக்கூத்தாடியபடலம் - முற்றியது.



ஏழாவது

# குண்டோதரனுக்கு அன்னமிட்டபடலம்.

கலிநிலைத்துறை.

பன்னகேசனுமடுபுலிப்பாதனும்பணிய, மின்னுவார்சடைமன்னவன்வெள்ளிமன்றாடல்
சொன்னவாறிதுபசித்தழல்சுடவொருபூத, மன்னமாமலைதொலைத்தவாறெடுத்தினியறைவாம்.

தையர்முப்புரத்திட்டதீகடும்பசியுருவாய்ப், பொய்யனேன்வயிற்றிடைக்குடிபுகுந்ததோவென்னுங்
கையெறிந்திடுமண்டங்கள்வெடிபடக்கதறு, மையகோவெனுமுயிர்த்திடுமாவிசோர்ந்தயரும்.

கன்னியர்க்கரசாயுள்ளாகிய மீனாக்ஷிதேவி திருமணத்துக்காக தன்வீட்டின்கண் வந்த மின்னல்போன்ற சடையினை யுடைய மாதவர்கள் அந்தணர் மற்றவர்கள் எந்நிலங்களினுமுள்ள அரசர்கள்யாவர்க்கும் முறையே பொற்பாத்திரத்தால் ஆறுசுவைகளையுடைய போனகத்தையுண்பித்து பூசத்தக்கசந்தனமுதலியவும் உடுக்கத்தக்க பட்டாடைமுதலியவும் அணியத்தக்க ஆபரணமுதலியவும் தாம்பூலமும் மற்றுமுள்ளனவும் முறைப்படி கொடுத் துபசரித்து ஐம்பத்தாறு தேசத்தரசர்களும்மற்றவர்களும்செல்லுநாச்செல்லவிடுத்து இருக்குஞ்சமயத்தில்.

சமையற்றொழிலில் வல்லவர்கள்வந்து தேவியது திருவடியைவணங்கி அம்மணி அடியரோம்சமைத்த அன்னத்தில் ஆயிரத்திலொருபங்குஞ் செலவானதில்லை இனி யாங்கள்செய்யக்கடவதுயாதென பிராட்டியங்கனின்றெழுந்து கணவன்முன்னர்வந்துபணிந்து ஒருபக்கத்திலொதுங்கி நின்று சுவாமி தங்களோடு முப்பத்துமுக்கோடி தேவர்களும் இங்கெழு

ந்தருளுவாரென்பது கருதி பொருத்தமான இனிய சுவையோடுங்கூடிய அன்னம் அளவற்றதாக ஆக்கி உண்டுமிகுந்தது எவ்வளவென்றுசொல்லில் இமையமலைபோலும் அன்னமும் அதற்கமையச்சமைத்துக் கொட்டியகறிகள் அவ்விமையமலையை யடுத்துச் சூழ்ந்திருக்கும் சிகரங்களையுடைய மலைகளும்போன்றிருக்கின்றன என்று சொல்ல அதைக்கேட்ட எம்பிரான் தேவியாரிடத்துப்பொருந்திய அன்பினுல் ஒரு விளையாடலைச்செய்ய நினைத்தோ அன்றி தனக்குக் குடை பிடிக்கும் பூதகணத்தலைவனது ஆற்றலையாவருமறியும்படி செய்யவோ அறிந்தேமில்லை அம்மையைநோக்கிச்சிறிது புன்முறுவல்செய்து மூவேந்தரிற்சிறந்தபாண்டியனது பெருதற் கரியமகள் நீ அன்றியும் தேவருலகத்துள்ள பஞ்சதாருவும் நினது பணியைச்செய்யப்பெற்று இவ்விடத்திலிருக்கின்றது உனக்கு அருமையாப் பெறத்தக்கதுயாதுபிறருடையசெல்வங்களெல்லாம் நின்னதல்லவோ ஆதலால் அளவற்ற நின்செல்வத்தின் பெருமையை நாமறிய செய்வித்தாற்போலு மிருக்கின்றது நீசெய்வித்தவிருந்தினை யுண்ண நங்கணத்தினுள் பசியாற் களையடைந்தவராகி யொருவரையும் காணேம்முல்லையரும்பைப்போலும்தந்தங்களையுடையாய்அதற்கு யான் செய்யத்தக்க தென்னென்றார் பின்சமீபத்திலேநின்ற குண்டோதரன் வயிற்றினிடத்து வடவாக்கினி பிரவேசிக்க நினைத்தார் அது வயிற்றினிடத்துவந்து எரிபசியாகப் பொருந்தி விடமுண்டவனைப்போல உடல்சோர்ந்து வியர்த்து ஆவியொடுக்கமுற்று ஐயனே பசியினால் வருந்துகின்றே னென்றுன் அதைக்கேட்டசுவாமி அம்மையைப்பார்த்து குடைபிடிக்கும் இந்தக்குறியதாளையுடைய பூதத்துக்கு ஒரு பிடிசோறிடுங்கள் அப்புறஞ் சொல்லுகின்றேனென சுவாமியை வணங்கி நல்லதென்றுபோக பூதமும் உடனே தளர்ந்த நடையினை யுடையதாய் கண்கள் புகைந்து வாய்புலர்ந்திடப்போக இராஜகன்னிகையின் ஏவலினால் ஏவலர் அப்பசிநோய் கொண்டவனை இட்டுக்கொண்டுபோய் சோற்றுமலை முன்விட்டார்கள் விட்டவுடனே அப்பூதம் அச்சோற்றுமுன்னின்றதைக் கண்டார்கள் அதையெடுத்து உண்டதையும் அங்கிருந்தசோற்றையும் ஒருவருங்கண்டாரில்லை அதையறிந்த சில சேடியர் கைகளைநெரித்து அதிசயப்பட்டார்கள் சிலர் திகைகிட்டு மயங்கினார்கள் சிலர்கண்களைமூடிக்கொண்டு ஓடினார்கள் பின்பு அப்பூதம் நெய்முதலிய வற்றைப் போக்கி முனையொடியாமற் சமைத்த அன்னமும் பாற்கறியும் பொரிக்கறியும் இனியபயறினாற்செய்த கறியும் பின்னும் பலவகைக்கறிகளும், பாலும் தயிரும் நெய்யும் தேனும் ஆகிய அளவில்லாதனவற்றை மிடாக்களோடு எடுத்து வாயில் விட்டுண்டான் பின்னும் பலவகைப் பழக்குவியல்களும் பலவகைப்பலகாரங்களும் கரும்புகளும் தேங்காயும் இவைகளன்றி வேவாத அரிசிகாய்களின் வருக்கம் முதலிய வற்றையும் எடுத்துண்டு அளவற்ற நவதானியங்களையு மெடுத்து வாயிலிட்டுண்டான் இவ்வளவு மிகுதியான பொருள்களையும் தனது பருத்தகுறிய கையினால் வாரி தனதுபெரியவயிற்றி னிடத்திலிடவும் நெய்த்துடுப்பால் நெய்யையெடுத்துவிட்டு ஆகுதிபண்ணிய ஓமாக்கினியைப்போல மிகுந்து நவத்துவாரங்களிலும் தீபனக்கினி கொளுத்த அதைக் கண்ட அங்கயற்கண்ணி அதிசயமடைந்து தனதிடத்தன்புள்ள நாயகனுக்கு முன்னர்சென்று நாணத்தோடு விளங்காநின்ற மலர்களையுடையகுழலை தோளின்மீதிருத்தித் தளர்ந்து நிலத்தைக் காலாற்கிழித்துக்கொண்டு நின்றனள் சோமசுந்தரம் தேவியினது நிலைமையைக்கண்டு அறியாதவர்போல கேழ்க்கத்தொடங்கி நானனுப்பியபூதம் உண்டுமிகுந்ததுண்டாயிருக்குமானால் இன்னும் பூதங்களையனுப்பி உன்மனது சந்தோஷிக்கும்படி யுண்பிப்பேனென்று சொல்ல தேவி ஐயனே நீங்களனுப்புவித்த பூதத்துக்கு அங்குள்ள வெந்த பொருள்களையும் வேவாத பொருள்களையும் உண்டும் பசியடங்கவில்லை இன்னும் கொடியபூதவீரரை அனுப்புவீராகில் இவ்வுலகம் யாவையும் எடுத்து வயிற்றினிடத்து வைப்பாரோ ஆதலால் உமக்கு உகாந்தகால உருத்திரனென்னும் பெயர் தெளிவாகத் தோற்றுகின்றது என்று சொல்லிக்கொண்டிருக்கும்போது மூன்றும் பிறைபோன்ற பல்லினையும் குகைபோன்ற வாயினையுமுடைய பூதம் தீபனக்கினியானது தன்னைச்சுட அதனால் வருந்தி கடவுளுக்கு முன்பாகவந்து வெள்ளியம்பலத்தில் நடனஞ்செய்த சுந்தரக்கடவுளே எம்பிராட்டி சமைத்துவைத்திருந்த அன்னம் முதலியவைகள் இமையமலைகள்போலு மிருந்தன அதனையெடுத்து யானுண்டும் என்பசிதணிந்ததில்லை இரந்தவர்க்குக் கொடுத் துண்ணுதவர் வயிறுபோல் எரியுதென்று சொல்லி இழிந்தவர்களது திரிபுரத்திலிட்ட தீயானது மிகுந்தபசியுருவாகி அடியேனது வயிற்றினிடத்துக்குடியாகப் புகுந்ததோ வென்று கையோடு கையடித்து அண்டங்கள்வெடிபடக்கதறுவன் ஐயகோவென்று சொல்லுவன் பெருமூச்சுவிடுவன் உயிர்நீங்கியதுபோல் தளருவன்.

குண்டோதரனுக்கு அன்னமிட்டபடலம் - முற்றியது.

---

எட்டாவது

# அன்னக்குழியும் வையையுமழைத்தபடலம்.

## கலிநிலைத்துறை.

வேதநாயகன்பாரிடவேந்தனுக்கமையா, வோதனுதிகளருத்தியதன்மையீதுவையும்
போதராமையாலமைவுறப்போனகக்குழிதந், தோதமாநதியருத்தியசெய்தியுமுரைப்பாம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

தீர்த்தனிதழிச்சடைநின்றுமிழிந்துவரலாற்சிவகங்கை
தீர்த்தனுருவந்தெளிவோர்க்குஞானந்தரலாற்சிவஞான
தீர்த்தங்காலிற்கடுகிவருஞ்செய்தியாலேவேகவதி
தீர்த்தங்கிருதமாலையெனவையைநாமஞ்செப்புவரால்.

இடபவாகனத்தையுடைய சோமசுந்தரக்கடவுள்பின்பு பிராட்டியாரைப்பார்த்து உள்ளேநகைத்து மிகுந்தபசியையுடைய குண்டோதரன் பொருட்டு அன்னத்தைத்தருகின்ற புவனமாதைத் தன்னுள்ளத்தினினைத்தனன் அவள் நினைக்குமுன்வந்து நான்கு பெரியதிசைகளிலும் உள்ளதயிர்க்கடலும் மத்தியில் பூமியைக்கிழித்துக்கொண்டு ஊற்றாக நான்குகிடங்காகி யெழுந்ததுபோல மாறுபடுதலில்லாத சுவையினையுடைய வினியதயிரும் வெள்ளியநெற்சாதமும் நாலுகுழியிடத்திலும் பொங்கி மேலெழுந்தது சிறந்த சந்திரகுலத்திற்பிறந்த பாண்டியன் மருமகனாகிய சோமசுந்தரபாண்டியன் அந்தப்பெருவயிற்றினையுடை பூதத்தைப்பார்த்து உன்பசிதணிய உண்ணென்றுத்தரவுசெய்ய அப்பூதத்தலைவன் அந்தத்தயிர்க்கிடங்கரில் அலைகடல்கலக்குமத்தென தனது கைகளை யுள்ளேவிட்டு எடுத்தெடுத்து வாயிலிட்டு உண்டிட வேதநாயகனது திருவடியிற் பத்திவைத்து வீட்டை யடைந்தவர்கள் பழவினைத்தொடர்போயதுபோல பசிநீங்கி அவ்வன்னத்தை யெடுத்தெடுத்து ஒழியாமல் வாயிலிட்டுண்டதால் உடம்பெல்லாம் வயிறாகி வீங்கினன் பூமிகிழியும்படி மலைபோல விழுந்தான் மூச்சுவிடப்படாமல் நிலத்திற்புரண்டனனாகி தாகத்தின்பொருட்டு நீரைவிரும்பி அவ்வூரில் நீருள்ள குளம் ஏரிகளைத்தேடுவானாகி யெழுந்து தம்முயிரையொத்த கணவரைப்பிரிந்த பெண்கள் போல அன்றுமலர்ந்த நீலோற்பலமலர்களும் தாமரைமலர்களும் வாடும்படி தடாகங்களும் ஏரிகளும் குளங்களும் வறள வாயைவைத்து கிணற்றுகளிலுள்ள நீர்களும் பசையறக்குடித்தும் தாகத்தைச்சயிக்கக்கூடாதவனாய் வருந்தி கங்கையைச் சடையிலேயுடைய வேதியனது பாதத்தைக்கருதியிரங்க நாதனும் தனது திருமுடியின்கணுள்ள கங்கையைப் பார்த்து நிறைந்த நீரலைகளை மாலிகையாவுடைய கங்கையே நீயிந்தஅகழியாற்சூழப்பட்ட மதிலையுடைய மதுரையினிடத்து மிகுந்த நீர்ப்பெருக்கையுடைய ஆறாகச்சீக்கிரமாக வரக்கடவாயென்றுரைக்க உடனே அக்கங்கையானவள் சடையைவிட்டு நீங்கியொருவார்த்தை சொல்லத் தொடங்கினாள். என்னெனில் முன்னொரு காலத்தில் பகிரதன் பொருட்டு ஒருதீர்த்தமாய்ச்சென்று அதில் மூழ்குகின்றவர்கள் குற்றம்பொருந்திய தீவினைத்தொடக்கறுத்துச் செல்லென்றுபணித்தாய் இன்றும் ஒருநதியாகெனச் சொல்லுவாயானால் என்னைத் தரிசித்தவர்களும் மூழ்கினவர்களும் கையாலேனும் பரிசித்தோர்களும் பவத்தொடர்ச்சியின் பற்றுவிட்டு உன்னிடத்துப்பத்தியும் கல்வியும் ஞானமும் வீடும் பெறும்படி பணித்தருளக்கடவாயென்று சோமசுந்தரக்கடவுளிடத்து வரம்பெற்றுக்கொண்டு அவரைவணங்கி மிகுந்த வேகமோடெழுந்து பெரியநதியாக ஆகாயத்தினின்று மிழிபவளாமென வரத்தொடங்கினாள்.

மகமேருவைவில்லாக வளைத்த சிவனதுமுடியின்கணுள்ள கங்கையானவள் வளைந்த அலைகளாகியகையையும் முத்துகளாகிய தந்தங்களையும் நுரைகளாகிய வஸ்திரத்தையும் கொடியாகிய மருங்கினையும் கருமணலாகிய அளகத்தையும் சேல்களாகிய விழிகளையும் பெற்று வருபவள் வாசனைபொருந்திய அகில் விருக்ஷங்களையும் பொரியரையினையுடைய வேங்கைமரங்களையும் பிரகாசத்தையுமிழாநின்ற இரத்தினங்களையுடைய மலைகளோடு அரைபடவும் பெரியகிளைகளலறிடவும் அடியோடுவிரைவில் அகழ்ந்து சத்திக்கின்ற செருப்புக்காலினையுடைய குறிஞ்சிநிலமாக்களது சிறியவூர்களை அடியோடுபறித்து கரைகளிற் படும்படியெறிந்து காற்றைப்போல மிகுந்தவிசையோடுவந்துபெட்டைமானோடு ஆண்மான்களையும் பெண்யானைகளோடு ஆண்யானைகளையும்வாரிக்கொண்டு பிரிவில்லாத ஒடுமரக்காடுகளை அடி

யோடு பேர்த்து கருங்குரங்குகள் வயிற்றிலணைத்த குட்டிகளோடு தங்களைத்தழுவிய ஆண்குரங்குகளையும் அவைகள் வாசம்பண்ணுகின்ற மரக்கூட்டங்களோடும் குறிஞ்சி நிலமாக்களது கொடியகணைகளோடு வில்லுகளையும் தினைப்புனப் பரணோடுகவண்களையும் வாரிக்கொண்டு வராநிற்கும் அவ்வாற்றின தலைகள் நெடியமலைகளை அடியறும்படி மோதுகின்றன அவற்றையகழ்கின்றன. பள்ளமான மடுவை மேடாக்குவன கிளைகளையுடைய மரநிரைகளை தலைகீழாக இடிகரைதோறு நடுவன கடலி னோரத்திலுள்ள பெரியபூமியை யிருபிளவுபடவருவன மிகுந்தவொலியினையுடையன பெரியமரங்களைத் தோண்டுகின்ற மிகுந்தவலியினையுடையன வயிரமில்லாதமரங்களை முறிப்பன இரத்தினங்களையெடுத்து வீசுவன வேகமாகச் செல்லுகின்றன யானைமதங்களோடு வண்டுகளையீர்த்துச் செல்லுவன நுரைகளாகிய முகபடாத்தையுடையனவாகியும் வருதலினால் அவ்வாறு யானையை யொத்திருந்தது.

நீண்டபிலத்திலே செல்லுகின்ற நிலைமையையுடையனவாயும் நிருமலனாகிய பரமசிவனது மதிதங்கிய திருமுடியின்மீது ஆடுகின்ற செயலினையுடையனவாயும் பிரகாசத்தை யுமிழாநின்ற அரியமாணிக்கங்களைத் தன்தலையிலுடையனவாயும் நீண்டுவளைந்த நடையினையுடையனவாயும்நிரைநிரையானகுறுகிய பலகால்களினாலோடுகின்ற வலியினையுடையனவாயுமிருத்தலால் வளைந்தவுடலையுடைய பாம்பென்றுசொல்லும்படியாகவும் வராநிற்கும் இவ்வாறுவருமந்நதியானது கல்வித்தேர்ச்சி யில்லாதவர் செய்தகவிபோல்கலங்கி கல்விகேள்வியில்வல்லவர்கள் செய்தகவிபோல் பலசிறப்பாகிய துறைகள் தோன்றப் பொருந்தி செல்லுகின்ற வழிகள்தோறும் பொருளாழ்ந்துதெளிந்துதேயத்திலுள்ள யாவரும் விரும்பி அப்பயனைக் கொள்ளும்படி தங்கிற்று.

வண்டுகளது ஒலிநீங்காத மலர்களையுடைய சடையினின்றும்வந்தநதியை சோமசுந்தரக்கடவுள்கண்டு பிளவுபட்டவாயைத் திறந்துகொண்டு என்விடாய் தணிந்தே னில்லையென வெம்பி வீழ்ந்தகுண்டோதரனை அவ்வாற்றினிடத்துவிட அவன் அவ்வாற்றையடுத்து அதனுள்ளிறங்கி வலியோடுந் தனதிரண்டு கைகளையுந் தூக்கிக் கரைகளிலேற நீட்டியோடும் புனலைத் தடுத்து மலைபோலுயரும் புனலை வாயைத் திறந்து தன்தாகவிடாயும் மேகமும் வெட்க உண்டமகிழ்ச்சிகொண்டு பரமசிவன் திருமுன்னர் வந்து அவரது திருவடியை வணங்கி கூத்தாடிப்பாடி ஆரவாரித்து அளவற்றகீதங்களைப்பாடினான் பாட்டின் பொருளானவன் அப்பாரிட வீரனது பாடலைக்கேட்டு மகிழ்ந்து அவ்வையைநதியாற் சூழப்பட்ட மதுரையை யரசாண்டிருந்தனன் பரமசிவனது வேணியினின்றும் வந்ததால் அந்நதிக்குச் சிவகங்கையென்றும் அக்கடவுள துருவந் தெளிந்தோர்க்கு ஞாநந்தரலால் சிவஞான தீர்த்தமென்றும் காற்றைப்பார்க்கிலும் வேகமாக்வருதலால் வேகவதியென்றும் கிருதமாலையென்றும் பெயராகும்.

அன்னக்குழியும் வைய்யையுமழைத்தபடலம் - முற்றியது.

---

ஒன்பதாவது

## எழுகடலழைத்தபடலம்.

### கொச்சகக்கலிப்பா.

முடங்கன்மதிமுடிமறைத்தமுடித்தென்னன்குறட்கன்னக்
கிடங்கரொடுநதியழைத்தகிளர்கருணைத்திறனிதுமேன்
மடங்கல்வலிகவர்ந்தான்பொன்மாலைபடிந்தாடவெழு
தடங்கடலுமொருங்கழைத்ததன்மைதனைச்சாற்றுவாம்.

தன்வண்ணமெழுகடலின்றனிவண்ணமோடுகலந்து
பொன்வண்ணநறும்பொகுட்டுப்பூம்பொய்கைபொலிவெய்தி
மின்வண்ணச்சடைதாழவெள்ளிமணிமன்றுடு
மன்வண்ணமெனவெட்டுவண்ணமொடும்வயங்கியதால்.

சொல்லுதற்கரிய பரம்பொருளானவர் பாண்டியனுருவமாகி உலகமெல்லாந் தனது வெண்கொற்றக்குடையின் நிழலிலிருந்து செங்கோல்செலுத்துநாளில் மெய்ஞ்ஞானமாகிய அரும்பொருளையுணர்ந்த இருடிகளும் முனிவர்களும் வரன்முறையாகச் சந்தித்துவரும்போது வேதமுநிவனாகிய கௌதமனும் வந்துகண்டு திரும்பிப்போகுங்காலையில் கற்பினையுடைய காஞ்சனமாலை யரண்மனைபிற்புகுந்தான் அப்பொழுது காஞ்சனமாலை அவரதுவரவையேற்று உபசாரமொழிகளைச்சொல்லி பொன்னுசனமிட்டு வணங்கி அவரைநோக்கி ஐம்பொறிகளையும் ஜயித்து அளவுபடாத நான்குவேதத்தின்முடியில் விளங்காநின்றபொருள் பரமசிவமென்றறிந்த சுவாமிகளே நீக்குதற்கரிய பிறவித்துன்பத்தை நீக்குதற்குக் காரணமானதவத்தை அடியாளுக்கு அனுக்கிரகம் பண்ணவேண்டுமென கருணைக்கடலாகிய முநிசிகாமணியானவர் காஞ்சனமாலையை நோக்கி அம்மா நீ செய்ததபோபலத்தினாலே இவ்வுலகத்தையெல்லாம்பெற்று வளர்த்த தடாதகைப்பிராட்டியாருக்குத் தாயானாய் பரமசிவமே உனக்கு மருமகனாகுஞ் சிறப்பைப்பெற்றாய் வெற்றியையுடைய மலையத்துவசபாண்டியனுக்கு மனைவியானாய் இப்படிப்பட்ட நீயறியாததவம் இவ்வுலகத்தில் யாரறிவார் ஆயினும் சொல்லுகிறேன்கேள்.

மானதமென்றும் வாசிகமென்றும் காயிகமென்றும் குற்றமற்ற தவங்கள் மூன்றும் இவற்றுள்மானதமாவது தருமஞ்செய்தலினும் தானஞ்செய்தலினும் மனம்வைத்தலும் தயை பொறுமை உண்மை சிவனைத்தியானித்தல் பஞ்சவிந்திரியங்களை யடக்குதல் முதலிய அனந்தமாம் இவைகளை மனத்தாற்செய்தலாம். வாசிகமாவது பஞ்சாக்ஷரத்தைஓதல் தருமநூலோதல் பஞ்சசாந்தி ஓதல் வேதஞ்சொல்லும் சதவுருத்திரந் தோத்திரஞ்செய்தல் பெரியதருமங்களைக் குற்றமறவெடுத்தோதல் முதலநந்தம் இவை வாக்காற்செய்தல். காயிகமாவது பரமசிவனை யருச்சனைசெய்தல் ஆலயத்தை வலஞ்செய்தல் எதிரிநின்று வணங்குதல் கடவுள் வாழாநின்ற பலதிருப்பதிகளைப்போய் வணங்குதல் திருப்பணிசெய்தல் கங்கைமுதலிய தீர்த்தயாத்திரைசெய்தல் இவைமுதலிய பல இவைகாயத்தாற்செய்தல். இம்மூன்றில் காயிகமே சிறந்தது இப்புண்ணியங்களுக்குள் தீர்த்தயாத்திரையே யதிகம் அவற்றினும் கங்கைமுதலிய தீர்த்தங்களில் தனித்தனியாகப்போய் ஸ்நானஞ்செய்தலதிகம் இவற்றினும் இந்நதிகளெல்லாம் வந்துசேரும் சமுத்திரஸ்நாந மதிகம் என்று முநிவர்சொல்ல காஞ்சனமாலை சமுத்திரஸ்நானஞ் செய்யத்துணிந்து தன்மகளாகிய தடாதகைப்பிராட்டியாருக்குரைக்க அப்பாண்டியர் தவக்கொழுந்தாகிய அங்கயற்கண்ணியம்மாள் இதுசெய்தியை இறைவனுக்குச் சொல்லுவேனென்று சென்று பெருந்தகையாகிய அரசர்பெருமான் திருமுன்னர் அன்னம்போல்நின்று அன்று குண்டோதரனுக்கு அன்னக்குழியையும் ஆற்றையுமழைத்த கிருபாசாகரமே என்தாய் இப்பொழுது கடலாடவிரும்பினளென்று சொல்லியிரந்தாள் கடவுள் தன்றேவியின் திருமொழியைக் கேட்டு கடலொன்றோ எழுகடலையும் இம்மதுரையுள் வரும்படி கூவியழைப்போமென்றுசொல்லி அவற்றை நினைத்தார் உடனே யம்மதுரைக்குக் கீழ்த்திசையில் ஒருகுளத்தில் எழுவகைப்பட்ட நிறத்தோடு சுரிந்த முகத்தினையுடைய சங்கங்கள் வாய்திறந்தொலிக்கவும் வெள்ளியநுரைகள்ததும்ப சுருமச்சங்கள்பாய முத்துகளையெடுத்தெறியும் நிரையான அலைகள் அண்டமுகடுவரையிலெழும்ப எழுகடலும்ஆரவாரித்தெழுந்து அவற்றைக்காணும்அந்நகரிலுள்ளார்நடுங்க கலியுகமுடிவில் பிரமாவின்படைப்புமாறும்படி யெழுந்ததெனக் கொதித்தெழுந்த கடலானது சர்ப்பாபரணனாகிய பரமசிவனது ஆஞ்ஞையால் அவனடிகளைச்சென்றடைந்தவர்கள் அடங்கியதுபோல் அடங்கிற்று பொற்றாமரைத்தீர்த்தமானது தன்னிறம் எழுகடலினது ஒப்பற்ற நிறத்தோடுகலந்து பொலிவுபெற்று மின்னிறம் பொருந்திய சடையானதுதாழவெள்ளியம்பலத்துணடனஞ்செய்யும் பரமசிவனது நிறத்தைப்போல எட்டுவண்ணத்தோடு விளங்கிற்று.

எழுகடலழைத்தபடலம் - முற்றியது.



பத்தாவது

## மலயத்துவசனையழைத்தபடலம்.

### கலிவிருத்தம்.

எழுகடலழைத்தவாறியம்பினமினிச், செழுமதிமரபினோன்சேணிழிந்துதன்
பழுதில்கற்பில்லொடும்பரவைதோய்ந்தர, னழகியதிருவுருவடைந்ததோதுவாம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

தென்னர்மரபிறந்ததெனப்படுபழியிலாழவருஞ்செவ்விநோக்கிப்
பொன்னவிர்தார்முடிபுனைந்துகோலோச்சிவருகின்றாய்போலுமேலு
மின்கிலைமைக்கிடையூறுமினியின்றேயெனத்தலைவியியம்பலோடுங்
தன்னிறைவியுட்கோளையகங்கொண்டுமகிழ்ந்திருந்தான்றமிழர்கோமான்.

சோமசுந்தரபாண்டியன் தடாதகைப் பிராட்
டியாரோடும்வந்து அவ்வெழுகடலின் பக்கத்திலுள்
ள சந்தனம் மரவம் மந்தாரம் மா வகுளம் பாடல
ம் இவைகள் கலந்துள்ள நந்தன வனத்தில் ஒரு சி
ம்மாசனத்தின்மீது எழுந்தருளி யிருந்து முறுக்கு
டைந்த மல்லிகை முல்லை சண்பகம் இம்மலர்களை
இளையரும் சேடியர்களும் கொய்துகொடுக்க அவை
களைவாங்கிமோந்து ஆசைவேறுபாடின்றி யிருக்குங்
காலத்தில் சுந்தரபாண்டியர் தன் காதலியைநோக்கி
உன்பொருட்டாக ஏழுகடலையும் இந்நகரின்கண்
ணழைத்தனம் நின்னன்னையை இவ்விடத்துவந்து
ஸ்நாநஞ்செய்ய அழையாயென தடாதகைப்பிராட்
டியாரும் போய் தாயைக்கொணர்ந்து குளத்தினிட
த்துவர காஞ்சனமாலை புராணநூல்தேர்ந்த முனிவர்
களை நோக்கிச் சமுத்திரஸ்நாநஞ்செய்யும் விதியா
தென குற்றமற்றகற்பினை யுடையாய் நாயகன்கைத்
தலத்தைப் பிடித்துக் கொண்டாவது இல்லையேல்
பிள்ளையின்கைத்தலத்தைப் பிடித்துக் கொண்டாவ
து அதுவுமில்லையேல் பசுவின்கன்றின் வாலைப்பற்
றிக்கொண்டாவது சமுத்திரஸ்நாநஞ் செய்தல் மு
றைமையென அம்முனிவரது வாய்மையைக் கேட்ட
காஞ்சனமாலை முற்பிறப்பில் குறைவறத் தவஞ்செ
ய்யாத கொடியபாவியாகிய எனக்கு கொழுநனும்
குமரனுமில்லையே இனிபெற்றுமூழ்குவது பசுவின்
கன்றாலால் வேறுண்டோவென்று தடாதகையைப்
பார்த்துச்சொல்ல பிரமபதத்தையும் விரும்பினவர்
க்குக் கொடுக்கும் நாதனதுயிர்த்துணையாகும் நாய
கி தன்னுயிர்க்கிழவனாகிய பரமசிவத்தை யடைந்து
வணங்கி தன்னன்னையின் குறைமொழியைச் சொல்
ல மன்னவன் இந்திரனோடுகூட விருக்கின்ற மலையத்
துவஜபாண்டியனை தன்மனத்தில் நினைக்க அப்பாண்
டியன் மகமேருவை வில்லாக வுடையவரது திருவு
ள்ளத்தையுணர்ந்து சிறையையுடைய மலைகளையெ
ல்லாம் அட்டவனாகிய இந்திரனது ஆசனத்தைவிட்
டு தேவவிமானத்தின்மீது எழுகடலினிடத்து கிரு
பையையுடைய இனியவமுதம்போன்ற பரமசிவத்
தை பெண்பேற்றினாலே கண்பேறடையும்படி யெதி
ராகக்கண்டு மருமகனாகிய கடவுளைவணங்கும் பொ
ருட்டு வருமுன்னேமாமனென்னுமுறையால் தனது
தாமரைபோன்ற கையைபமைத்து பெண்கொடுத்த
பாண்டியனை எதிராகத்தழுவிக்கொண்டு திருவுள்ள
மகிழ்ந்து கிருபையோடுபார்த்து உன்மாட்டன்பு
ள்ளபத்தினியோடு கடலாடச்செல்கவென மலையத்
துவஜபாண்டியனும் முற்பிறப்பிற்செய்த தவத்தாற்
பெற்ற பெண்ணன்னம்போலு மீனாட்சிதேவியான
வள் எதிரேவந்து தன்னைத்தழுவ தானுந்தழுவி
இமோர்ப்பருவத ராஜனைப்போல குறைவற்ற ம
கிழ்ச்சியை யடைந்து குளிர்ந்த தேன்போலுஞ்
சொல்லையுடைய வுனது திருக்கலியாணத்தைக்கா
ண தவஞ்செய்தேனல்லனென்னுந் துக்கமுண்டா
யிருந்தது அது இந்தச்சந்தோஷமென்கிற தேனை
வண்டைப்போலவுண்டு மறந்தேனென்றான் அப்
பொழுது நிறைந்த கற்பினையுடைய காஞ்சனமாலை
தூரத்திற்சென்றதன்நாயகன் சிலநாள்சென்றுவரக்
கண்டவள்போல நாணுற்று எதிராகவந்து வணங்
கி மேகம்போன்ற அளகத்தையுடைய காஞ்சனமா
லை பவுத்திரத்தை யுடையவளாய் பஞ்சாக்ஷரத்தை
யோதி முனிவரது வேதநூற் சங்கற்ப விதிப்படி தன்
றுணைவனது கையைத் தன்கையாற்பற்றி மனக்களி
ப்போடு ஏழுகடலினும் ஸ்நாநஞ்செய்தாள் செய்து
கரையேறி கொன்றைப்பூவைமுடியிலே தரித்த பரம
சிவனது கிருபானோக்கம்பெற்று இனி அனைமாருத
ரங்குருகாதவண்ணம் உமைபாகரது அருட்படிவத்
தை யடைந்தார் அடைந்த மாத்திரத்தில்காளகண்
டமும் சதுர்ப்புயமும் நெற்றிக் கண்ணும்பெற்று
பூவுலகத்தார்கண்டு அதிசயிக்கவிளங்கினான் அப்பொ
ழுது ஆகாயத்தினின்றும் வழுக்கிவிழுந்த சூரியனை
ப்போல பரமசிவன் வாழாநின்ற உலகத்தினின்றும்
பூமியின்கண் ஒருதெய்வவிமானம் இறங்கிஇருந்தது
அந்தத் தெய்வவிமானம் வந்தவுடனே மும்மூர்த்தி
ஸ்வரூபராகிய சிவனது பணியால் பாண்டியன் ந
ங்கையொடும் தேவர்கள்தொழ விமானமீதேறினான்
அக்காலத்தில் தேவர்கள் பூமாரி பொழிந்தார்கள்
தேவதுந்துபி மேகம்போல முழங்கிற்று அப்பொ
ழுது விமானம் ஆகாயத்திலெழுந்தது தேவதுந்து
பிகள் ஒலித்தன ஹர ஹர வென்னுமொலியெங்கு
மொலித்தன தொழுகின்ற தகையினையுடையமுனிவர்
களேத்த தேவர்கள் வணங்க சிவனதுகைலாயத்தை
நோக்கிச்செல்லுகின்ற அவ்விருவரும் முன்பு தன
துபாண்டியவுருவமாயிருந்தது உலகத்தை முறையா
கச் செங்கோல்கைக்கொண்டு பின்பு தன்னுருவந்
தைத்தந்த மருமகனும் மகளாகிய தடாதகைப்பிரா
ட்டியாரும் மீண்டு பொன்னாற்செய்தகுடுமியினையு
டைய அரண்மனையிற்புகுந்து இருக்கக்கண்டார்கள்
பழவினையால் சரீரமுறைதப்பி பிறவியை யடைந்
தமனிதர்போல பழயவுருவமாறி உலகமாதாவாகிய
அன்னையே மகளாகவும் பெற்ற அப்பனே மருமக
னாகவும் யான் யாவருக்குஞ் செய்தற்கரிய தவந்தா
னென்ன செய்தேனென்று சொல்லி கன்றைவிட்டு
ப்பிரிந்த பசுவைப்போல ஐயனது சத்திக்கின்ற வீ
ரகண்டாமணிபொருந்திய திருவடியைவிடாதுபற்றி
பொருந்திய அன்பானது பின்னின்று ஈர்க்க மனத்

தோடு இரண்டுகண்களும் சென்றுமுட்டி அடிக்கடி திரும்பிப்பார்த்துக்கொண்டு மலையையொத்த இந்திரவிமானத்தைக்கும்பிட்டுக்கொண்டுசெல்வாராயினர் புவலோகங் கடந்துபோய் புண்ணியருக் களவற்ற போகத்தை யுண்பிக்கின்ற சுவலோகங்கடந்து போய் மகாலோகம் சனலோகம் கடந்து அதற்குமேலுள்ள தவலோகங்கடந்து சத்தியலோகங்கடந்துதண்ணிய துளபமாலையை யுடையோனது நவலோகங் கடந்து உலகங்களுக்குநாயகமாகிய சிவலோகத்தை யடைந்தார் பின்பு அறக்கொடியாகிய தடாதகை இறைவனுகிய அரசனை அடிவணங்கி தன்னைப்பெற்றவர்களுக்கு வேதப்பொருளினது வடிவையளித்த கிருபையினாலே மனத்தின்கண்ணடங்காத மகிழ்ச்சியானதுவாய்கொள்ளாமற் புறப்படுவதென இரண்டு திருச்செவிக்கும் செங்குமுதத்திற்பொதிந்த தீந்தேனை நிறைவிப்பதுபோல பலமுறையால் துதிசெய்துவணங்கியொன்றுசொல்லத்தொடங்கினாள். அளவற்ற தேவர்க்கும் மற்றயாவர்க்கும் பாலைச்சுரந்தளிக்கின்ற தேவர்களது நாட்டிலுள்ள புண்ணியகாமதேனுவின் இளங்கன்றுக்குக்குறைவேது என்னிமித்தம் என்னைப்பெற்றதாய்விரும்பியது ஒருசடலே இந்நகரத்தின்கண் ஏழுகடலையும் வரவழைத்தாய்என்னைப்பெற்றவள் ஸ்நாநஞ்செய்யும்பொருட்டு தேவருலகத்திலிருந்த அவள் கணவனையும் அழைத்து உனது வடிவத்தைக்கொடுத்து மேலான மோக்ஷவுலகத்தையுந்தந்தாய் அன்றியும் பாண்டியரதுமரபு அழிந்ததென்னும் பழியுண்டாகாமல் பொன்போலும் விளங்காநின்ற மலரைச்சூடிய முடியைத்தரித்து செங்கோல் நடத்திவருகின்றாய் இனிமேலும் இந்நிலைமைக்கிடையூறுமில்லையன்றோ வெனத்தலைவியி யம்ப கடவுள் தன்னிறைவி யுட்கருத்தை மநதிற்கொண்டு மகிழ்ந்திருந்தனர்.

மலயத்துவசனையழைத்தபடலம் - முற்றியது.



பதினோராவது

## உக்கிரபாண்டியன்திருவவதாரப்படலம்.

### கலிநிலைத்துறை.

மன்னவன்குலசேகரன்றிருமகன்மனைவி, தன்னெடுங்கடலாடியதகுதியீதந்தத்
தென்னவன்றனித்திருமகடிருவுளங்களிப்ப, உன்னருந்திரலுக்கிரனுதித்தவாறுரைப்பாம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

என்றிவையாதியாயவியற்குணமுடையனாகி, நன்றிசெய்துலகுக்கெல்லாநாயகனொருவனாகி
நின்றிடுமிவற்குப்பின்னர்நீண்முடிகவித்துமுன்னர், மன்றல்செய்கென்றுசூழ்ந்துமதிஞரோடுசாவினனே.

சந்திரசூடனாகிய சுந்தரசுவாமி உலகத்தினிடத்து அளவில்லாதநாள் தன்னுடைய திருவடிநீழல் போல யாவருக்கும் குளிர்ச்சிபொருந்திய சந்திரன் போன்ற கொற்றக்குடையினது நீழலைச்செய்து அருளோடு செங்கோல்நடாத்தி உள்ளேவிளங்குமுயிர்தானாகி முறைசெய்து நடந்துவருநாளில் திருமாலும் பிரமனும்வேதமுதலிய சாஸ்திரங்களாலுங்காணுதற்கரியவனும் அன்பர்க்கெளியவனுமாக விருக்கும்பெருமை யாவர்க்குந்தெரிய விருந்தவன்பினைக்கொண்டசிந்தையினையுடைய மலயத்துவஜபாண்டியனுக்கும் அவன்மனைவியாகிய காஞ்சனமாலைக்கும் ஆசைக்குரிய மகளென வுண்மையைத்தந்து அதற்குப்பொருந்ததாலும் மருமகனாகி உலகமுழுதுந்தன்வெண்கொற்றக்குடைக்கீழடங்கியிருக்க முறைசெய்து மூன்றரசர்களுக்குள் சந்திரகுலமாகிய பாண்டியர்குடிபெருமையை யடையச்செய்ததுபோல இன்னும் பெறத்தக்கதாகிய ஓர்குறைவைத்தீர்க்கும்பொருட்டு சோமசுந்தரக்கடவுள்.

ஒன்றினைச்செய்கைசெய்யாதொழிகைவேறென்றுசெய்கை, யென்றிவையுடையோனாகியீறிலாப்பரமயோ
நன்றுதீதிகழ்ச்சிவேட்கைநட்பிகல்வினைக்குமாயை, வென்றவன்செய்யுமாயைவிருத்தியாரளக்கவல்லார்.[கி

இந்திரஜாலவித்தை காட்டுவான்போல தன்னிடத்து அக்கினிக்கண்ணினின்று முற்பவித்தவீரபத்திரக்கடவுளை கருப்பமடையாது அளவற்றவுயிர்களையும் உலகத்தையும் பெற்றெடுத்த தாயாகியசுந்தரவல்லி தன்னிடத்துத்தோன்றும்படி சிந்தித்தார் அப்பொழுது அவ்வீரபத்திரக்கடவுளினது வரவுக்

கேற்ப சேடியர்களும் மற்றவர்களும் அம்மையைவ ணங்கி தேவியேநின் உருவத்திற்குத்தக்கபடி கருவுருவனப்பும் சிறப்பும் மாதந்தோறுஞ்செம்யும்மண வினையும் யாங்கள்காண ஆசைமிகுதியுமுடையேம் என்றார்கள்; தேவி யவ்வாறேயாகி கரிய மணிகளாகிய சிகரத்தையுடைய பொன்மலைபோலுந் தோற்றத்தினையுடையதிருமுலைகள் அமுதநிரப்பிய இரண்டு செப்பினையொத்ததாக அத்திருமுலைகளைச் சுமந்துதேய்ந்த மருங்குலுமுண்டென்று தோன்ற அருண்மூதிர்ந்தாற்போன்ற நாவினுக்கு இனிய சுவைகளையுடைய வுணவுகளை யுண்ணவேண்டு மென்னும் ஆசைமிக அவ்வாசையறிந்த கணங்கள் அம்மைவிரும்பிய போகபூமியமுதும் நாகலோகவமுதும்பொன்னகரமுதும் விருப்பமடங்கக்கொண்டுவந்து கொடுத்தார்கள். புண்ணியத்தையுடைய முனிவர்களும் வேத பாராயணராகிய பண்டிதர்களும் வந்து அரசனுக்கு செய்யப்பொருந்திய சடங்குகளை அம்மதுரைமூதூர் கலியாணவெள்ளத்திலே மூழ்க மாதந்தோறும்செய்விக்க அக்கன்னிநாடானது செய்தபுண்ணியத்தால் உண்டாகிய பயனை அடையவும் அறந்தவரது உள்ளத்திலுள்ளகளங்கநீங்கவும் சோமவாரமும் திருவாதிரைநட்சத்திரமும் செய்த சிவபூசையின்பயனையடைய வியாழபகவானாகிய குருவந்து அழகாக கேந்திரமேறிநிற்கும் நல்லலக்கினம்வாய்ப்ப நான்குவேதங்களும் தாமேமுழங்க தேவர்கள் மந்தாரமலர்மாரிபொழிய திசைகள்தோறும் தேவமாதர்கள்நடனஞ்செய்ய தேவதுந்துபியைந்தும்சத்திக்க துர்க்கையும் இலக்குமியும் நாமகளும் செருக்கடைய அந்தணர்மகிழ்ச்சிமிக முனிவர்கள் வளர்க்குமுன்னர் மந்திரத்தையுடைய யாகாக்கினி தானே வலஞ்சுழித்தெழுந்தாரவாரித்தாட அட்டதிக்குயானைகளும் ஆதிசேடனும் பாரத்தினாலுண்டாகிய இளைப்புநீங்க இந்திரன் மகமேருவாகிய தெய்வம்வருணன் இவர்களுக்கிடதுதோள்துடிக்க பரமசிவனும் உமையுங்கொண்ட கோலத்துக்கேற்ப குழந்தையானது உதயசூரியனைப்போலவும் அக்காலத்துதித்த குமரவேளைப்போலவும் வேப்பமாலையையுடையபாண்டியன்செல்வபுத்திரியாகிய தடாதகைப்பிராட்டியாரிடத்திற் றோன்றியது தோன்றியவுடனே எம்பிராட்டி அப்பிள்ளையையெடுத்து உச்சிமோந்துமார்போடுதழுவி தன்னையகன்கையிற் கொடுத்து மீண்டும்வாங்கி தன் திருமுலைப்பாலாகிய வெள்ளத்தை குமுதம் போன்றவாயில் விடுத்துண்பித்தாள் அவ்வாறுவளருங்காலத்தில்.

திருமாலும் இந்திரனும் பிரமனும் முதலிய தேவர்களும் முனிவர்களும் மற்றவர்களும் தத்தம்பத்தினிகளோடும் அரசனரண்மனைக்கு வந்தார்கள் சேரனும் சோழனும் வடக்கின்கண்ணுள்ள அரசர்களும் குறுநிலமன்னரும் தங்கள் சேனைகள் சூழ கடல்கள்பொங்கி வருவதுபோல் வந்தனர் அவர்கள் வந்து அரசனையும் தேவியையும் முறையால் வழுத்தி வாழ்த்திமானையுமழுவையும் நீத்தபாண்டியனும் தேவியுமாகிய இவர்களது திருமுகக்கருணைபெற்று அவர்களது திருவடியைவணங்கித் தம்மூர் செல்லும் அவர்களிற்சிலர் பாண்டியர்களுக்கெல்லாம்பெருமானாகிய இவரிடத்து கந்தனேவந்தா னென்பார் சிலர் குற்றமற்ற கற்பினையுடையாளது பாக்கியமென்பார் சிலர் இவனது அழகினால் மன்மதனும் பெண்மையைவிரும்புவானென்பார் சிலர் இவன்செங்கோலினது ஆஞ்ஞை ஏழுகடலாற்சூழப்பட்ட இவ்வுலகமாத்திரமோ ஏழுலகத்தையுங் காக்குமென்பார் சிலர் இக்குழந்தையினதுதோற்றம் மனிதர்கள் செய்த தவமோ அன்றி தென்தேசத்திலுள்ளவர்கள் செய்த தவமோ அன்றி தேவர்கள்செய்ததவமோ அன்றி யாகங்களுக்குரிய பூசுரர்கள் செய்ததவமோ அன்றி கேள்வியினையுடைய முனிவர்கள் செய்த தவமோ என்பார் இவ்வாறுகதம்மிலொருவர்க்கொருவர் வினவி மிகுந்த மகிழ்ச்சியோடு சென்றார்கள்.

அந்நகரத்தில் அவ்வவர்கள் வீடுகள் தோறும்பெண்கள் கலியாணத்துக்கு அலங்கரித்துக்கொள்ளும் ஆபரணங்களையணிந்துகொண்டு மங்கலவாத்தியங்கள் ஆரவாரிக்க பட்டணமெங்கும் பொங்கியோடும்படி நெய்விழாவெடுப்ப கேள்வி நிரம்பிய மறையோர்க்குக் கொடுத்த தானவெள்ளம் கடலைக்கிழித்துக்கொண்டு சென்றது இன்னும் அத்தானவெள்ளமானது இறைத்த வாசனைச் சுண்ணங்களையும் பொரிகளையும் வெள்ளையரிசியையும் குப்பைகளையும் நீர்ச்சிவிறிகளாலிறைத்த குளிர்ந்த பனிநீரையும் சந்தனத்தையும் எண்ணெயையும் கஸ்தூரிச்சேற்றையும் பசையில்லாமல் வாரியெடுத்து இடமகன்ற பட்டினமெங்கும் கழுவின.

இவ்வாறு அந்நகரமெங்குங்களிக்க சோமவாரம் திருவாதிரைநட்சத்திரம் ஆகிய இந்தநல்லநாளில் குருகேந்திரித்த பரிசுத்தமாகிய லக்கினத்தில் பிறந்த சோமசுந்தரபாண்டியனது பிள்ளைக்கு சாதககர்ம்மமுதலிய அரசர்க்குரிய வேத ஒழுங்கின்படி செய்வித்து வருணன் இந்திரன் மகமேருவாகிய மலையாரசன் முதலியசத்துருக்களது வீரஞ்சிந்த அவர்களது செருக்கையழித்து அச்சந் தோற்றுவித்தற்குரிய காரணத்தால் அக்குமாரனுக்கு உக்கிரவருமனென்று நாமகரணஞ்செய்து நான்கா மாதத்தில் சந்தி மிதிப்பித்து ஆறுமாதத்தில் அன்னமங்கலம் ப

முப்பத்தொன்றுவது

# உலவாக்கிழியருளியபடலம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

அடியார்பொருட்டுப்பரிவயவராகிச்செழியன்காணவிடைக்
கொடியார்வந்துமெய்க்காட்டுக்கொடுத்தவண்ணமெடுத்துரைத்துங்
கடியார்கொன்றைமுடியாரக்கன்னிநாடன்றனக்கிசைந்த
படியாலுலவாக்கிழிகொடுத்தபடியையறிந்தபடிபகர்வாம்.

எழுசீரடியாசிரியவிருத்தம்.

வையாகரணர்கணையாயிகர்மறைவல்லோர்மறைமுடிசொல்லாய்வோர்
மெய்யாமிருதிகள்பொய்யாவிரதிகள்வேள்வித்தழல்களைவாழ்விப்போர்
பையாடரவணியையானனனுரைபகர்வோருலகியலகல்வோர்க
ளெய்யாதுறைதலினையாதளகையதென்னப்பொலிவதுதென்னாடு.

பின்பு குலபூடண பாண்டியன் சோமவாரந் தொடங்கிச் சிவதருமங்களெல்லாம் வழுவாமல் அனுஷ்டித்துவருகிற பலத்தினாலே தன்னாட்டிலே யுள்ள பிராமணர்களை அசட்டைபண்ண அதனாலே மழையில்லாமல் நீர்பெருகுதலின்றி விளைவுகுறைந்தது பாண்டிநாடெல்லாம் அக்காலத்திலே முனிவர்களெல்லாம் வறுமையடைந்து பூணநூலும் வேதநூலும்போய் முனிவர்கடன் தேவர்கடன் பிதிர்க்கள் கடன்களாகிய யாகங்களெல்லாம் போய் அக்கிரமங்களைச்செய்து பசிபொறாமல் அந்நியதேசங்களுக்குப் போய்விட்டார்கள் குடிகளெல்லாம் பசியாலே புழுங்கியழிந்து எந்தநாட்டுக்குப் போவோமென்று மிகவும்வருந்துகின்ற செய்கைகண்டு பாண்டியன் ஐயோவென்றிரங்கி சோமவாரத்தினன்றுபொற்றாமரைத்தீர்த்தத்திலே போய்முழுகி சித்திவிநாயகனைப் பூசைபண்ணி தனது மெய்யன்பினாலே மீனாட்சிசுந்தரேசுவரரை அருச்சனைசெய்து சன்னிதியிலே விழுந்து நமஸ்கரித்துக் கைகளைக்குவித்துத் துதித்து ஆனந்தித்து சுவாமி உலகத்திலுள்ள வுயிர்களுக்கெல்லாம் நீ உயிர் அல்லவோ இந்த வுயிர்கள் பசியால் வருந்துகிறவருத்தம் அடியேனை வருத்த வேண்டியதென்ன நான் சம்பாதித்த பொருள்களெல்லாம் தருமவழியேதானே செலவாயின இனி சுவாமி உம்முடையமனமகிழ்ந்து எனது துன்பநோயைத்தீர்க்க கிருபாநோக்கஞ் செய்யவேண்டுமென்று மிகவும்வேண்ட அப்போது கடவுள்வேண்டுகின்ற பாண்டியன் குற்றத்தைச் சிறிது உள்ளத்தேகொண்டு அவன்சொல்வது காதில்விழாததுபோலப்பேசாமலிருக்க அப்போது பாண்டியன் தன்வீட்டிற்குப்போய் கடவுள் திருவடியி லன்புபெறும்படி யெண்ணி வெறுநிலத்தே கிடந்து நித்திரைகொண்டான் அப்போது வெள்ளியம்பலவாணர் அவன்கனவிலே சங்கக்குழையணிந்து வெண்ணீறுபூசி சரிகோவணங்கட்டி மார்பிலே சிங்கத்தோல்கிடந்து விளங்க ஒருசித்தராக வெழுந்தருளி பாண்டியன் முன்னேநின்று பாண்டியா நீஎப்போதும் என்னிடத்திலே அன்புள்ளவன் உலகத்திலுண்டாகிற துன்பங்களைப்போக்கி கோணாமல் நீதிசெலுத்துகின்ற செங்கோலுடையவன் ஆனாலும் உன்னிடத்தே ஒரு குறையுண்டானதினாலே எக்காலத்தும் குறைவுபடாத வுனதுநாட்டிலே இக்காலத்திலே வேள்விகள் குறைந்து வறுமைநோயுண்டாயிற்று ஆனால் எனக்கு வேதமேபீடிகை வேதமேபாதுகை வேதமே வாகனம் வேதமே சிலம்பு வேதமேகோவணம் வேதமே கண்கள் வேதமே பேச்சு வேதமே வடிவம் இன்னம் வேதமே எனதாக்கினைசத்திரூபமாய் விதிவிலக்காய் ஞானபோதனைசெய்து நிலைநிறுத்திப் பலவுயிர்களுக்கும் போகங்களைக்கொடுத்து வேறுபாடுசெய்கிற வியாதிகளைத் தீர்த்து மோக்ஷத்தையுந் தரவல்லது எனதுசெங்கோலும் அந்தவேதமே அந்தவேதங்களை நிலைபெறச்செய்கிற வேதியர்கள் அந்த வேதநூலின்வழியே கலிதோஷத்தைத் தீர்த்து யாகங்களைவளர்த்து என்னிடத்திலே தங்கள்மனத்தைச்செலுத்துகிறவர்கள் அவர்களாலே செய்யப்படுகிற வேள்விகளே மழைக்குக்காரணம் அப்படிப்பட்ட பிராமணர்களை யிகழ்ந்து கைவிட்டாய் அதனாலேமழையில்லாமல் வறுமையுண்டாயிற்று ஆதலால்மூன்றுலோகங்களும் பிழைக்க மூன்றுதீயும் வளர்க்கின்ற இந்தப்பிராமணர்களை யானாகநினைத்து நாள்களெல்லாம் பலவகையான தருமங்களைப் பெருகச்செய்து செங்கோல்செலுத்தி ஆக்கினைசக்கரஞ் செல்ல வாழக்கடவையென்று பாண்டியனது முற்காலப்பயன்

போலே எளிதாய்வந்த கடவுள் உலவாக்கிழி யொன்றுகொடுத்து இந்தக்கிழியிலே நீயெவ்வளவுபொன் எடுத்துச் செலவுசெய்தாலும் அந்தக்கிழி பழையபடியே நான்கொடுத்த அளவிற்குறையாம லிருக்கும் ஆகையாலிதைக்கொண்டு வந்தவறுமையைத் தீரென்றுகொடுத்துப் பாண்டியன் மனக்கவலைதீரத் திருநீறுசாத்தித் தமதுதிருவுருமறைந்தார். உடனே பாண்டியன் தான்கண்டகனு மெய்யாக வணங்கியெழுந்து சோமசுந்தரக்கடவுள் சித்தராய்வந்துகொடுத்த பொற்கிழியை தனதுமணிமுடிமேலேகொண்டு பேரானந்தம்விளங்க ஒருமுகூர்த்தகாலம் கூத்தாடி மந்திரிகளுக்கும் படைத்தலைவர்களுக்குங் காட்டித் தெரிவித்து தனது சிங்காசனத்தின்மேலே அந்தப் பொன்முடிப்பை வைத்து வேதங்களுஞ் சங்கங்களுமுழங்கச் சந்தனம்பூசி புஷ்பமாலைகளணிந்துபத்துவித வாசனைத்தூபங்கொடுத்து நெய்விளக்குக் கர்ப்பூரவிளக்குகள்காட்டி கங்காதரக்கடவுளாக நினைத்துப்பூசைசெய்து கிட்டிவணங்கி வலஞ்செய்துபொன்முடிப்பையவிழ்த்து வேண்டியஅளவுகொண்டுமுத்தீவேதியர்க்கும் வேள்விகளுக்கும் இன்னம் எல்லாருக்கும் கொடுக்கக்கொடுக்க அந்தப் பொன்முடிப்பு குறையாத மோக்ஷவின்பம்போல வளர அந்தப்பொன்முடிப்பினாலே உண்டாகுகின்ற பொருள்களைக்கொண்டுருகச்செய்து இந்திரவிமானக்கோயிலை உள்ளும்புறம்புமெழுகி ஞானக்கொழுந்துபோலும் அங்கயற்கண்ணியென்னு மீனாட்சிகோயில் அறுகாற்பீடம் வாயில் முதலானவெல்லாம் அலங்காரமாக சுவர்னகஜிதமாக்கிப் பின்னும் அந்தப்பொற்கிழியாகிய கடலிலே பொன்னாகிய நீரை மொண்டுமொண்டு தினந்தினம் குலபூடணபாண்டியனென்னுமேகம் பொழிய தெய்வதருமங்கள் வளர்ந்ததினாலே விட்புறமேகங்கள் முந்நீர்க்கடலிலே மொண்டு மொண்டு பெய்து திருநாட்டிலே பலவளங்களும் வளர்ந்து கன்னிநாடு அளகைநாடுபோலச் செல்வந்தழைத்து வையாகரணர்களும் நையாயிகர்களும் வைதிகர்களும் வேதாந்திகளும் தருமசாஸ்திரிகளும் பூர்வாசிரமிகளும் தீக்ஷிதர்களும் சைவாகமிகளும் சந்நியாசிகளும் நிறைந்து தென்னாடு திருமால்வடிவாகியவையகத்திலே திருமால் திருவுந்திபோல விளங்கி அந்த உந்திப்பொகுட்டுப்போன்ற பொதிகையில் நான்முகன்போல அகத்தியமாமுனிவர் விளங்கி முத்தமிழ்வேத முழங்குகின்றன.

உலவாக்கிழியருளியபடலம் - முற்றியது.

---

முப்பத்திரண்டாவது

## வளையல்விற்றபடலம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

வேதந்தனதுவடிவென்றுவிண்ணின்றிழிந்தவிமானமறைக்
கீதன்செழியன்றனக்குலவாக்கிழிதந்தளித்தவழியிதுவப்
போதங்கடந்தபொருள்வணிகப்புத்தேண்மாடமணிமறுகு
பாதந்தடவநடந்துவளைபகர்ந்தபரிசுபகர்கிற்பாம்.

எழுசீரடியாசிரியவிருத்தம்.

பிறந்தமைந்தரளவிறந்தபெருமைகொண்டபெருமிதஞ்
சிறந்தவீரமாற்றலேற்றதிறல்புனைந்துவைகினர்
மறந்ததும்புவேனெடுங்கண்வணிகமாதர்சிறிதுநா
றெந்தரன்றனருளடைந்துதுணையடிக்கண்வைகினர்.

மேல் குலபூடண பாண்டியன் ஆக்கினைசக்கரஞ்செலுத்திவருகிற நாளிலே முன்னாள் தாருகாவனத்திலே வாசஞ்செய்கிற தெய்வரிஷிபத்தினிகள் கற்புநிலையை அளவுசெய்யவேண்டி மன்மதனையெரித்தகடவுள் தாமே ஒருகாபாலிவடிவங்கொண்டு பிச்சைவாங்குகிறவராய் வேதமே கோவணமாக உடம்பெல்லாம் விபூதிதூளிதராய் கீதங்கள்பாடுகிறசெவந்த கனிபோன்றவாயும் உள்ளேநகையும் கிண்கிணியணிந்த திருவடிகளும் அவைகளுக்கிட்ட பாதுகைகளும் பிச்சைவாங்கும்பாத்திரமுங்கொண்டுஇரதிதேவி புருடனே தவவேடங் கொண்டாற்போலத் திருவேடங்கொண்டு வரும்போது பாதகமலங்களில

ணிந்த சிலம்பினொலியும் கண்டமதிரப்பாடுகிற சங்கீதவொலியும் கையிலேகொண்ட உடுக்கையினொலியும்சென்று அந்த ரிஷிபத்தினிகள் காதுகளைக் கிழித்துக்கொண்டு மனமும்வேறுபட்டு அவர்கள் கற்புநிலையையுந் தளரச்செய்ய அவர்கள் கையிலே பிச்சைகொண்டு பள்ளத்திலே பாய்கிற நீர்போல தங்கள் வீட்டுக்கு வெளியேவந்து பிச்சையிடுகிறவர்கள் ஐயர் பலிபாத்திரத்திலேயிடுகிறபிச்சைச் சோற்றோடுகூடக் கையில்வளைகளுங் கழன்றிடுவார்கள். பின்னுந் தங்கள் கருத்திலுள்ள நாணையிழப்பதையல்லாமல் இடையி லணிந்த மேகலைநாணுமிழப்பார்கள். (நாண்—வெட்கம்-கயிறு.) மார்பிலே மன்மதன் அம்புபடதங்கள் கண்ணம்பும்பட நின்று சோர்வார்கள். (அம்பு—பாணம்-நீர்) பின்னு மந்தப்பெண்கள் ஐயர்முன்னே வந்து ஓய் ஐயரே எங்கள் கைவளையைத் தாருமென்ன ஐயர் வளை உங்கள் கண்டத்திலிருக்கிறதென்றார். (வளை—வளையல்-சங்கு.) அந்தப்பெண்கள் ஐயரே எங்கள் கலையினைத்தாருமென்ன ஐயர் உங்கள் முகமதியிலேயிருக்கின்றது கலையென்றார். (கலை—ஆடை-ஒளி.) பெண்கள் இடையறிந்துவந்து எங்களைச்சேருமென்ன ஐயர் பெண்களே உங்களுக்கு இடையோ காணக்கூடா திருக்கிறதென்றார். (இடை—சமயம்-இடுப்பு.) பெண்கள் அது அப்படியானால் எங்கள்பழையநிறத்தைத்தந்து எங்களுக்கு விடைகொடுமென்ன ஐயர் பெண்களே நமது விடை கடலிலே கிடந்து தூங்குமென்றார். (விடை—உத்தரவு-இடபம்.) பெண்கள் இந்தக்கபாலிக்கு எப்போதும்நடுவில்லையென்ன ஐயர்நடுவில்லாமை உங்களுக்கேயென்றார். (நடு—நியாயம் .. இடுப்பு.) பெண்கள் இந்த ஐயர்நெஞ்சுகல்லென்ன ஐயர் பெண்களே உங்கள் கொங்கைகளே கல்லென்றார், (கல்—இளகாமை-மலை.) பெண்கள் ஐயரே கங்கைநீர்சுமப்ப தென்னகாரணமென்ன ஐயர் பெண்களே உங்களிடத்திலேபலியேற்கவென்றார். (கங்கைநீர்—கங்காசலம்-தலையோட்டைக் கையிலேகொண்டநீர்) பெண்கள் ஐயரே நீர்சொன்ன செப்பு எப்படிப்போலிருந்ததென்ன ஐயர் பெண்களே உங்கள் கொங்கைபோலிருக்கு மென்றார். (செப்பு—உத்தரவு-செப்பு.) பெண்கள் உம்முடைய கந்தரம் கறுத்தது எதுக்காகவென்ன ஐயர் மழைபெய்தற் கென்றார். (கந்தரம்—கழுத்து-மேகம்.) பெண்கள் என்னஉத்தரஞ்சொன்னீரென்ன ஐயர் தெற்கேநின்றுபார்த்தால் உத்தரந் தெரியுமென்றார்.(உத்தரம்—விடை-வடக்கு.) பெண்கள் ஐயர் கண்ணிலே தங்களுருவைக்கண்டு அதைப்போலவே எங்களையு மிருக்கச்செய்யுமென்ன ஐயர் பெண்களே உங்கள்கண்ணிலும் நம்மிலுஞ்சிறந்தவரிருக்கிறார் அவரைக்காணுங்களென்றார். இப்படியாகப்பெண்களிலே சிலர் கும்பிட்டுக்கொண்டுநிற்பார்கள் சிலர்சரணமென்றுபாதத்திலே விழுவார்கள் சிலர் தங்கள்கைகளைநீட்டி யெட்டித்தழுவுவார்கள்அதற்குஐயர் அகப்படாமல்நிற்பார்அதற்கு அப்பெண்கள் ஐயரே நீர் எங்களைத்தழுவாமற்போனாலும் எங்களிடையிலிருந்து அவிழ்ந்த கலையையுடுத்துமென்பார்கள் சிலர் ஐயரே உம்மிடத்தாசையால் நாங்கள்வருந்துவதுகண்டு எங்கள் தலைவர்கள் கோபிக்குமுன்னே கழன்றவளையலையெடுத்து எங்கள்கையிலே யிடுமென்ன ஐயர் நாளை வந்திடுகிறோமென்றுசொல்லி மறைந்தார் அப்போது பெண்கள் ஐயர்கொண்டுபோனநாணும் உள்ளமும் மீளும்படி செய்யமாட்டார்களாய் கலையுஞ் சங்குந்துள்ள மன்மதபாணத்தினாலே நெஞ்சுதொளைபட்டு மார்பெல்லாம்பசலைபூப்ப நிற்கின்றதை அவர்கள் புருஷர்கள்கண்டு அம்முனிவர்கள் திரிகாலஞானிகளாகையாலே நான்மாடக்கூடற்கடவுளே இப்படிக்காபாலிவேடங்கொண்டுவந்து நம்முடைய பத்தினிகள் கற்பையும் நாணையும் வாங்கிப்போனாரென்றுதெரிந்து அந்தப்பெண்களைப்பார்த்து நீங்கள் கற்புநிலை தவறினீர்களாகையாலே மதுரையில் வணிகர்கன்னிகளாகப்போய்ப் பிறக்கக்கடவீர்களென்ன பெண்கள் அம்முனிவர்களிட்ட சாபத்தையேற்று எங்களுக்கிந்தச்சாபம் எப்போது தீருமென்றுகேட்க முனிவர்கள் அந்தமதுரைக்கடவுளே வந்து உங்கள்கைகளைத்தொடும்போது தீருமென்ன பெண்கள் மனந்தளர்ந்து முல்லைமாலையணிந்த வைசியர் குலப்பெண்களாகவந்து பிறந்து பேதைபெதும்பைப்பருவங்கள் கடந்து மங்கைப்பருவப் பெண்களாயிருக்கிற காலத்திலே சோமசுந்தரக்கடவுள் சடையிலே கங்கையும் கண்டத்திலேவிஷமும் நெற்றிக்கண்ணும்பாதிப்பெண்வடிவும் மான்மழுவும் தெரியாமல்மறைத்து வளையல்விற்கிற செட்டிவடிவாய் வராகமுங்காணாத பாதங்கள் நிலத்திலேபொருந்த முன்னாளிலே ருஷிபத்தினிக ளிடத்திலே கொண்டவளையல்களுக்கே பட்டுக்கயிறு கோத்துவைத்திருந்து பின்னுமந்தப் பெண்களுக்கே யிடுவோமென்னு முள்ளக்கருத்துடனே அடியார்கள் சூட்டின ஐந்துநிறப் பூமாலைகள்போல தோளிலே ஐந்து வகையான வளையல்களைத் தோட்சுமையாக மேற்போட்டுக்கொண்டு அந்தச்செட்டித்தெருவிலே வளையலோ வளையலென்று வேதப்பொருள்சொன்ன திருவாயாலே சொல்லிக்கொண்டுவர மேகத்தின் ஓசைகேட்டுக் களித்தெழுகின்ற மயில்கள்போல தங்கள் மணிமேகலைகளொலிக்க வணிகர் குலப்பெண்கள் மாளிகைகளிலி

ருந்து வீதியினிடத்தேபுறப்பட்டுவளைகளிட்டுக்கொள்ள மின்போல நுடங்கிவந்து செட்டியார் வடிவைக் கண்டு அப்பொழுதே அவரைக்கூட மிகுந்த ஆசைகொண்டு நாண் மடம் அச்சம் பயிர்ப்பென்கிற குணங்களாலே தடைபட்டு மனம் வருந்தித் தமோறி மேகலைசிலம்பு குண்டலம் கேயூரம் கண்டிகை முதலிய ஆபரணங்க ளெல்லாம் அணிந்திருந்தாலும் கைகளுக்கு வளையல் இல்லையானல் பெண்களுக்கு அழகுபோதுமோ ஓய் செட்டியாரே நல்ல வளையல்களாக எங்கள் கைகளுக்குத் தகுதியாகப் பார்த்திடுமென்று செட்டியாருக்கு முன்னே தங்கள்கைகளை நீட்ட செட்டியாரும் மீனாட்சியம்மை கைகளைத்தொட்ட தமதுகைகளினலே அந்தப் பெண்கள் கைகளைத்தொட்டு வளைகளேற்றும்போதே மையலுங்கூடவேற்றியிட அப்பெண்கள் முன்னிட்டவளைகளை உடைத்தெரிந்துவிட்டு மறுபடியும்வந்து எங்கள்கைகளுக்கேற்ற வளையலிட விலைசொல்லுமென்று மிகவும் ஆசைநீண்டு கைகளைநீட்டுவார்கள் சிலர் சிலர் ஓய்செட்டியாரே எங்களுக்குப்போடும் எங்களுக்குப்போடுமென்று பின்றொடர்ந்துசென்று மன்மதவேதையாலே நாண்முதலிய காவலுமிழந்து நிற்பார்கள் சிலர் முன்னேயிட்டவளையல் கைக்குப்பெரிதாய்க் கழன்றுபோயிற்று வேறே பொருத்தமாகஇடுமென்று சொல்லி அவரிட்டபின் அந்தவளையலும் அப்படியே பெரிதாகிக்கழல இன்னமுஞ்சிறிதாய்ப் பார்த்திடுமென்பார்கள் பின்னுமிட்டவளையல் கழன்றுபோனதினலே துன்புற்று ஓய் செட்டியாரே நீரிட்டவளையல் கழலுவதேயன்றி இடையிற்கலையுஞ்சரிவதே இதற்குக்காரணமென்னவென்பார்கள் சிலர் செட்டியாரே இந்தவளையலைப்போலே வளையல் நாங்கள் எக்காலத்துங் கண்டறியோம் இந்தவளையல் எங்கேசெய்தது கண்டவுடனே எங்கள்தேகம் புளகாங்கிக்கின்றதென்று நாளைத்தினமும் இங்கேவாருமென்பார்கள் நாங்களிட்டுக்கொள்ளும் வளையலுக்கு இப்போதே விலைதருகிறோம் கொண்டுபோமென்பார்கள் அதற்குச்செட்டியார் பெண்களே நாளைக்குநான்வந்து விலைவாங்கிக்கொள்ளுகிறேன் இன்று வேண்டாவென்று ஆண்சிங்கம்போலே செட்டியார் நடந்தருளக்கண்டு பெண்கள் பலருங்காணப் பின்னேதொடர்ந்து செல்லும்போது செட்டியார் சென்று இந்திரவிமானக்கோயிலுள்ளே புகுந்து சிவலிங்கவடிவாயினர் அதுகண்ட பட்டணத்துஜனங்களெல்லாம் ஆனந்தக்கண்ணீரொழுக வளையல்விற்ற செட்டியார் சோமசுந்தரக்கடவுளென்று தெரிந்து கொண்டாட அக்கடவுள் திருக்கைகளாலே தொட்டதினலே அந்தசெட்டிப் பெண்களெல்லாம் அளவிறந்த புதல்வரைப்பெற பிறந்தபிள்ளைகள் பெருமை வீரம் சாமர்த்தியம் கீர்த்தி இவைகள் மிகுந்துவளர்ந்திருந்தார்கள் அந்தப் பெண்களெல்லாரும் சிறிது நாட்சென்றபின்புபரமசிவனது திருவடிகளையடைந்து வாழ்ந்தார்கள்.

வளையல்விற்றபடலம் - முற்றியது.

முப்பத்துமூன்றுவது

## அட்டமாசித்தியுபதேசித்தபடலம்.

### எழுசீரடியாசிரியவிருத்தம்.

கொத்திலங்குகொன்றைவேய்ந்தகூடலாதிமாடனீள், பத்தியம்பொன்மறுகணைந்துவளைபகர்ந்தபரிசுமுன்
வைத்தியம்பினுமியக்கமாதர்வேண்டவட்டமா, சித்திநந்ததிறமினித்தெரிந்தவாறுசெப்புவாம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

தேவதேவுபதேசித்தசித்தியைச்சிலம்பன்செல்வி,பாவணைவலத்தானன்குபயின்றுவான்வழிக்கொன்டேகிப்
பூவலர்கதுப்பினல்லாரறுவரும்புரமூன்றட்ட, காவலனிரம்பிவைகுங்கயிலைமால்வரையிற்புக்கார்.

சோமசுந்தரக்கடவுள் குலத்தானன பாண்டியன் அரசாளுநாளிலே கைலாயமலையினிடத்தில் ஆலமரத்தினிழலிலே வேதமுதலானகடவுள் அருகிலே வெள்ளிமலையினருகே ஒரு மரகதமலைபோலே பருப்தராஜகுமாரியான பார்வதி வெற்றிலைச்சுருள் மடித்துக்கொடுக்க அன்புபெருகுகிற சுகாசாரியனாய் எழுந்தருளி யிருக்கும்போது பிருங்கி நந்திமுதலாகிய கணங்களும் சனகாதிநால்வரும் வணங்கிச்சிவசரித்திரங்கள் கேட்க அவர்களுக்கு திருவாய்மலர்ந்தருளிச் செய்துகொண்டிருக்கிற சமயத்திலேகட

லிலே சஞ்சரிக்கின்ற சூரன்முதலானவர்களை வென்று செயங்கொள்ள அவதரித்த குமாரக்கடவுளுக்கு திருமுலைப்பால்கொடுத்த யக்ஷகன்னிகளாகிய ஆறுபேர்களும் உடம்பெல்லாந் திருநீறணிந்து சடைருத்திராக்ஷமாலிகை முதலிய சைவதவக்கோலமாய் வந்து வேதமாகிய சிலம்புக ளலம்புகின்ற பாததாமரைகளிலே வந்தனை செய்து சுவாமி எங்களுக்கு அட்டசித்தியு முபதேசிக்கவேண்டுமென்று பிரார்த்திக்க கடவுளாகிய ஆசிரியர் தம்முடைய மடியின் மேலெழுந்தருளி யிருக்கின்ற பார்வதியைக் காட்டி இவளே பராசத்தியாகிய மகேஸ்வரியாக அணிமா முதலிய எட்டுச்சித்திகளும் வணங்கிக் குற்றேவல் செய்யுஞ் சேடிகளாய்ச் சூழ்ந்து சேவிக்க விளங்குவாள் ஆகையாலிவளை நீங்கள் தியானித்தால் உங்கள் வினைகளைப்போக்கி அஷ்டசித்தியுந் தருவாளென்றருளிச்செய்து அந்தச்சித்திகளெட்டையும் தெளிவுசெய்யக்கேட்ட பெண்கள் பூர்வகருமத்தால் அந்தச்சித்திகளை மறந்துபோக அப்போது சிவபரஞ்சோதியான கடவுள் அந்தக் குற்றத்தைத் தெரிந்து பெண்களைக்கோபித்து நீங்கள் பட்டமங்கையில் ஆலமரத்தடியிலே சடமான கல்லுப்பாறையாய்க் கிடக்கவென்று சபிக்க அந்தப்பெண்கள் மிகவுந் துன்பங்கொண்டு கடவுளைவணங்கி சுவாமி நாங்கள் இந்தச்சாபத்தை எக்காலந்தீர்ந்து தெளிவோ மென்று கேட்க கடவுள் நீங்கள் இப்படிக் கருங்கற்பாறையாய் ஆயிரம் வருஷகாலங் கிடந்தீர்களானால் அப்பால் நாமே மதுரையினின்றும்வந்து உங்கள் சாபத்தைப்போக்கிப் பழையவடிவு கொடுத்து உள்ளங்கை நெல்லிக்கனிபோல அஷ்டசித்திகளுந் தெளிவுசெய்வோம் போங்களென்றார்.

அப்போ தந்தப் பெண்களாறுபேரும் பட்டமங்கையென்னு மூரிலே ஆலமரத்தடியிற் பாறையானார்கள் அப்படிப்பாறையாய் ஆலம்பழங்கள் ஆபரணங்கள்போல மேலே யுதிர்ந்து கிடக்க மூடிபட்டு ஆயிரவருஷமுங்கழிய மதுரைக்கடவுள் திருவுள்ளந்திரும்பி தமதிச்சைப்படியே ஒரு ஆசாரியவடிவாய் அங்கே எழுந்தருளி பெண்கள்சாபநீங்க திருவருட்பார்வையாலே பார்த்தபோது புடம்போட இரும்புபொன்னானாற்போல மலவிருள்நீங்கி யெழுந்து அன்புடனே கடவுளடிகளிலே வந்துவணங்க கடவுளும் பார்வதியேபோன்ற அந்தப்பெண்கள் தலைமேலே கையைவைத்து அவர்களைப் பார்த்து அவர்கள் புத்திக்குத் தெளிவுதோன்றக் கேளுங்கள் பெண்களேயென்று உபதேசஞ்செய்தருளுகிறாரெப்படியென்றால் அணிமா, மகிமா, இலகிமா, கரிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம் என்றுசித்திகளின்பேரொட்டு அவைகளிலே சிறியவுயிர்களிலே பரமகாட்டையான அணுரூபமாய்ப் புகுந்திருப்பதே அணிமா, பிருதிவிமுதல் சிவமீறானமுப்பத்தாறுதத்துவமும் உள்ளும்புறமும் நீங்காதிருந்து நிறையும் பெருமையே மகிமா, மேருமலைபோல கனமான தூலமாய் எடுத்தால் இலகுவாயிருப்பதேஇலகிமா, பரமாணுப்போன்ற வடிவாய் எடுத்தால் மேருமலைபோலிருப்பதே கரிமா, பாதாளத்திலிருந்து பிரமலோகம்போய் மீண்டும் பாதாளத்துக்கு வரத்தக்கதே பிராத்தி, ஒருதேகத்திலிருந்து வேறொருதேகத்திலே புகுதலும் ஆகாசத்திலேசஞ்சரித்தலும் இச்சித்தபோகமெல்லாம் தானினைத்தபடியே அநுபவிக்க வரச்செய்தலு மிவையெல்லாம் பிராகாமியம், முத்தொழிலுஞ்செய்து சூரியன்முதலான கிரகங்களெல்லாந் தான்சொன்னபடியேநடக்கச்செய்வதே ஈசத்துவம், அசுரர் பக்ஷிகள் மிருகங்கள் பூதங்கள் மனிதர்கள் இந்திரன்முதலிய அஷ்டதிக்குப்பாலகர்களெல்லாரையுந் தன்வசமாக்கிக் கொள்ளவல்லதே வசித்துவம், ஆகியசித்திகளை எம்மைத்தெரிந்தயோகிகள் விரும்பார்கள் ஆனாலும் இந்தச்சித்திகள் அந்தயோகிகளைப் பின்றொடர்ந்து அவர்கள் நிழல்போலக் கூடநின்று உலகத்தாருக் கவர்கள்பெருமையைத் தெளியச்செய்யுமென்று அஷ்டமாசித்திகளையுபதேசித்துத் தெளிவுசெய்ய அப்படிக் கடவுளுபதேசித்த சித்திகளை அந்தப் பெண்கள் பார்வதியாகிய தேவியைப் பாவனையாகத் தியானித்து நன்றாய் அப்பியாசம் பண்ணிக்கொண்டு ஆகாசமார்க்கமாகச் சென்று கடவுள் கைலாயமலையைச் சேர்ந்து வாழ்ந்தார்கள்.

அட்டமாசித்தியுபதேசித்தபடலம் - முற்றிபது.



முப்பத்துநான்காவது

## விடையிலச்சிணையிட்டபடலம்.

எழுசீரடியாசிரியவிருத்தம்.

சந்துசூழ்மலயச்சிலம்பர்தவம்புரிந்தவியக்கிமார்க், கந்தநாலிருசித்திதந்ததறைந்தனந்தனதடிதொழாம் வந்துமீள்வளவன்பொருட்டுவடாதுவாயிறிறந்தமைத்,திந்துசேகரன்விடையிலச்சினையிட்டவாறுவிளம்புவா

கொச்சகக்கலிப்பா.

கோடாதசெங்கோலும்வெண்குடையுங்கோமுடியு, மேடாரலங்கலிராசேந்திரற்களித்துத்
தோடாரிதழியான்றாட்கமலஞ்சூடிவா, ழூடாளரசுரிமைபெற்றானரபதியே.

காஞ்சிபுரத்திலே காடுவெட்டியசோழனென்பவன் உத்தமர்களாகிய சிவபத்தர்களிலே மிகவுமுத்தமன் சந்தனமுதலியவைகளும் ஆபரணங்களும் பொய்யென்று நீக்கி விபூதி ருத்திராக்ஷங்க ளணிந்து கொள்வான் மெய்யான வேத புராணங்களிலே சொல்லும் பொருள்களெல்லாம் பரமசிவமே பரதத்துவமென்று தெரிந்தவன் பின்னும் சைவ புராணங்கள் கேட்டு பரமசிவத்தி னிடத்திலே மெய்யன்பு கொண்ட கருத்துள்ளவன் சொக்கநாயகன் திருவிளையாடலுங்கேட்க அன்பு கொண்டவனுய்க் கேட்டு மீனுக்ஷிசுந்தரேசுவரர் பாதங்களை வணங்க மிகவுமன்புகொண்டு மதுரேசன் பாதங்களை நானெப்போது வணங்கப்பெறுவேனென்று பரிவு கொண்டு இராத்திரியிலே தூங்குகிறவன் மீனுக்ஷி சுந்தரேசுரரைத் தியானித்துக்கொண்டுநித்திரைசெய்ய அன்றிராத்திரியில் அந்தக்காடுவெட்டின சோழன்கனவிலே வெள்ளியம்பலத்திலே நடனஞ்செய்கிற கடவுள் ஒருசித்தராய் அவன் முன்னேவந்து சோழராஜனே நீயெவ்வளவுமஞ்ச வேண்டா நீஉன் வடிவுமாறித் தனியே வந்து இன்றே மதுரையில் நம்மைத்தெரிசனை பண்ணிக்கொண்டு போவென்று சொல்லி மறைந்தருளினர் அதுகேட்டுச்சோழராஜன் மிகவுமாச்சரியங்கொண்டு மந்திரிமுதலிய சேனைகளொருவருமில்லாமல் தானொருவனுய்ப் புறப்பட்டுக் கடவுளருளே துணையாய் நின்றுவழிகாட்ட அன்றிராத்திரியிலே மலைகள் காடுகளாறுகளெல்லாங் கடந்து கரும்புகளுஞ் செந்நெல்களும்வளர்ந்தோங்குகின்ற வையையாற்றங்கரையையடைந்து நெருங்கும்போது வையையாறு கரைகளை யுடைத்துக்கொண்டுமரங்களைமுறித்துக்கொண்டும்வெள்ளம்பெருகிவர சோழராஜன் வடகரையிலேநின்று ஏதும்துரேசனை வணங்குதற்கு இது விக்கினமாயிருக்கிற தென்று சுவாமி பொன்பாத்திரத்திலேயிட்டு உண்ணும்போது தடுத்தாற்போலாயிற்று இந்தவெள்ளங்கடப்பது வெடிந்தால் பாண்டியன் துன்பப்படுத்தத் தொடங்குவான் இதற்கென்செய்வேனென்று கிலேசப்படும்போதுகடவுள் முன்னே சொப்பனத்திலே வந்தாற்போலவே அப்போதும் சித்தவடிவாகவே எதிர்வந்துநின்று பெருகிவருகிற வெள்ளம் வற்றும்படி கிருபைநோக்கஞ்செய்ய சோழன் வற்றினவாற்றை உடனே கடந்துவந்து வடக்குவாயிலுந்திறக்க உள்ளே நிறைந்துள்ள காவலெல்லாங்கடந்து வீதிகளுங்கடந்து பொற்றுமரைத்தீர்த்தத்திலே முழுகச்செய்து தமதுகோயிலுக்குள்ளே புகுதவுஞ்செய்து இந்திரவிமானத்துள்ளே விளங்குகின்ற தம்மையும் வணங்கச்செய்து அங்கயற்கண்ணியையும் சேவிக்கும்படி செய்து பேரானந்தத்திலே முழுகவுஞ்செய்தார் அந்தச்சித்தசாமி. அப்போது சோழராஜன்,

எண்ணியவெண்ணியாங்கேயான்பெறமுடித்தாய்போற்றி
பண்ணியன்மறைகடேறுப்பான்மொழிமணுளபோற்றி
புண்ணியர்தமக்குவேதப்பொருளுரைபொருளேபோற்றி
விண்ணிழிவிமானமேயசுந்தரவிடங்கபோற்றி,

எவ்வுடலெடுத்தேன்மேனுளெண்ணிலாப்பிறவிதோறு, மவ்வுடலெல்லாம்பாவமறப்பொருட்டாகவன்றோ
தெவ்வுடல்பொடித்தாயுன்றன்சேவடிக்கடிமைபூண்ட, விவ்வுடலொன்றேயன்றேயெனக்குடலானதையா.

என்று பலபலவிதமாகத் தோத்திரஞ்செய்து வரங்கள்வேண்டுகின்ற சோழனைப்பார்த்து இனி உன்னைப் பாண்டியன்கண்டால் துன்பப்படுத்த வெண்ணுவானென்று சித்தசாமி சொல்லி அவனைவடக்குவாயில்வழியே கூட்டிக்கொண்டு சென்று வையை வடகரையிற்கொண்டுபோய் நிறுத்தி அவன்நெற்றியில் விபூதியணிந்து உன் அன்புக்கேற்கவழித்துணையுண்டாகக் கடவதென்று வாழ்த்தி அவனை அனுப்பிவிட்டு வந்து கதவைமூடிக் கதவில் விடைக்குறியிட்டுகோயிலுக்குள்ளே எழுந்தருளியிருந்தார் விடிந்தபின்பு வாயில்திறப்பவர்கள் வந்து வேறுகுறி யிட்டிருப்பதுகண்டு சந்தேகித்து மற்றைவாயில்கள் மூன்றையும் போய்ப்பார்த்து மீனக்குறிதப்பாதிருக்க வடக்குவாயிலுக்குமாத்திரம் வேறுகுறி யுண்டாயிருக்கக் காரணமென்னவென்று பாண்டியன்முன்னே சென்று ஐயா வடக்குவாயிற்கதவிலே மீனக்குறியையழித்து விடைக்குறியிட்டிருக்கின்றது அந்தக்குறி யிட்டவர்கள் இன்னுரென்று தெரிந்திலோமென்று சொல்ல வுடனே பாண்டியன்வந்து பார்த்து இதென்னமாயம் இப்படியஞ்சாமற் குறியிடவல்லவர்யாரென்று விசாரித்துத் தெரியாமல் தன்கோயிலுக்குள்வந்து வியாகுலசித்தனுய்ப் போசனமுங்கொள்ளாமல் பட்டினியாக வெறுந்தரையிலே படுத்து நித்திரைகொள்ள அப்போதவன்கனவிலே கடவுள் வந்து பாண்டியா காடுவெட்டினசோழன் மிகுந்த பத்திமானுகையாலே இங்குவந்து நம்மைத்தெரிசிக்க வேண்டினன் நாம் அழைத்துவந்து வடக்குவாயிலைத்திறந்து தெரிசிக்கச்செய்து அவனை அனுப்பிவிட்டுப் பின்பு கதவைமூடி விடைக்குறி யிட்டோமென் றருள்செய்ய பாண்டியன் விழித்தெழுந்து ப

யந்து வெயர்த்து விம்மித் தோத்திரங்கள்செய்து பரமானந்தக்கடலிலே முழுகி வெளியேவந்து எல்லாருக்கு மின்னபடியென்று தெரியச்சொல்லித் தன்னைப்போலவே யெல்லாரும் பேரின்பக்கடலிலே முழுகச்செய்து பின்புதனது செங்கோலும் வெண்குடையும் ராஜமுடியும் தன்புத்திரனான இராஜேந்திர பாண்டியனுக்குக் கொடுத்துக் கடவுள்திருவடியை யடைந்தனன்.

விடையிலச்சினையிட்டபடலம் - முற்றியது.



முப்பத்தைந்தாவது

# தண்ணீர்ப்பந்தல்வைத்தபடலம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

சம்புமதுரைப்பரனிரவுதனியேவந்துதனைப்பணிந்த
வெம்புகதிரோன்மருமானைவிடுத்துமீண்டுதொழிறுக்கி
யம்பொற்கதவின்விடைபொறித்ததறைந்துந்தென்னனடுபடைக்கு
வம்புமலர்தோய்புனற்பந்தர்வைத்துக்காத்தவகைசொல்வாம்.

வள்ளறன்றம்பியென்னுமன்னவர்சிங்கந்தன்னைத்
தள்ளருந்தறுகணுண்மைத்தருக்கறத்தானுள்செல்வ
முள்ளனசிறிதுமாற்றியொதுக்கியெவ்வுயிர்க்குந்தாயாய்ப்
பள்ளநீரகலங்காத்துப்பல்வளம்பழுக்கவாழ்ந்தான்.

இராஜேந்திரபாண்டியன் செங்கோல் செலுத்துகிறகாலத்தில் காடுவெட்டினசோழன் பின்புதான் எல்லாருந்தெரிய மதுரையில்வந்துகடவுளை வணங்க நினைத்துப்பாண்டியன் சிநேகமாகும்பொருட்டுஅவனுக்குச் சிலகைக்காணிக்கைகள் கொடுத்தனுப்பினான். அப்படிச்சோழன்வரவிட்ட பொன்னுப்பிரணம் பொன்வஸ்திரங்கள் முதலானவெல்லாம் பாண்டியனேற்றுக்கொண்டு சோழனுடனே தானுமுறவாக வெண்ணி வேறே சிலகைக்காணிக்கைகள் கொடுத்தனுப்ப அதற்குச்சோழன் மனமகிழ்ச்சியாய்த் தன் பெண்ணைப் பாண்டியனுக்குக் கொடுக்கச் சம்மதித்திருக்க அந்தச்செய்தியை இராஜேந்திரபாண்டியனுக் கிளையவனான இராஜசிங்கமென்பவன்கேட்டுப் பழிபாவங்களுக்கஞ்சாமல் வஞ்சனையாய்த் தான்போய்ச் சோழன்மகளைக் கலியாணம் பண்ணிக்கொள்ள வெண்ணிக் காஞ்சிபுரம்போய்ச்சேர அப்படிக்காஞ்சிபுரத்துக்குவந்த இராஜேந்திர பாண்டியன் றம்பியையத் தன்சேனைகளுடனே யெதிர்கொண்டுபோய்க் கண்டு கூட்டிவந்து அவனுக்கு மூத்தவனுக்குக்கொடுக்க நியமித்தபெண்ணை அவனுக்குக் கலியாணம்பண்ணிக்கொடுத்துத் தமையன் அரசாட்சியைத் தம்பிக்குக்கொடுக்க ஆசைகொண்டு காடுவெட்டினசோழன் இராஜேந்திரபாண்டியனைப்பிடித்துத் தன்வசப்படுத்திக்கொள்ள ஆலோசித்து மருமகனுடனே இரதகெஜதுரகபதாதிகள் சூழப் பாண்டியன்மேலே யுத்தஞ்செய்வதற்காகப் பேரிகையடித்துப் பலவாத்தியங்களுமுழங்கத் திரண்டுவந்து மதுரைக்கிரண்டு யோசனைக் கிப்பாலிறங்குதற்குமுன்னே தூதர்கள் சென்று பாண்டியனுக்குத்தெரிவிக்கப் பாண்டியன் தெரிந்து சோமசுந்தரக்கடவுளுக்குத் தெரிவித்து வேண்டுவோமென்று கோயிலுக்குப்போய்க் கடவுளை வணங்கி சுவாமி அப்போது பாதிராத்திரியிலே வந்து உம்மைவணங்கி உம்முடையதிருவடிக்கன்பனுப்போன சோழன் இப்போதும் அப்படியே பிரசித்தமாய்வந்து உம்மைவணங்கும்பொருட்டு எனக்குவேண்டிய சிலவரிசைகளனுப்பி உறவுகொண்டு மனத்தில் வேறொன்றையெண்ணிப் போர்க்குவந்தனிலே அக்காலம் தருமநீதிக்குடன்பட்ட நீர் இக்காலம் அவன்செய்யவந்த வீரத்திற்குத்தகுந்த வீரஞ்செய்துநான்வெல்லும்படி செய்யவேண்டுமேயென்று மிகவும்வேண்டிக்கொள்ள அப்போதுகடவுளருளாலே அசரீரிவாக்காக பாண்டியனே நீஅஞ்சாமல் உன்சேனையுடனே சென்று வந்த பகைவருடனே போர்செய்தாயானு லுனக்கேஜெயமுண்டாகும்படி செய்கிறோமென்றுசொல்ல அந்தஆகாசவாணியைக்கேட்டு இராஜேந்திரபாண்டியன் கடவுள் திருவடியிலே மிகுந்த அன்பும் ஆனந்தமுமானகடலிலேமூழ்கி வணங்கியெழுந்து தன்கோயிலுக்குப்போயிரு

ந்து சூரியோதயமாகுமுன்னே யெழுந்து சந்திவந்தனை முதலியவைகளைமுடித்து சிவபூசையுஞ்செய்துகொண்டு கடலின்மேலே ஓராறுசெல்வதுபோலச் சோழனுடைய அளவிறந்த சேனைகளின்மேலேதனதுசுருங்கின சேனைகளுடனே சென்றெதிர்த்துநிற்க அப்போதிருதிறத்துச் சேனைகளிலுள்ள வீரர்களும் இடிபோல்முழங்கி சண்டமாருதம்போலே வேகங்கொண்டு வடவாக்கினிபோலேகொதித்து வீரநகைசெய்து சேனைகளை அணி அணிகளாகவகுத்து மடித்தவாயுடனே கைகலந்தார்கள் அப்போது சோழன்சேனைவீரர்களுக்கு பாண்டியன்சேனைவீரர்கள் ஒருவர் அநேகராகக் கடவுளருளாலேதோன்ற அப்படியேதோன்றுகிற தேரோதையும் குதிரைகளனுமானிக்கிற வோதையும் யானைகளின் முழக்கமுங்கூட வீரர்கள்பொருதுகிற வொலியும் தோள்தட்டுகின்ற வொலியுங் கூடிச் சமுத்திரத்திேனசைபோல ஒரேமுழக்கமாகக்கலந்தபோது வில்வீரரும்வில்வீரரும் வாள்வீரரும் வாள்வீரரும் வேலாளிகளும் வேலாளிகளும் மல்லாளிகளும் மல்லாளிகளும் யானைவீரரும் யானைவீரரும் குதிரைவீரரும் குதிரைவீரரும் தேர்க்காரரும் தேர்க்காரருமாகப் போர்செய்யும்போது ஒருவர்விட்ட அம்புக்கொருவர் தப்பிக்கொண்டு குரூரமானபாணங்களையெய்து பின்னுந்தொடுக்கிற அம்புடனேவில்லையு மறுத்துவிடுவார்கள் பின்னும் அளவில்லாத அம்புகள் மார்பிலேதைக்க அந்தஅம்புகளைப்பிடுங்கிக்கொண்டுவருகிற பகைவரை அவ்வம்புகளாலேயெய்து கொல்லுவார்கள் சோழன்சேனைவீரர்கள். அப்படிப்பட்ட சோழன்சேனைவீரர்கள்மேலே பாண்டியன்சேனைவீரர்கள் விடாதமழைகள்போலே பாணங்களைப்பொழிந்து நின்றுகூத்தாடி வருகிற பாணங்களுக்குத் தப்பியொதுங்கிநின்று கொடியபாணங்களாலே அவர்கள்வில்லையும் அம்பையுமறுத்தெறிந்து இன்னம் வருகிறவர்களெல்லாம் வாருங்களென்று கூப்பிடுவார்கள் இப்படிப்பொருதும்போது கால்கள்முறிந்தன தலைகளுருண்டனமலைகள்போலே தோள்கள் சரிந்தனதோர்களுடைபட்டன பலவிதமான ஆயுதங்களுமுறிபட்டன யானைகள் துதிக்கைகளறுபட்டு இரத்தவெள்ளத்திலே விழுந்தன பருந்துகளும் பூதங்களும் கூளிகளும் மொய்த்துநெருங்கின இப்படி இருதிறத்தரசர்சேனைகளும் ஒருவருடலினிழலிலே ஒருவரொதுங்கும்படி சூரியன்வெயிலெறிக்க மத்தியானமாகுமளவும் போர்செய்ய அன்றைத்தினத்தில் சிவனதுநெற்றிக்கண்போல அதிதீக்ஷண்ணியமாய் எப்படிப்பட்ட குளங்களும் ஆறுகளும் வற்றும்படி கோடைவெயில்வீசமண்ணும்வெடித்துப் பாதாளந்தோன்ற மலைகளும்பிளந்து வரிசைகளாகக்கணக்கில்லா மனிற்கிற சோலைகளிலே இலைகளெல்லா முதிர்ந்து சூரியகிரணங்களாலே யெங்குங்கானல்ாக வேர்வைநீரையல்லாம லெங்கும்நீரில்லாமல் வற்றிநின்ற நிலங்கொதிக்கயானைகள் மதநீர்மாறிச்சோரவும் குதிரைகள் தளர்ந்து தபிக்கவும்பதாதிகள் சூறைக்காற்றினாலே சுழன்று தண்ணீர்த்தாகங்கொண்டு கள்ளிமரத்தினிழலிலே யொதுங்கவும் இலைகளுதிர்ந்து வெறிதாய்நிற்கிற மரத்துநிழலைக்கண்டு சிலரோடவும்யானை தேர் குதிரை இந்தநிழல்களிலே யொதுங்குகிறவர்களும் கேடகங்களைநிழலுக்குக்குடையாகப்பிடித்துக் கொள்ளுகிறவர்களும் வேறேயொதுங்க நிழல்கிடையாமல் வீரசொர்க்கஞ் சென்றவர்களைக் கல்லாகச்செய்து நிற்கிறநிழலிலே யொதுங்குகிறவர்களுமாக இப்படிவாதைப்படுகிற சமையத்தில் எல்லாவுயிர்களுக்கும் பொதுவான கூடற்கடவுள் பாண்டியன் சேனைகளினடுவே நாலுகாலினாலே ஒருதண்ணீர்ப்பந்தல்பரப்பி அந்தப்பந்தலினடுவே நெற்றியிலே திரிபுண்டரங்களணிந்து காதிலேகடுக்கனும்பாதத்திலே ஒற்றைக்கிண்கிணியும் தோலாடையும்பார்த்தவர்கள்மனத்தையும் கண்களையுங்கிரிகிக்கின்றசிறுநகையும் கிருபாநோக்கமுங்கொண்டு வேதங்களினடுவேநின்றாற்போல தவவேடமாகநின்று ஆற்றுநீரைப்பானைகளிலே நிரப்பிக்கொண்டு ஒருகமண்டலத்திலே நீர்மொண்டுகொண்டு ஒருவருக்கொன்றும் நூறாயிரம்பேருக்கு நூறாயிரமுமாக கெண்டிகைச்செம்பின் சிறுதுவாரத்தினாலே வார்த்துவார்த்துத் தாகத்தைத்தீர்க்க அப்போது சோமசுந்தரக்கடவுள்வைத்த தண்ணீர்ப்பந்தலிலே பாண்டியன்சேனைவீரர்களெல்லாரும்வந்து நன்னீர்பருகி இளைப்புத்தீர்ந்து பலம்வந்தபின்பு சோழன்சேனை வீரர்கள்மேலேறிச் சேனைகளையெல்லா மோடத் துரத்திதும்பைமாலையணிந்து போர்செய்து சோழன்சேனைகள் கடலுடைந்தாற்போல உடைந்தோடவெற்றிமாலையணிந்து சோழனையும் அவன்மருமகனையும் கைப்பிடியாகப்பிடித்துவந்து பாண்டியனுக்கு முன்னேவிடபாண்டியன் அவ்விருவரையுங்கொண்டுபோய்ச் சோமசுந்தரக்கடவுள் சன்னிதியிலே நிறுத்திசுவாமி தேவரீர்திருவுள்ளமெப்படியென்று வணங்கிக்கேட்க அதுகேட்ட கூடற்கடவுள் பாண்டியனே நீ தருமவானல்லையோ உன்மனதிற்கிசைந்தபடி செய்கவென்று அசரீரியாகச் சொல்ல அந்த வாக்கைப் பாண்டியன்கேட்டு தருமசாஸ்திரப்படியே சோழனுக்குச் சில ரதகெஜதுரகபதாதிகளும் சில ஆபரணங்களும் கொடுத்தனுப்பிவிட்டான் பின்பு தன்தம்பியான இராஜசிங்கமென்பவனுக்கு தன் னிராஜ்ஜியத்தி

லே சிலபிரித்துக்கொடுத்து அவனை யொதுக்கிவிட்டு எல்லாவுயிர்களுக்குந் தாய்போல ரக்ஷகனுகி கடவு ளருளாலே பலவளங்களும்பெருக அரசநீதிசெலுத்திக்கொண்டு வாழ்ந்திருந்தான்.

தண்ணீர்ப்பந்தல்வைத்தபடலம் - முற்றியது.

முப்பத்தாறுவது

# இரசவாதஞ்செய்தபடலம்.

## கலிநிலைத்துறை.

வரதன்மீனவன்படையிடைவந்துநீர்ப்பந்தர், விரதனுகிநீரருத்தியவினையுரைசெய்தும்
பரதநூலியனடகப்பாவையாளொருத்திக், கிரதவாதஞ்செய்தருளியவாடலையிசைப்பாம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்,

நையுநுண்ணிடையினுளங்நாயகன்கபோலத்திட்ட, கையுகிர்க்குறியுஞ்சொன்னகாரணக்குறியுங்கொண்டு
வெய்யவெங்கதிர்கால்செம்பொன்மேனிவேருகிநாலாம், பொய்யுகத்தவர்க்குத்தக்கபொருந்துருவாகிமன்னும்

அந்தப் பாண்டிவளநாட்டிலே வையையாற்றுக்குத் தென்கரையிலே மதுரைக்குக்கிழக்கே திருப்பூவணமென்று ஒருசிவஸ்தலமுண்டு அந்தத்தலத்துப் பூவணநாதசுவாமிகோயில் மகாஜனங்களும்பரிசாரர்களும் தாசிகளுஞ்செய்த தவப்பயன்போன்றவளாய் பெண்களிற் சிறந்தவளாய் தேவர்களுங்கண்டு மோகிக்கத்தக்க வடிவுள்ளவளாய்க் கடலமுதம்போலுஞ் சாயலுள்ளவளாய் பொன்னனையாளென்னும் பெயர்கொண்டு வீணையிற்பாடல் ஆடல்முதலானவற்றுல் தேவரம்பைகளினு மேம்பாடுடையவளாய் தருமநீதிதவிராமல்நடக்குந்தகுதியுள்ளவளாகையாலே தன்னுடைய தோழிகளுடனே விடியுமுன்னே யெழுந்து வையையினீராடிச் சிவபூசை செய்துகொண்டு பின்பு போய்ப் பூவணநாதனைச் சேவித்து அங்கேநடனஞ்செய்து சிவனடியார்களையே பொருளாகவெண்ணி அவர்களைப்பூசித்து அவர்களை அறுசுவைப்போசனமும் பொசிக்கச்செய்து பின்புதான் போசிப்பதே நியமமாகக்கொண்டு நடந்துவருகிறநாளில் அவளன்பை வெளியிடவேண்டிப் பூவணநாதர் தமது திருவுருவை நூதனமாகபிரதிஷ்டைசெய்விக்க வேணுமென்கிற கருத்தை அவளுக்குக் கொடுத்தருள அவர் தந்த பேரன்பேவடிவாய் மாண்மழுவேந்திய கடவுள்வடிவைக் கருவில்வார்த்துப் பிரதிஷ்டிக்க அந்தப்பொன்னனையா ளென்பவள் தனக்குத்தினந்தினங் கிடைக்கிற பொருள்களையெல்லாம் சிவனடியார் பூசைக்கே செலவாகி மிகுதியாகாமையினுலே கடவுள் திருவுருவையெப்படி காணத்தக்கதென்று பாண்டியனுக்கு உலவாக்கிழி யருளினகடவுளைத் தியானித்துக்கொண்டிருந்தாள் அப்படி யெண்ணுகின்றவள் நினைவுதெரிந்துகூடற்கடவுள் நிறைய விபூதிபூசின மெய்யும் கட்டகமேந்தின கையும் யோகபட்டங்கட்டின இடையும் விபூதிப்பையும் கோவணத்தின்மேலே சூழ்ந்தவுடையும் சிவந்த சடையுங்கொண்ட ஒருசித்தராகி பொன்னனையாள் மாளிகைக்குவந்து தினந்தினம் அவள்வீட்டிற் போசனத்துக்காக வருகிறவர்களுடனே கூடித் திருவமுது செய்யாமல் ஒருபுறத்திலே யொதுங்கி யிருந்தார் அங்கே சிவனடியார்களெல்லாம் அமுதுசெய்து போக தாமொருவரும் அமுதுசெய்யாமல் வேறேயிருக்கின்றவரை வேலைக்காரிகள்கண்டு சுவாமி உள்ளே யெழுந்தருளுமென்ன சித்தர் நல்லது உங்கள் தலைவியை யிங்கே வரும்படி சொல்லுங்களென்ன அந்தஊழியக்காரிகள் சென்று அம்மேவந்தசிவநேசரெல்லாரும் அமுதுசெய்தெழுந்தருளினுர்கள் அவர்களிலொருதம்பிரான் எங்கும் காணக்கூடாதகுணமுள்ளவராய்ச் சிறுநகைகொண்டருளி உன்னைத்தம்மிடத்தே வரும்படி சொல்லுகின்றுரென்று சொல்லக்கேட்டு பொன்னனையாள் நவரத்தினுபரணங்கள் புஷ்பித்த கொம்புபோலே நடந்துவந்துகண்டு நீர்வந்தது நல்வரவல்லவோவென்று துதித்து அருக்கியபாத்திய ஆசமன்னியங்கள்கொடுத்து அவர்திருவடிகள் தனதுமுடியிலே பொருந்தவணங்கி தேவரீர் இங்கே எழுந்தருளுவதற்கு அடியேன் என்ன தவஞ்செய்தேனே வென்று கொண்டாடிசித்தர் திருமேனியும் அவயவங்களினழகும் கண்டு நின்று கைகுவிக்க சித்தர் கிருபாநோக்கங்கொண்டருள உட

னே பொன்னனையாள் அவர் அருள்வலைக்குட்பட்டவளாய் சுவாமி தேவரீர் உள்ளே யெழுந்தருளினால் அடியேனாலாகிய திருப்பணிகள் தேவர் மனதுக்கிசைந்தபடி நடப்பேனென்று மிகவும்வேண்ட சித்தர் தம்முள்ளேநகைகொண்டு நோக்கி ஏடிபெண்ணே என்னகாரணத்தினாலே உன் இடை இளைத்திருக்கிறதுபோலவேநீயும் மிகவும் இளைத்திருக்கிறாயென்று கேட்டருள அதற்குப் பொன்னனையாள் சுவாமி அடியேனுக்கு யாதொருமெலிவுமில்லை ஆனாலும் எங்கள் பூவணநாதசுவாமி திருவுருவைக் கருவினாலேகண்டு பிரதிஷ்டைபண்ண வேணுமென்னுங் கருத்துள்ள எனக்கு தினந்தினங்கிடைக்கிற பொருள்களெல்லாம் உங்கள் பூசைக்கேயல்லது மிகுதியாக வில்லை இதுவே யென்கருத்தென்ன சித்தர் அவளன்பு தித்திக்கக்கேட்டு பெண்ணே நீயோ தேகம் இளமை செல்வம் இவையெல்லாம் நீர்மேற்குமிழிபோல நிலையற்றதென்று தெரிந்தவளாய்த் தருமநிலையானதென்று தெரிந்து அதிலும் சிவதருமமும் சிவார்ச்சனையும் அதிகம் அதிலும் சிவனடியார்பூசையதிகமென்று பூசித்தருச்சிக்கின்றாய் ஆதலால் இம்மைக்குமறுமைக்கு நன்மைகொண்டாய் இனிஇருமைக்கும் உன்பெயராலே விளங்க சுவர்னத்தினாலே கடவுள் திருவுருச்செய்துவைக்க நீவேண்டுகிறபடியே சித்தியாகப்பெறுவை ஆனதினாலே உன்வீட்டிலுள்ள பித்தளை யீயஞ்செம்புமுதலான பலபாத்திரங்களையுங்கொண்டுவாவென்றருள்செய்தார் உடனே சித்தர் சொன்னபடியே பலவகையான நவலோகங்களுங் கொண்டுவந்து சித்தர்முன்னே கலகலவென்னக்குவித்தாள் அப்போது சித்தசாமிதிருநீற்றை அவைகளின்மேலே சிதறித்தூவி அவையெல்லாம் பொன்னாகவெண்ணி ஏடிபெண்ணே இன்றிராத்திரிமுழுதும் இவைகளையெல்லாம் நெருப்பிலே புடமிட்டெடுத்தால் அவ்வளவும் உயர்ந்த பசும்பொன்னாகும் அதைக்கொண்டு பூவணநாதர் திருவுருச் சமைத்துக் கொள்ளென்று சொல்ல பொன்னனையாள் சுவாமி தேவரீர் இன்றை இராத்திரிமுழுதும் இங்கேதானேயிருந்து திருவமுதுசெய்து இதுமுடிந்தபின்பு போகலாமென்றுவேண்ட அதற்குச் சித்தசாமி மீனாட்சியம்மையைப்பிரியாத சுந்தரராகையாலே யாம் மதுரையிலிருக்கிற சித்தரென்றுசொல்லி மறைந்தருளினார். அப்படி யவர்மறைந்தருளினபின்பு சித்தராய் வந்தவர் வெள்ளியம்பலவாணரென்று பொன்னனையாள்தெரிந்து ஐயோ மறைந்தருளினாரோ யென்று கொஞ்சம் தளர்ச்சிகொண்டு ஆனாலும் நமதுகவலையை நீக்கினாரென்று மகிழ்வுகொண்டவளாய் சித்தர் அருள்செய்தபடியே பலவகையான லோகபாத்திரங்களையெல்லாம் நெருப்பிலேயிட அவையெல்லாம் நெருப்பிலே கூடினபின்பு கடவுள் திருவடிநிழலையடைந்தவர்கள் மலவிருளாகிய களங்கநீங்கினாற்போலக் களிம்பெல்லாநீங்கி சுவர்னமாக அதைக்கொண்டு பூவணநாதர் திருவுருக்கண்டு அந்தஉருவின் வடிவழகைப்பார்த்து அச்சோ அழகியபிரானே யென்று அள்ளிமுத்தங்கொண்டு தனது அன்பின்கண்ணே பழகியகடவுளைப் பிரதிஷ்டைசெய்து திருவிழா திருத்தேர் முதலியவைகளெல்லா நடத்திச் சில நாள்கழிந்தபின்பு வீடுபெற்றாள் அன்றுமுதல் பொன்னனையாள் தனதன்பினாலே அந்த விக்கிரகத்தின் கபோலத்திலே செய்த நகக்குறிகொண்டு கலிகாலத்திலே செம்பொன்வடிவுநீங்கிக் காலத்துக்குத் தக்க கோலமாக பூவணநாதர் திருவுருவிளங்குகின்றது.

இரசவாதஞ்செய்தபடலம் - முற்றியது.



முப்பத்தேழாவது

## சோழனைமடுவில்வீட்டியபடலம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

மின்னனையார்பூங்கொன்றைவேணியரிரதவாதம்,பொன்னனையாள்முன்செய்துபோந்ததுபுகன்றேமார்த்தர்
மன்னனைமடுவில்வீட்டிமலரடிக்கன்பனை, தென்னனையமரிற்காத்ததிருவிளையாடல்சொல்வாம்.

எழுசீரடியாசிரியவிருத்தம்.

பிலத்தளவாழ்ந்தகடிமலர்க்கிடங்கிற்பெருந்தகையவிந்தவன்றுகில்பூண்
கலத்தரும்பேழைபடைபரிமான்றேர்கரியெலாங்கவர்ந்துதண்பொருநைத்
தலத்தவன்றங்கணுயகரணியத்தக்கதூசணிகலனல்கி
நலத்தகையவர்பேரருட்கடற்கன்புநதியெனப்பெருகிவீற்றிருந்தான்.

உஅ

இராஜேந்திரபாண்டியன் இந்திரன்முதலான தேவர்களெல்லாந் துதிக்கச் சிவலோகமடைந்தான் பின்பு அவன்புத்திரன் இராஜேச பாண்டியன் அவன்புத்திரன் இராஜகெம்பீரன் அவன்புத்திரன்வங்கியதீபன் அவன்புத்திரன் புரந்தரஜித்து அவன்புத்திரன் வங்கியபதாகன் அவன்புத்திரன் சுந்தரேசபாதசேகரன் இந்தப்பாண்டியன் கூடற்கடவுளுக்கு மிகுந்த அன்புள்ளவனாய்த் தனது கொலைவேலினாலே கொடுங்கோன்மைசெய்கிற குறுநில மன்னர்களை யடக்கி உலகத்தில் உயிர்களாகிய பயிர்களை வளர்க்குநாளிலே பத்துத்தேரும் நூறுயானைகளும் ஆயிரங்குதிரைகளும் பதினாயிரம் வீரர்களுமான இவ்வளவு சதுரங்கங்களைக்கூட்டி இவைகளுக்குத்தக்க சம்பளங்கள்கொடுத்து மிகுந்தபொருள்களெல்லாம் சிறந்தவடிவான சிவனுக்கே கண்டிகை மகுடமுதலான ஆபரணங்கள்செய்தும் கோபுரம் மண்டபமுதலானவைகளுக்கு ரத்தினங்கள்பதித்து இப்படிக்கோயிலுக்கு வேண்டிய திருப்பணிகளெல்லாஞ்செய்தும் வருகிற இவனுடைய சேனைகளின் சுருக்கத்தைத்தெரிந்து ஆயிரங் குதிரைகளுக்கொரு சேவகனென்று சொல்ல வல்லவனாகிய ஒருசோழராஜன் இந்தச்சுந்தரேச பாதசேகரபாண்டியனை வென்று ஜெயங்கொள்ள வெண்ணி வஞ்சிமாலைசூட்டிக்கொண்டு அனேகமாயிரம் ரதகஜதுரகபதாதிகளுடனே கடல்பொங்கிவருவதுபோல வெழுந்து பாண்டிநாட்டைக் குறித்துவர அதுதெரிந்து பாண்டியன் சோமசுந்தரக்கடவுள் சந்நிதியிற்போய் வணங்கிநின்று சுவாமி உம்முடைய திருவருளாலே நான் அரசாட்சி செய்துவருகிறது தெரியாமல் எனது சேனைகளின் சுருக்கத்தைக்கண்டு எனது நாட்டைத் தன்கைவசமாக்கவெண்ணிகாவிரிநாடனாகியசோழன் தனது சேனைக்கடலிலே வடவாக்கினிபோலே மூண்டுவருகின்றான் இதற்குநான் செய்வதென்னவென்று வேண்ட ஆகாயத்திலிருந்து அசரீரியாகநீஎவ்வளவுமஞ்சவேண்டா நாமேபொருதுவென்று உனக்கு வெற்றியுண்டாகச் செய்கிறோமென்று சொல்ல பாண்டியன் கேட்டு சூரியனைக்கண்ட தாமரைபோல முகமலர்ச்சியாய் கடவுள்திருவடிக் கமலங்களை மனத்துள்ளே தியானித்துக்கொண்டு வெளியேவந்து பலவாத்தியங்களுமுழங்கத் தனதுசேனைகளுடனே புறப்பட்டுக்கொல்லிமலைக்கதிபனான சோழன் சேனைக்கடல் முன்னே ஒரு ஆறுபோலச்சென்றாலும் அந்தச்சேனைகள் கண்களுக்குப் பாண்டியன்சேனையும் கடவுளருளாலே ஒருகடல்போலவே தோன்றலாயிற்று அப்போது கூடற்கடவுள் பாண்டியன் சேனைக்கு முந்தி வேதமாகிய குதிரைமேலேறிக்கொண்டு ( மேருவில்லைவளைத்து வாசுகி நாணைப்பூட்டி துளசிமாலையணிந்த அம்பை அதிலேநாட்டி வாயினெருப்பை முப்புரத்திலேமூட்டி வெற்றிகொண்டதாமே ) ஒரு வேடன்வடிவாகிக் காதிலேதந்தக்குழையும் கழுத்திலே முத்துமாலையும் வெட்சிமாலையு மயிலிறகுமுடித்தகொண்டையும் கைகளிலே தந்தக்கடகங்களும் சோழனைக்கொல்லவெழுந்த விடம்போற் கருத்ததிருமேனியும் எமன்போல்விளங்கும் வேலுமாகநிற்க அவனைச்சோழன்கண்டு ஆயிரங்குதிரைக்கொருசேவகன் நான் நீயெவ்வளவென்ன வேடனாகியகடவுள் நீயிவ்வளவுதானே நான் அளவில்லாத குதிரைகளுக்கொருசேவகனென்ன அதுகேட் டஞ்சிநிற்கிற சோழன்முன்னே மின்னலைநீட்டிக்கொண்டு செல்லுமேகம்போலே கடவுள்வேடன் தனதுகைவேலைச் சுழற்றிக் கோபித்து அதிர்ந்துசீற சோழன்பயந்து இனி இவன்கைவேலாலே நாமிறப்பதற்கெவ்வளவுஞ் சந்தேகமில்லையென்றோடினான் அப்போதுகடவுள்வேடன்மறைய பாண்டியன்குதிரையுட னோடுகிற சோழனைத்துரத்திக் கொண்டுபோக சோழன்திரும்பிப் பார்த்து இவன் அந்தவேடனல்லனென்று பயந்தீர்ந்து பாண்டியனைமதுரையளவுந்துரத்தினான் அப்போதோடுகின்ற பாண்டியன் தனது மதுரைக்குள்ளே அவசரமாய் நுழையவெண்ணி வருகிறவேகத்தினாலே ஒருமதங்கொண்டயானைபோலேதவறி ஒருஅகழ்க்கிடங்கிலே விழுந்தான் அப்படிப் பாண்டியன் விழுந்த மேற்றிசை அகழிலே கூடவேதொடர்ந்துவந்து சோழனுங் குதிரையுடனே விழுந்தான் அப்படிவிழுந்த இருவரில் கூடற்கடவுளருளாலே பாண்டியன் யானைபோலெழுந்து கரையில் வந்தான் சோழன் அதிலே அழுந்தியிறந்தான்அப்படி யிறந்த சோழனுடைய ஆடையாபரணங்கள் ரதகஜதுரகபதாதிகளெல்லாங் கொள்ளைகொண்டு தங்கள்கடவுளுக்கு வேண்டியவைகளைக்கொடுத்து கடவுள் திருவடிக்கன்பனாய்ப்பெருகி அரசாண்டிருந்தனன்.

சோழனைமடுவில்விட்டியபடலம் - முற்றியது.

---

முப்பத்தெட்டாவது

# உலவாக்கோட்டையருளியபடலம்.

## எழுசீரடியாசிரியவிருத்தம்.

மின்பனிக்கதிர்வேணிவானவன்மீனவன்றனைமானவேன், முன்பனிக்கவலந்திரித்துமுடுக்கிநேரியடுக்கலான்
பின்பனிக்கமலத்தடத்திறவிட்டவாறிதுபெருமைசா,லன்பனுக்குலவாதகோட்டையளித்தவாறுகிளத்துவாம்.

கலிநிலைத்துறை.

அன்பன்னடியார்க்கினியானனிநாளளந்தல்கித், தன்பன்னியொடுமயலார்சுற்றந்தமரோடும்
பின்பந்நிலையேயிமவான்மகளைப்பிரியாத, வின்பன்னுருவாய்ச்சிவமாநகர்சென்றிறைகொண்டான்.

அந்தமதுரையில் விளங்குகின்ற சோமசுந்தரக்கடவுளுக்கு மிகுந்த அன்பனை ஒருவேளாளன் தருமத்திற்கும் புகழுக்கும் சிறந்தவன் அவன்மனையாள் ஈகையினாலும் கற்பினாலும்சிறந்த தருமசீலையென்பவள் எல்லாரும் நன்குமதிக்கத்தன்கணவனுக்கு இனிமையானவள் அப்படிப்பட்ட மனைவியோடுவொழ்கின்றவன்அநேகம் ஏர்கள்வைத்துஉழவுதொழில்செய்து விளையும் பலன்களைக்கொண்டு அரசருக்குக் கொடுக்கும் பகுதிச்செலவுபோக மிகுந்தவையெல்லாம் தன்மனையாளாலே அறுசுவை யுண்டிகள் சமைத்து சிவனடியார்களைப் பூசித்துப் பொசிக்கச்செய்து விருந்தென்னும் வேளாண்மையும் செய்து சிறந்தவனாய் அவன் அப்படிக்கொடுக்கக்கொடுக்க மணற்கேணிபோல் செல்வம்பெருகி வளர்கிறகாலத்தில் இவனது நற்குணங்களை யெல்லாருக்கும் தெரிவிக்கவேண்டி மதுரேசர் அவனது விளைநிலத்தில் விளைவுகுறையச்செய்தார் அப்படியானாலும்யார்க்கும் இல்லையென்னாமல் சிவனடியார் பூசைமுன்போலவே குறையாமற்செய்து பின்பு தான்கொண்டவிரதத்துக்கு பொருள்போதாமல் தன்உடம்பை வருந்தச்செய்து இதுவாயிலும்நமக்குவேண்டியபொருள்கொடுத்துவந்த சுந்தரக்கடவுள் கடன்படச்செய்து விளைபொருளும் குறையச்செய்தால் நம்மால் என்னசெய்யத்தக்கதென்று நினைத்து சிவனடியார் பூசை நியமத்துக்குத் தடையுண்டாய் மிகவும்வருந்தி தினம்தினம் சிவனடியாரைப் பூசித்துப்பின்பு தான் புசிக்கிறவனாகையாலே ஒருநாள் தானும் தன்மனைவியும் பட்டினியாய் உதராக்கினியாலே புழுங்கி இனி இறந்துபோகத்தக்க இந்த உடம்பினாலே பிரயோசன மென்னவென்று வெறுத்துத் தன்மனைவியுடனே கோயிலுக்குப்போய் இந்தச்செய்தியைக் கடவுளுக்குத்தெரிவித்துப் பின்பு நாம் இறந்து போவதே துணிவென்று துணிந்து வேதத்தலைபோலும் கோயிலில்விளங்குகிற கடவுள் சந்நிதிமுன்னேவணங்கி நின்று தேவர்கள்பிழைக்க நஞ்சுண்டுகொத்த கடவுளே உன்னுடைய மெய்யன்பர்பூசைக் கிடையூறாய் எம்முடைய விளைநிலமெல்லாம் விளையாமற்போயின கடனும் மிகுதியாயின இனிக் கடன்கொடுப்பாரு மில்லை ஆதலால் இனியாரையாகிலும் கடன்கொடுக்கும்படி செய்தீரேயானால் இந்தவுடம்பை வைத்திருப்போம் அப்படிச்செய்யாவிட்டால் இந்த உடம்புச்சுமையைத் தாங்கமாட்டோமென்று மிகவும்வேண்டும்போது கடவுள் நீங்கள் அஞ்சவேண்டாம் உங்கள் வீட்டில் நல்லசம்பாநெல்லுக்கோட்டையிருக்கச்செய்தோம் அந்தநெல்லுக்கோட்டை நீங்கள் எடுக்கஎடுக்கக் குறையாதிருக்கும்அதைநாள்தோறும் பூசைபண்ணி அதில்வேண்டிய நெல் எடுத்துக்கொண்டு தினம் நமதன்பர்களுக்கும்யார்க்கும் அன்னதானமுதலிய பலவித தர்மங்களும் செய்து கொண்டிருங்கள் பின்பு வீடுங் கொடுக்கிறோமென்று ஆகாயவாக்காகச்சொல்ல அந்தத் திருவாக்கைக்கேட்டு ஆனந்தபரவசராய் வேதப்பொருளான கடவுளை வணங்கித் துதிசெய்து பின்புதங்கள் வீட்டுக்குவந்து முன்னே தேடின தவப்பயன்போல கடவுள் அருளின உலவாக்கோட்டையைக்கண்டு மகிழ்ந்து அந்தக்கோட்டையைக் கடவுளாக எண்ணி தினம்தினம்சந்தனபுஷ்ப தூபதீபங்களால் ஆராதனைசெய்து உணவுக்கும் அதற்குவேண்டிய பலவிதச் செலவுகளுக்கும் அதுகொடுக்கப்பெற்றுச்சிவனடியார்களுக்கும் வைதிகர்களுக்கும் தென்புலத்தார்தெய்வம் விருந்து சுற்றம் முதலானயார்க்கும் மேகம்போல வரையாதுகொடுத்து குபேரன்போல வாழ்ந்து பின்பு தானுந்தன்மனைவியும் சிவலோகஞ்சேர்ந்தார்கள்.

உலவாக்கோட்டையருளியபடலம் - முற்றியது.

முப்பத்தொன்பதாவது

# மாமனாகவந்துவழக்குரைத்தபடலம்.

### அறுசீரடியாசிரியவிருத்தம்.

தாமநாறிதழியார்தந்தமர்க்கன்பன்வறுமைப்பட்டோ
னுமநாளுலவாக்கோட்டையருளியமுறையீதையன்
றேமனுண்முலைத்தீந்தார்ச்சிறுதகைவணிகற்காக
மாமனாம்படிவங்கொண்டுவழக்குரைவண்ணஞ்சொல்வாம்.

### கலிநிலைத்துறை.

பூதநாயகன்பூரணசுந்தரப்புத்தேள், பாதசேகரன்வரகுணபாண்டியன்புயத்தி
லோதநீருலகின்பொறைசுமக்கவைத்தும்பர், நாதர்சேவடித்தாமரைநகைநிழலடைந்தான்.

அந்தமதுரையில் வணிககுலத்திலே பிறந்து குபேரன்போல் செல்வத்தையுடையவனுய்த் தனபதியென்னும் பெயர்கொண்ட ஒருவனும் அவன் மனைவியாகிய அருந்ததிபோலும் கற்பும் மகாலக்ஷுமியையொப்பான அழகுமுடைய சுசிலையென்பவளும் நெடுங்காலமாக பிள்ளையில்லாமல்வருந்தி தனபதியென்பவன் தன்தங்கைபிள்ளையாகிய மருமகனை தனக்குப் பிள்ளையாகக்கொண்டு தன்மனைவியிடத்தில் மகிழ்ந்து கொடுக்க அவளும் வணங்கி வாங்கிக்கொண்டு அந்தப்பிள்ளைக்குப் புனையவேண்டிய ஆபரணங்கள்புனைந்து அன்புடனே நன்ருகவளர்த்துவருங்காலத்தில் தனபதியென்பவன் பிள்ளையில்லாதவளானுலும் தன்மனைவியிடத்து அதிகமோகங்கொண்டு தன்தங்கைமேல் நாள்தோறும் மனைவிநிமித்தமாக அதிகசண்டைசெய்து விரோதித்துவரஅக்காலத்தில் ஒருநாள் தங்கையானவள் தமையனைக்கோபித்து பிள்ளையில்லாதமலடனுனவுனக்கு என்மகனல்லவோ இவ்வளவுபெருமையுண்டாகி இம்மைப்பயனும் மறுமைப்பயனும் அடைய யோக்கியனுனுயென்ன அதுகேட்டதனபதி மிகவும்நாணி இனிவருபிறப்புக்காயினும் பிள்ளையுண்டாகத் தவஞ்செய்வேனென்று நினைத்துத் தன்செல்வமெல்லாம் தன் மருமகனுக்கே ஆகச்செய்து காட்டில் தவஞ்செய்யப்போயினுன் பின்புஅப்படி தவஞ்செய்யப்போனவன் நெடுங்காலம் வராமலிருக்க அவன் தாயாதிகள் அவன்மருமகன்கொண்ட செல்வமெல்லாம் வழக்கிட்டுப் பறித்துக்கொண்டார்கள் அப்படி விளைநிலங்கள் அடிமைகள் ஆபரணங்கள் திரவியங்கள் பசுக்கள்முதலான எல்லாமிழந்து சிறகொடிந்தபட்சிபோலத் தளர்கின்ற மகனும் தாயும் ஐயோசார்பில்லாதவர்களுக்கெல்லாஞ்சார்பான ஆதரவாயிருக்கிற கூட்றகடவுளே உன்திருவடிகளேசரணமென்று இந்திரவிமானக் கோயிலுக்குள்வந்து சுந்தரேசர்திருவடிகளைத்தொழுது துதித்து எவர்க்கும் மாதாபிதாகுருதெய்வமுமாகிய நீரே எங்களுக்கும் ஆதரமாகவேண்டுமென்றுபிரார்த்தித்துச்சுவாமி என்தமையனை தனபதி தனக்குப்பிள்ளையில்லாததினுலே என்மகனை தனக்குமகனுகக்கொண்டு எல்லாருக்குமுன்னே தன்செல்வமெல்லாம் கொடுத்துத் தவஞ்செய்யப்போயினுன் அப்படி அவன் கொடுத்த செல்வத்தை தாயத்தார்கள் தங்கள் பலத்தினுலே பறித்துக்கொண்டார்கள் ஆதலால் ஒருத்தியாகிய என்மகன்மிகவுஞ்சிறியவனுய் வேறே ஆதரவுமில்லாமல் இருக்கிறதினுலே நானிப்படி வருந்துகிறது தயாநிதியாகிய உமக்குத் தெரியவில்லையோஎன்று பின்னும் பூமியில் படியவிழுந்துவணங்கி அப்படியேசோர்ந்து கடவுள் அருளாலே கொஞ்சம் நித்திரைகொண்டாள் அப்படிநித்திரைசெய்கிறவள் கனவிலே சோமசுந்தரக்கடவுள் ஒரு பிராமணவடிவுகொண்டுவந்து ஓய் வணிகப்பெண்ணே நீ நாளைவுதயமானவுடனேஉன் தாயத்தாரை அரசனுணையிட்டு மறித்துச்சபையேற்றி வழக்கிட்டுக்கொண்டிரு நாம் அங்கேவந்து பெரியோர்களெல்லாருஞ் சம்மதிக்க உன்வழக்கைத் தீர்த்துத் தருகிறேம் நீயெழுந்து போவென்றருள்செய்ய அந்தச்செட்டிச்சி விழித்தெழுந்து மிகவும்அதிசயித்துயாருமில்லாதவர்களுக்குத் தெய்வமேதுணையென்பது மெய்யேயென்று மீனுட்சி சுந்தரேஸ்வரரை வணங்கித்துதித்து தன்மகனுடனே வீட்டிற்கு வந்து நித்திரைசெய்து விடிந்தபின் வெள்ளியம்பலவாணர் கோயிலில்வந்து வணங்கிக்கொண்டு அவரருள்செய்தபடியே கொடுவழக்கிட்டு வென்றுகொண்ட தாயத்தார்களைத்தடுத்து நீங்கள்யாரும் அடுப்பில் நெருப்பிடக்கூடாது இந்த இடம்விட்டு அப்பால் ஓரடிஎடுத்துவைக்கக்கூடாது அநியாயவழக்கிட்டு உங்களைவென்று போகொட்டேன் இதோ எல்லாருங்கேட்க அரசன் ஆணையிட்டேன்இனி நியாயசபைக்குச்சென்று அந்தத் தருமநீதியார் தீர்த்தபடி கேட்டு எங்களுடைய பொருள்களைக் கொடுத்துப்

போகவேணுமென்று தாயத்தார்கள் எல்லாரையும் மறித்தார் அப்படிமறித்தபோது அந்தத்தாயத்தார்கள் துர்வார்த்தைகளாலே வைதுதள்ளி மகனையும் தாயையும் அடித்தார்கள் அப்படி அடிக்கும்போது கூகூகூவென்று கூச்சலிட்டுக்கொண்டுபோய் நியாய சபையார்முன்னே முறையிட்டாள் அதைக்கேட்ட நியாய சபையார் கூட அனுப்பின சேவகரோடே தனபதிதங்கையானவள் தாயத்தார்களைக் காட்டி சபைக்குக்கூட்டிவந்தாள் அந்தவேளையில் பார்வதி சமேதரானவெள்ளியம்பலவாணர் காதிலே அதிகவிலைபெற்ற குண்டலங்களும் தோள்களிலே ரத்ந கேயூரங்களும் கழுத்திலே ரத்தினகண்டிகையும் கையிலே வயிரமோதிரமும் விளங்க அந்தத் தனபதிபோலே மேட்டிமையான நடைகொண்டுவந்து கண்டு வாடினதாமரைபோலே பங்காளிகளுக்கு முகங்காட்டி வெறுத்தும் மருமகனைத்தேடி கண்ணருள்கொண்டு பார்த்தும் தன் உள்ளக்குறிப்பைத் தெரிவித்து நியாயசபைமுன்னே நின்று ஓ ஓ இங்கேஅரசனில்லையோ அறிந்த பெரியோர்களில்லையோ ராஜநீதிகோணலாமோ நூல்களிற்சொல்லுகின்ற தெய்வமும் கிடையாதோ நிலையானதருமம் எங்கேபோய்மறைந்தது என்று பேசுகிற தனபதிசெட்டியாரை வஞ்சனைபண்ணின தாயாதிகள் கண்டு மனங்கலங்கி முன்வலிந்துவென்ற உறுதி அழிந்து பயமும் வெட்கமும் நிறைந்து நிற்க அப்போது மாமனாகி வந்த செட்டியார் மருமகனைத்தழுவி தங்கைக்கு ஆதரவு சொல்லி சாமவேத கீதம்போல ஐயையோ இப்படி அநாதிகளாய்ப் போனீர்களே யென்று அழ தங்கையும் மருமகனும் அழுது பாதங்களில் கண்கணீராட்டதாமும் மருமகனைக் கட்டிக்கொண்டு அழுது தங்கைமேலும் மருமகன்மேலும் கண்ணீராட்டி மருமகனைப்பார்த்து வியசனமாய் மார்பிலே நானணிந்த ஐம்படையைக்கண்டிலேன் கால்களில் சிலம்பையும் கண்டிலேன் தோளில்மதாணியுங் கண்டிலேன் காதில் கடுக்கனையுங் கண்டிலேன் முகத்தில் அசைகிற சுட்டியையும் கண்டிலேன் ஐயோ வெறு உடம்பைத்தானே காண்கிறேன் இந்தப்பங்காளிகளுக்கு பிள்ளை நகைகள் என்னவிலைபெறுமென்று ஆசைப்பட்டுப் பறித்தார்கள் என்று நியாய சபையார் எல்லாருங் கேட்க வாய் விட்டு அழுது தங்கையையும் அழுகை மாற்றி தமது கையாலே முதுகைத் தடவிக்கொடுத்து என் கண்முன்னே நீங்கள் ஏன் அழுகிறீர்கள் இந்த அநியாயம் பண்ணினவர்கள் வழக்குநானுள்ள அளவிலும் ஜெயங்கொள்ளுமா உலகத்திலே நான்சம்பாதித்த பொருள் விசுவாசபாதகம் பண்ணியோ இம்மி அரிசியுங் கொடாமல் அதிக வட்டிவாங்கியோ இப்படி ஆச்சுது ஆனாலும் நம்முடைய பொருள் நம்மை விட்டுப் போகுமோ வென்று கோயில் மதுரேசரைப் பார்த்துத் தலைமேல் கைகுவித்து ஓ ஓ மாணிக்கம் விற்ற எங்கள் குலத்துசிங்கஞ் செட்டியாரே ஙங்கள் வழக்கை இந்த நல்லபெரியோர்கள் முன்னே நீரே தீர்த்துத்தரவேண்டுமென்று பிரலாபித்து அழுதார் மறுபடியும் அந்தக்கள்ள வஞ்சகச்செட்டியார் சினந்து நியாயச் சபையாரை நோக்கி தராசுமுனைபோல் எங்கள்வழக்கையும் இந்தப்பங்காளிகள்வழக்கையுந் தீர்த்துத்தரவேண்டுமென்றும் நகைத்து மூத்தபுலி போலேநின்றுசொல்ல சான்றோர் நடுங்கி இருதிறத்துவழக்கையும் தாங்களெடுத்துப்பேசி விசாரித்துப் பங்காளிகள் வழக்கிடுவது குற்றமென்ன. பங்காளிகள் உறுதிமான்கள்போல-இவர் தனபதிசெட்டி அல்லவென்றுசொல்ல செட்டியாராகிய சுவாமி சபையைப்பார்த்து இரண்டுகையையுங் கொட்டிச்சிரித்து அந்தச்செட்டிகள் குடிப்பேர் பட்டப்பேர் காணிப்பேர் தந்தைபேர் தாய்பேர் மாமன்பேர் மாமிபேர் பங்காளிகள்பேர் இவர்களைப்பெற்றவர்கள்பேர் பிள்ளைகள் உடன்பிறந்தார் பெண்டாட்டிகள் உறவினர் குணம் நடக்கை அடையாளம் இவைகளில் எவ்வளவும் தப்பாதபடிசொல்ல சபையார் எல்லாரும்பார்த்து தனபதிசெட்டியார் இவரேயென்று தீர்ப்புக்கொடுக்க பங்காளிகள்வழக்கு இழந்து இந்தத்தீர்ப்புக்கு வேறுசொன்னால் வேப்பமாலையணிந்த பாண்டியன் தெண்டிப்பானென்று பயந்து வீட்டுக்குப் போய்வருகிறேனென்றும் குளத்துக்குப்போய்வருகிறேனென்றும் சலோபாதைக்குப்போய் வருகிறேனென்றும் காற்றடிக்க மழைகலங்கினாற்போல் கலைந்துபோனார்கள் அப்போது நியாயசபையார் தனபதிசெட்டியார் மருமகனுக்கே அவர்செல்வமெல்லாமென்று தீர்ப்புச்செய்து வாங்கிக் கொடுத்தார்கள் அவர்கள்கொடுத்தவுடனே மாமனாகிவந்து வழக்குரைத்தசுவாமி கோயிலுக்குள் எழுந்தருளினார் அது தெரிந்துவந்தவர் கூடற்கடவுள் அல்லவோவென்று செட்டிப்பிள்ளைக்குப் பாண்டியன் மனமகிழ்ச்சியாய் அநேகம் சிறப்புகள்செய்து கடவுள்கோயிலை கனகமயமாய்புதுக்கி தன்புதல்வனாகிய வரகுணபாண்டியனுக்கு தன் அரசாட்சியைக்கொடுத்துப் பின்பு ஸ்வாமி திருவடிக்கமலங்களைச்சேர்ந்தான்.

மாமனாகவந்து வழக்குரைத்தபடலம் – முற்றியது.

---

நாற்பதாவது

# வரகுணனுக்குச்சிவலோகங்காட்டியபடலம்.

### எழுசீரடியாசிரியவிருத்தம்.

பண்கொண்டவேதமுதலிடையீறுநாடரியபரமாமனாகியொருவணிக
னெண்கொண்டகாணிபொருள்கவர்ஞாதிமாதுலனாயெதிரேறிவென்றபடியீதுவாந்
தண்கொண்டநேமிவரகுணதேவனெய்துபழிதன்னைத்துடைத்தனையமனவன்
கண்கொண்டுகாணவுயர்சிவலோகமதுரைதனில்வருவித்தகாதையினிமொழிவாம்.

கொச்சகக்கலிப்பா.

அன்னதனித்தென்மதுரையன்றுதொடுத்தின்றெல்லை, தன்னனையதாயகிலதலங்கள்சிகாமணியாகிப்
பொன்னகரின்வளஞ்சிறந்துபூவுலகிற்சிவலோக, மென்னவிசைபடப்பொலிந்ததேழிரண்டுபுவனத்தும்.

வரகுணபாண்டியன் இந்திரன்போன்று வேள்விகள்செய்து நிலைகொண்டவீரமும் சூரியன்போல்பிரதாபமும் மன்மதன்போ லழகுங்கொண்டவனாய் இயமானன் சந்திரன் சூரியன் நிலம் நீர் தீ காற்று ஆகாயமென்கிற எண்வகையுருவான சோமசுந்தரக்கடவுளை மனம் வாக்குக்காயமென்னும் திரிவிதகரணங்களாலும் குறையாதவழிபாடுசெய்யும் அன்புகொண்டு வேதாகமங்கள்முதலிய கலைஞானங்களும் யாகாதிபலகிரியைகளும் உலகத்திலேநிலைபெற்றுவிளங்கச்செய்து நான்முகனாகவும் அஷ்டலட்சுமிகளும் நித்தியவாசம்பண்ணப் பெற்றிருத்தலாலே திருமாலாகவும் ஜிதேந்திரியனாய் முழுதுந்தெரிந்ததினாலே பரமசிவனாகவும் உலகாண்டுவரும்போது ஒருநாள் தங்குவேட்டையாடிவரவெண்ணி வனங்களெல்லாஞ்சென்று மிருகங்களைத்தேடி புலி யானை பன்றிகளைக் கலைத்தோட்டிச் சூரியன் அஸ்தமிக்குமளவும் வில்லும் அம்புங்கொண்டு திரிந்துகொன்று பட்டணத்துக்குத் திரும்பும்போது வாயுவேகங்கொண்டுசெல்கிற குதிரைமேலேறிவர அங்கேவரு வழியிலே ஒருபிராமணன் மயங்கிச் சோர்ந்து முகத்திலே குறுவேர்வை தோன்ற நித்திரைசெய்ய அவன்மேலே இவன் ஏறிவருகிற கடுநடைப்புரவி கால்களை வைக்க பிராமணனிறந்தான் அதுதெரியாமல் வரகுணபாண்டியன் அம்புபோல்வருகிற குதிரையுடனே தன் அரண்மனைவந்து சேர்ந்துநிற்க குதிரைக்காலினாலே மிதிபட்டிறந்துபோன பிராமணனை அவன்பந்துக்கள் எடுத்துக்கொண்டுவந்து பாண்டியன்கடைத்தலையிலிட்டு அங்கே நடந்தசெய்தியைச் சொல்ல பாண்டியன்நினைத்துணர்ந்து எடுத்துவந்த பிராமணர்கள்கையிலே வெகுதிரவியங்களைக்கொடுத்து இறந்தவனுக்கு மயானவினைகளைமுடிக்கச்சொல்லி அனுப்பினான் பின்பு அந்தப்பிராமணக்கொலை பாண்டியனைக் கொஞ்சமாயினும் விடாமல் பிடரியைப்பிடித்துக்கொண்டது அப்படி அந்தப்பழிவிடாமற்பற்றிக்கொண்டதுதீர வேதப்பிராமணர்களுக்கு அநேக தானதருமங்கள்செய்து வன்னி அரசு வேம்புகளைப் பிரதக்ஷிணஞ் செய்தும் அறுகம்புல்லைப் பறித்துக்கொண்டுவந்து பசுக்கள்வாயிலுண்ணக் கொடுத்தும் அகமருடணஸ்நானங்கள் ஓமங்கள்செய்தும் பஞ்சகௌவியம் பசுவின்கொம்புதோய்த்த நீர் பருகியும் இன்னம் அநேகதானங்கள்செய்தும் அந்தப்பழிநீங்காமல் பின்னும் பலமாக நெருப்பிலே நெய் வார்த்தாற்போலமூண்டு வரகுணன் கண்ணுக்குத் தோற்றவளைந்துசூழ்ந்தது எப்படியென்னில் அழும் பெருமூச்சுவிடும் கையெறியும் மலைபோலுயரும் குறுகும் கோபித்துமுழங்கும் முன்னும்பின்னும் பக்கங்களுந்தொடரும் சிரிக்கும் பகுவாயைமெல்லும் விலகும் கிட்டிவரும் பழிதாவென்று கோபித்து எதிர்நின்றுபோராடும் இப்படியாக வரகுணபாண்டியன் அழுக்கடைந்தமாணிக்கம்போலவும் பாம்புவிழுங்கின சந்திரன்போலவும் ஒளிமழுங்கி பெருநுளம்புண்ட விளங்கனிபோல உள்ளறிவின்றித் துன்புறுவது கண்டு வேதப்பிராமணர்கள் ஐயா நமது கூடற்கடவுளைத் தினம் ஆயிரத்தெட்டுப்பிரகாரம்பிரதக்ஷிணஞ் செய்தாயானால் அக்கடவுளே உன்பழியைத்தீர்ப்பார் அல்லாமலும் உறுதியாய் அப்படி பத்துநாள்வலஞ்செய்துவந்தால் கடவுளே அதற்கு வழிகாட்டுவாரென்று சொல்ல வரகுணபாண்டியன் கடவுள்கோயிலுக்குள்ளேபோய் இந்திரன்பழியும் மஹாபாதகமுந்தீர்த்த கடவுளே என் பழிபாவங்களையும் தீர்க்கவேணுமென்று வணங்கித் துதித்து பெரியோர்கள் சொன்னபடியே வலஞ்செய்ய அப்போது கடவுள் ஆகாசவாணியாக பாண்டியா நீ செய்யும் வலத்துக்காக நாம் மிகவுஞ்சந்தோஷித்தோம் எவ்வளவும் இந்தப்பழிக் கஞ்சவேண்டாம் உன்னுடனே சோழன் சண்டைசெய்யவருவான் அவனோடு நீயுஞ் சண்டைக்கெதிர்ப்பாய் அப்போதுசோழன் உனக்கு முதுகிட்டோடுவான் நீயவனை எட்டிப்பிடிப்பதுபோலே துரத்திக்கொண்டு பின்னே ஓடும்போது எம்மையே யாம் அர்ச்சனைசெய்துகொண்டிருக்கிற தலத்துக்கு

ச்செல்வாய் அப்போதங்கே உன்பழியைத் தீர்க்கி
ரோமென்றுசொல்ல பாண்டியன் மீனாக்ஷிசுந்தரே
சர் திருவருளை மிகவும் புகழ்ந்துகொண்டு தன்கோ
யில்போயிருக்கும்போது சிலநாளைக்குப்பின் சோழ
ராஜன் புலிக்கொடி கட்டிவருகிற சேனைகள்சூழக்கட
ல்போலப் பலவாத்தியங்களு முழங்கப் பாண்டியனு
டெவந்துசூழ பாண்டியனுந் தனது சேனைகளுடனே
சோழன் சேனைகளுடனேயெதிர்த்து யுத்தம்பண்ண
மந்தரகிரியாற் கலங்கின கடல்போலே சோழன்சே
னைகள்கலங்கியோட சோழனும்நாணி முதுகிட்டோ
டும்போது வரகுணபாண்டியன் அவனைப்பின்பற்றி
ச்சென்று காவிரிநாட்டிலேவந்து பூசத்துறையிலே
ஸ்நானம்பண்ணிக் காவேரித் தென்கரையிலே வாச
ஞ்செய்கிற இடைமருதப்பரைக்கண்டுசேவிக்க கிழ
க்குவாயிலைக்கடந் துள்ளேபோகும்போது பாண்டி
யனதுபாசமும் பழியும் வெளியே நின்றன தெய்வம
ருதிலே வேதவண்டுகள்பாடிமொய்க்க விளங்குந்தே
னைக் கண்ணாரப்பருகி அழலைச்சேர்ந்த வெண்ணெ
ய்ப்பாவைபோற் கரைந்து அறிவுமயமாய் வரகுண
பாண்டியனின்று.

நிராமயபரமானந்தநிருத்தநான்மாடக்கூடற், பராபரவிமையாமுக்கட்பகவபார்ப்பதிமணாள
புராதனவகிலநாதபுண்ணியமருதவாண, வராவணிசடையாவென்றென்றளவிலாத்துதிகள்செய்தான்.

அப்படித்துதிசெய்கிற பாண்டியனைப்பார்த்து
மருதப்பர் பாண்டியனே கிழக்குவாயிலிலேதானே
பிராமணக்கொலை நின்றுவிட்டது இனிநீ அந்தவழி
யேபோகாமல் மேற்குவாயில்வழியாக நமதுமதுரை
க்குப்போவென்றருள்செய்யவரகுணபாண்டியன் அ
ந்த அருள்வாக்கைக்கேட்டு மருதமரத்தைவலஞ்செ
ய்து நீங்காத அன்பினாலே அடிக்கடி வாயில்களெல்
லாம் விழுந்துவிழுந்து சேவித்து மேலைவாயில்வழி
யே போகின்றவன் தன்பெயராலே கோபுரஞ்செய்
து சிலநாள் அங்கிருந்து கோயில்திருப்பணிகளெல்
லாஞ் செய்து தென்றிசையைநோக்கிச் செல்லும்
போது வழிகளிலுள்ள சிவஸ்தலங்களெல்லாம் கண்
டு வணங்கிக்கொண்டு மதுரைபோய்ச் சேர்ந்து தன்
பழியைத்தீர்த்தாண்ட சோமசுந்தரக்கடவுள் பாதக
மலங்களை தினந்தோறும் வந்து வணங்கித் துதித்து
இப்படியாக உலகமெல்லாம் தனதுசெங்கோல் செ
லுத்திவருகிற நாளிலே வரகுணபாண்டியன் பெரி
யோர்களாலே அமுதம்போலும் சிவன் புகழைப் ப
லவாகக்கேட்டு வேதம் ஆகமம் புராணம் மிருதிகள்
முதலான நூல்களெல்லாம் உலகங்களுக்கெல்லாம்
மேலானது சிவலோகமென்பதை உட்கொண்டு அந்
தச்சிவலோகங் காணவேண்டிய கருத்துடனே சிவ
ராத்திரியினன்று கடவுள்கோயிலுக்குள்ளேபோ
ய் மீனாட்சிசுந்தரேசனைவணங்கி சுவாமி இந்தப்பிற
விக்கடலைக்கடந்து உமது பாதநிழலை யடைந்தவர்க
ள்சூழ நீ சிவலோகத்தில் வீற்றிருப்பதைத் தெரிசி
க்கவேணுமென்னும் ஆசை எனக்குமிகுந்திருக்கிற
தினாலே அருள்செய்யவேணுமென்ன அன்புக்கெளி
யரான வெள்ளியம்பலவாணர் அந்த உலகத்தை இ
ங்கேவருவித்து இவனுக்குக் காட்டவேணுமென்று
திருவுள்ளங்கொள்ள உடனே சிவலோகந் தெரிந்து
சூரிய சந்திரர்க ளெல்லா மின்மினிபோ லொதுங்க
கோடி சந்திரமண்டலங்கள் ஒன்றாய்க் கூடிவந்தாற்
போல ஆகாயத்திலிருந்து சிவலோகங் கீழேயிறங்க
கடவுள் நந்திதேவரையழைத்து எம்மிடத்தில் அன்
பு மிகுந்த வரகுணபாண்டியனுக்கு அவனாசைப்ப
ட்டபடியே சிவலோக முழுதுங் காணக் காட்டென்
றருள்செய்ய வேத்திரப்படைகொண்ட நந்திதேவர்
தொழுது வந்து வரகுணபாண்டியனை வாவென்று
கூட்டிக்கொண்டுபோய் திருமாலும் நான்முகனும்
வேதங்களும் அளந்தறியக்கூடாத சொயம்பிரகாச
சூரியனை கடவுளாளுகின்ற சிவலோகம் இதுதா
ன் பாரென்றுசொல்லுகின்றார் கருப்பூரவாசனை பரி
மளிக்க இளந்தென்றல்வீச அரும்புகள் விண்டு ஆ
யிரம்யோசனை தூரம் வாசம் வீச வெண்டாமரைக
ளும் செந்தாமரைகளும் பூத்துவிளங்குகின்ற ஓடை
களும் பக்கங்களிலுள்ள யாறுகளும் அளவில்லாத
உருத்திரகணிகைகள் தங்கள் மதுரவாயைத்திறந்து
தேன்போற்பாடுகின்ற ஏழிசைகளும் யாழிசைகளு
ம் மலர்ந்த பூந்தருக்களிலே வண்டுகள்பாடு மிசைக
ளும் தும்புரு நாரதர்பாடு மின்னிசைகளுமே எங்
கெங்குமாய் அமுதவாவிகளும் பொற்றாமரைக்குள
ங்களும் குயில்கள்கூவுகின்ற தேன்சோலைகளும் அ
ஞ்ஞான விருள்போன தேவர்கள்வாழுமிடமும் திரு
ப்பாற்கடல்போன்ற அகழிகளும் பொன்னாலாகிய
மதில்களும் கோபுரங்களும் மிகுந்த நன்மைகள்விள
ங்குகின்றவீதிகளும் நவரத்தினகஜிதமான மாளிகை
களும் சூளிகைகளும் புதிது புதிதாக நாள்தோறும்
உண்ணக்கிடைத்த நால்வகை யுண்டிகளும் சந்தன
கந்தபுஷ்ப தாம்பூலங்களும் செம்பொன்மாலைகளும்
வீணைப்பாடலும் ஆடலுஞ் செய்கின்ற சித்திரப்பா
வைபோன்ற பெண்கள்கூட்டங்களும் உருத்திரப்பெ
ண்களோடுகூடிவாழு மாளிகைவரிசைகளும் அவர்க
ள் செல்வங்களும் போகங்களுந்தெரியக்காட்டிநான்
முகனிடமிது திருமால்வாழ் பரமபதமிது இவைக
ளெல்லாங் கடவுள்வடிவுகொண்ட உருத்திரர்கள்வீ
தி திக்குப்பாலகர்களுறைவிடமிவை விடியுமுன்னே
யெழுந்து நீராடி நமது கடவுள்கோயிலுக்குத் திரு

வலகுபரிமாறி நந்தவனங்களைவளர்த்து ஆய்ந்து பூவெடுத்து சிவன்றிருநாமங்களைக் காதில்கேட்டு உலகவாணராகிய சாலோகம்பெற்று வாழ்கின்றவர்களிவர்கள் பரிசுத்தாந்தக்கரணராய்ப் பஞ்சசுத்திகளுஞ்செய்துகொண்டு உள்ளும்புறமு மொத்த அன்பினராய் விதிப்படி சோடசோபசாரங்களும் திரிகரணசுத்திமாய்ப் பூசித்துக் கடவுளருகேயிருக்கின்ற சாமீபம் பெற்றவர்களிவர்கள் கிளம்புகின்ற வாயுவினாலே அக்கினியை உயரச்செய்து மேலே நெருங்கிப் பிங்கலைநாடிக்கும் இடைநாடிக்கும் நடுவே சிந்துகின்ற சந்திரமண்டலத்தில் விளைந்த அமுதரஸத்தைப் பானம்பண்ணி நமதுகடவுள் வடிவை நெற்றியென்கிற புருவமத்தியத்தின்மேலே தியானஞ் செய்து அக்கடவுளது சாரூபத்தைப் பெற்றவர்களிவர்கள் கடவுள்விஷயமாக வேள்விகளைச்செய்து முடித்துவந்த வேதியர்களிவர்கள் தண்ணீர்ப்பந்தல் முதலான முப்பத்திரண்டு தருமங்களும் புகழும் நிராசையாகச் செய்துவந்தவர்களிவர்கள் வேதாகமப்படியே விபூதியணிந்து கடவுளது பஞ்சாக்கரத்தைச் செபித்துச் சிவபுராணங்கள்கேட்டு வினைவலிகடந்த சிவபத்தர்களிவர்கள் வேதத்திலே சொல்லுகின்ற சதஉருத்திர மந்திரத்தைச் சொல்லிக்கொண்டு விபூதிருத்திராக்ஷமாலை யணிந்தவர்கள் யாரானாலும் அவர்கள் குறி குணம் குலம்பாராமல் அவ்வன்பர்களையே சிவனாகவெண்ணி பத்திசெய்து பிறவிவேராறுத்துவந்தவர்களிவர்கள் பஞ்சகௌவியங்களால் அபிஷேகங்கொள்ளுகிற கடவுளேசிவமென்று அந்தஞானோபதேசஞ்செய்தும் சிவதருப்பணஞ்செய்தும்சாமகானஞ்செய்தும் கோயிலிலாலயஞ்செய்து சிவலிங்கஸ்தாபனஞ்செய்தும் பிறவிதீர்ந்துவாழ்கிற உத்தமர்களிவர்கள் சிவார்ச்சனை செய்பவர்களுக்கு வேண்டியவைகளைச்செய்தும் சிவனடியார்களையே சிவனாகவெண்ணி அறுசுவையமுதமுண்பித்துப் பூசித்துச் சிவனடியார்க்குத் திருப்பணிகள்பலவுஞ்செய்துமேம்பட்டவர்களிவர்கள் சோமசுந்தரக்கடவுளுக்கு ஆலயமுதலிய திருப்பணிகளும் அருச்சனையும் நிரம்பச்செய்து பூதிசாதனப்படியே இந்த மதுரையையாண்டுசிவலோகஞ்சேர்ந்த உன்குலத்தரசர்களிவர்கள் என்று பிரம்பாலே குறித்துக்காட்டி. நந்திதேவர் பின்பு சிவனடியார் கூட்டத்தையுந் தெரியக்காட்டிச் சொல்ல வரகுணபாண்டியன் அங்கங்கேநின்றுவணங்கிவணங்கித் தலைமேற்கைகுவிக்க பின்பு கிரமப்படியே நந்திதேவர் தேவர்நாயகனான கடவுள் சன்னிதிமுன்னே கொண்டுபோய்விட்டார் அங்கே வேதங்களும் ஆகமங்களும் வடிவுகொண்டு இருபுறத்திலும் துதிக்கவும் தும்புருவும் நாரதனும் வீணைகள் பாடவும் வண்டுகள் மொய்த்துப்பாட அசைகின்ற பூங்கொம்புகள்போலே அரம்பையர் நடனஞ்செய்யவும் சேவிக்கவந்ததேவர்கள் இடம்நெருங்கிநிற்கவும் யானைமுகக்கடவுளும் முருகக்கடவுளும்வீரபத்திரசுவாமியும் விழுந்துவணங்கிநின்று ஏவினபணி கேட்டு நிற்கவும் இடையிற்கட்டித் தொங்குகின்ற சோமனை ஒதுக்கிக்கொண்டு இரண்டுகைகளாலும் வாயைமூடிக்கொண்டு பிரமாவிஷ்ணுக்கள் ஒதுங்கிநின்று தங்கள்குறைகள் சொல்லவும் இந்திரன்முதலான திக்குப்பாலகர்கள் தாங்கள்செய்கிற காவலிற்குறைகள் சொல்லவும் எமுதண்டுமுதலியவைகளைக்கைக்கொண்டு வாயைமென்று பல்லைக்கடித்து பூதத்தலைவர்கள் நிற்கவும் கோடியமன்கள் கண்டுநடுங்க முத்தலைச்சூலங்களைக் கைக்கொண்டு சிவகணங்கள் சூழ்ந்து காத்துநிற்கவும் தேவர் சித்தர் அசுரர் சாரணர் விஞ்சையர் கின்னரர் மாதவர் இயக்கர் உரகர் கருடர் பாதாளவாசிகள் சுத்தயோகிகள் முதலான கூட்டங்கள் துதிக்கவும் கிருபாமுதமாகிய கடவுளை நோக்கி இனிவருகிறபிறவியைத்தீர்த்து எங்களைரட்சிக்கவேணுமென்று அன்புமிகுந்து ஆனந்தக்கண்ணீரொழுக மயிர்புளகிக்க முனிவர்கள் சிவசிவசங்கரவென்று முழங்கவும் எல்லாருக்கும் கிரமமாக உபசாரஞ்சொல்லி பார்வதி குறுநகைகொள்ள ஆயிரங்கிரணங்கள்வீசுகிற சிங்காசனத்தின்மேலிருக்கிற கடவுளைக்கண்டு வரகுணபாண்டியன் விழுந்து வணங்கிப் பேச்சுத்தடுமாற உரோமஞ்சிலிர்க்க அருட்கடலிலே அன்பாகிய ஆறிழுக்க மிதந்துபோய் வாக்குக்கெட்டாத ஆனந்தாமுதத்தை வாய்மடுத்துண்டபின்பு தன்பொறிகளும் தன்கரணங்களும் கடவுள் விஷயமாகச்செய்து அன்புவடிவாய்நின்றான் அப்போது அவனுக்கு முன்னேதோன்றின சிவலோகம் பழையபடி மதுரையாய் அங்கயற்கண்ணம்மையும் தாமுமாகச் சுந்தரக்கடவுள் விளங்கினார் அப்போது வரகுணபாண்டியன் கடவுளருட்பெருமையையோசித்து கடவுள் பாதங்களிலேவிழுந்து வணங்கி அன்புமிகுந்து ஆனந்தக்கண்ணீரொழுக வாய்குழறச்சுவாமி.

நாயினேனென்னைநடுக்கும்பழியகற்றித், தாயினேராகித்தலையளித்தாய்தாள்சரணஞ்
சேயினேன்காணச்சிவலோகங்காட்டிப்பின், கோயினேர்நின்றவருட்குன்றேநின்றாள்சரணம்.

மாழாந்துசெய்யும்வினைவழிபோம்வன்னரகிற், றாழாதடியனேற்கன்புதந்தாய்தாள்சரணம்
ஏழாகிநான்குவகையாயெழுபிறப்பும், பாழாகவென்னைப்பணிகொண்டாய்தாள்சரணம்.

வெங்கட்பழியின்வினையேனைவேருக்கித், திங்கட்குலக்களங்கந்தீர்த்தாய்நின்றாள்சரண
மங்கட்சிவபுரமுண்டன்புடையார்க்கென்பதையின், றெங்கட்குக்காட்டியிசைவித்தாய்தாள்சரணம்.

என்று துதித்துக் கடவுளருள்பெற்றுப் பேரன்புகொண்டு பின்னும் வெவ்வேறேபல பூசைச்சிறப்புகள்செய்து வரகுணபாண்டியன் வாழ்ந்திருந்தானென்றுசொன்ன அகத்தியமுனிவரை இருஷிகள் பார்த்து ஐயா அக்காலத்திலே இந்திரன்சாபம் வெள்ளானைசாபம் தகப்பனைக்கொன்று தாயைக்கூடின பாபங்களெல்லாம் மதுரையிலே தீர்த்து வரகுணபாண்டியனுக்குத் திருவிடைமருதூரில் பழிநீங்க வரந்தந்ததுயாதுகாரணம்சொல்லவேணுமென்ன அகஸ்தியர்நன்றென்று சோமசுந்தரக்கடவுள் எல்லாப் பழிபாவங்களும் தீர்க்கிறவரென்று பிரசித்தமானதினாலே இனி மதுரையிலுள்ளவர்கள் அஞ்சிப் பழிபாவங்கள் செய்யாதிருக்கவேண்டி வரகுணபாண்டியனைத் திருவிடைமருதூருக்குப் போகச்செய்துபழிதீர்த்தாரென்றுசொல்ல முனிவர்கள்கேட்டு அதிசயானந்தக் கடலின்மூழ்கினார்கள் அன்றுமுதல் மதுரை சிவஸ்தலங்களுக்கெல்லாம் சிகாமணியாய்ப் பூலோகத்திலே சிவலோகமென்று பதினாலுலகங்களும்புகழ விளங்கியது.

வரகுணனுக்குச்சிவலோகங்காட்டியபடலம் - முற்றியது.



நாற்பத்தொன்றாவது

## வி ற கு வி ற் ற ப ட ல ம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

நெடியவன்பிரமன்றேடநீண்டவன்றென்னற்கேழின்,முடியதாஞ்சிவலோகத்தைக்காட்டியமுறையிதையன்
படிமிசைநடந்துபாடிப்பாணன்றன்விறகாளாகி, யடிமையென்றடிமைகொண்டவருட்டிறமெடுத்துச்சொல்வாம்.

கலிநிலைத்துறை.

அரசனல்கியவெறுக்கைபூணுடைகள்பிறவும், பரசுநாவலர்மாணவர்யாவர்க்கும்பகிர்ந்து
வரிசையாலிசைக்கிளையொடுமனையில்வந்தெய்திச், கனைசெயாமகிழ்சிறந்திசைக்காவலனிருந்தான்.

பின்பு அகஸ்தியர்சொல்லுகிறார் வரகுணபாண்டியன்இந்திரன்போல் மதுரையில்விளங்கு நாளில் வடதேசத்திலிருந்து ஏமநாதனென்று ஒருவீணைபாடகன் அநேகம்ஜயவிருதுகளுடனே மதுரைக்கு வந்துஅரசன் அரண்மனைக்குள்ளே ராஜசபையிலே வரகுணபாண்டியனைக் கண்டு வணங்கி பாண்டியன் கீர்த்திகளைப் பலவிதமாகக் கொண்டாடி ஏழிசைத்தந்திபூட்டின வீணையை யிடதுதோளிலேசார்த்தி சுருதிகூட்டித் தேன்போலு மின்னிசைகளை பாண்டியன்காதுகள் நிரம்பப்பாடினான் அப்படிப்பாடக்கேட்டபாண்டியன் தன்தலையசைத்துமெய்ச்சிஏமநாதனுக்கு ரத்தினாபரணங்கள் கொடுத்து பலவகையானபோஜனங்களுக்கு வேண்டியவைகளுங் கொடுத்து அவனிருக்கவீடும் வேறேயமையச் செய்வித்து பின்னும்வேண்டிய சன்மானங்களுஞ்செய்ய ஏமநாதன் தனக்கெதிரொருவருமில்லாத கறுவத்துடனே மனோரதித்துத் தானிருக்கவமைந்த இடத்துக்குப் போனான் பின்பு பாண்டியன் வந்தஏமநாதன் மிகவுங் களித்திருக்கிறானென்றுதெரிந்து சேவகரைவிட்டு நம்முடைய பாணபத்திரனை யிங்கே கூட்டிவாருங்களென்ன உடனேசேவகர்கள்போ யழைக்கக்கேட்ட பாணபத்திரன் சபைக்குவந்து பாண்டியனைக் கண்டு வணங்கிநிற்க பாண்டியன்பார்த்து பத்திரா புதிதாகவந்திருக்கிற வீணைபாடகனுடனே பாடவல்லையோவென்ன பத்திரன்வணங்கி ஐயா பாண்டியர் குலசிகாமணியே உம்முடையதயவின் பலமும் சோமசுந்தரக்கடவுளருளின்பலமுங்கொண்டுஎன்னாலானவளவும்பாடி அந்தஏமநாதன்கொண்ட விருதைப் பறித்து அவனையும்பாட்டால் வெல்லுவேனென்ன பாண்டியன்கேட்டு நீநாளைவந்துபாடக்கடவையென்றுத்தரவுசெய்தனுப்பபத்திரன் தன்வீட்டுக்குப்போயிருந்தான் அங்கே ஏமநாதனிடத்திலேயிருக்கிற கற்றுச்சொல்லிகளான பாடகர்கள் கடைத்தெருவுகள் நாற்சந்திகூடுமிடம் அம்பலச்சாவடி வீதியாகிய இந்த இடங்களெல்லாம் போய்ப்போய்ப் பாடித்தங்கள் பெருமைவிளங்கத் திரிந்தார்கள்.

அப்படி அவர்கள் பாடுகிறபாடல்களைக்கேட்டு பத்திரன் ஆச்சரியப்பட்டு ஏமநாதனுடைய சீடர்களே இவ்வளவு பாடவல்லராஞல்அவன் எவ்வளவு வல்லனேவென்றுமதித்து இப்படிப்பாடவல்லனை அவனை நாளை எப்படிநாம்பாடி வெல்லுவதென்று மதுரேசனைவந்தனைசெய்து சுவாமி உம்முடைய அருளாகியதுணை இக்காலத்தில்முழுதும் வேண்டுமென்றுதுதித்துக்கொண்டுபோய்த் தன்வீட்டிலிருந்தான் இப்பால் இந்திரவிமானத்திலே நிலைபெற்றுவிளங்குகின்றசச்சிதானந்தமயமானகடவுள்தமதன்பனான பாணபத்திரனது இசைப்பகையை வெல்லத்திருவுள்ளத்திலெண்ணி விறகுசுமந்துவந்து விற்கிறகிழவனுகத் தமதிச்சைப்படி மிகவும் அழுக்குப்பிடித்த கந்தைத்துணியை இடையிலேகட்டிக்கொண்டு வெட்டிவெட்டிமழுங்கித்தேய்ந்த வெட்டறுவாளை வலப்புறத்திலே செருகிக்கொண்டு கிழிந்து பழையதாய்த்தேய்ந்த தோற்செருப்புகளைக் கால்களிலேபோட்டுக்கொண்டு பழையதாய்க் கிழிந்து கிழிந்து தைத்தபோர்வையான உறைக்குள்ளேகிடக்கிற வீணையையும் ஒருதோளிலே மாட்டிக்கொண்டு பிடரிக்குமேலே தோள்களிலேதொங்கக் காதுகளிலே களாக்காய்களைக்கொத்துடனே செருகிக்கொண்டு தலைமயிர்சரிந்து தொங்கச்சும்மாடுகட்டிவைத்து அதன்மேல்வெட்டின விறகுகட்டுகளைத் தினந்தினஞ்சுமந்து அழுந்தித்தேய்ந்ததலையுடையவராய் அப்போதும்வெட்டினவிறகுசுமையைத் தலையிலேசுமந்துகொண்டு சதைப்பிடிப்பில்லாமல் எலும்புகள்தெரிய இளைத்தவுடம்புடனே பார்த்தவர்கள் ஐயோ வென்றிரங்கும்படியாய் பூமியிலேபாதங்கள்பட முகத்திலே வியர்வுதோன்ற இருமி விறகாளாக வருகிறவர்சுமைதாங்கிக்கல்லைக்கண்டு அதன்மேலே விறகுகட்டைச் சார்த்தி அங்குள்ளமடுவிலேபோய்க் கையாலள்ளி நீர்குடித்துவந்து விறகுசுமையைத்தலைமேற்கொண்டு உச்சியெரிவுதீர அடிக்கடியெடுத்தெடுத்தாற்றிக்கொண்டு மதுரைக்குள்ளேவந்து விலைகேட்கிறவர்களுக்கு வாங்கத்தகாதவிலைசொல்லி வீதி சந்தி முடுக்குகளெல்லாமலைந்துதிரிந்து பிரமாவிஷ்ணு வேதங்களாலுங்காணப்படாதவர் ஏமநாதனிறங்கியிருக்கிற வீட்டுக்கடைத்தலைக்குப் போரும்போது சூரியன் அஸ்தமித்து செவ்வல்லிகள்மலர சந்திரோதயமாக பக்ஷிகள் கூடுகளிலடங்க வண்டுகள் தாமரைகளிலேதூங்க குரங்குகள் சோலைகளிலேமறைய இடையர்கள் மாடுகளையோட்டிக்கொண்டுவந்து சேர பள்ளிக்கூடங்களிலே பிள்ளைகள்படிப்போய பூமிக்குக்கறுப்புப்போர்வை போர்த்தினற்போல இருள் வந்துகவிய மன்மதன்பாணங்களையெங்கும் பிரயோகிக்க சந்திரனுகிய முகத்திலே அதிற்களங்கமான திலகம்விளங்க இருளாகியகூந்தலுடனே நக்ஷத்திரங்களாகிய முத்துமாலைகளணிந்துகொண்டு பார்வதிதேவிதனதுநாயகனைத்தேடிக்கொண்டுகூடவந்ததுபோல மாலைக்காலம்வந்துகூட அந்தவேளையில் விறகாளானகடவுள் சுமந்துவந்த விறகுகட்டை ஒருபுறத்திலே இறக்கிச் சார்த்தியூன்றிவிட்டு அந்த ஏமநாதன் வீட்டுவெளித்திண்ணைமேலிருந்து இளைப்பாறினபின்பு தகுந்த இன்னிசையைக்கொஞ்சம் எச்சாகக்கொண்டுபாடினர் அப்போது அந்தராகத்தைக் கேட்டு ஏமநாதன் இப்படிப்பாடுகிறவன் யாரென்றுவெளியேவந்து விறகாளைப்பார்த்து நீயாரென்று கேட்க அதற்குவிறகாள் நான் இந்தமதுரையில் வீணைபாடகராகிய பாணபத்திர னடிமையென்றூர்பின்னும்பாணபத்திரரிடத்தில் கற்பவர்கள் அநேகருண்டு அப்படிக்கற்றவர்களிலே நானுமொருவன் என்னை இசைத்தலைவனான பத்திரன் நீ மிகவுங்கிழவன் பாடத்தக்கவனல்லன் இனிப்பாட யோக்கியனைலென்று தள்ளிவிட்டார் நானே வேறே ஜீவனங்கிடையாமல் விறகுவெட்டிக்கட்டித் தூக்கிக்கொண்டு வந்து விற்றுவயிறுவளர்க்கிறேனென்று சொல்ல இசைநூல்வல்லனுன ஏமநாதன் விறகுவிற்கிறவனே நீ முன்னேபாடின இராகத்தை இன்னமொருதரம் பாடென்றுசொல்ல விறகாளானகடவுள் குண்டுப்பள்ளம் வற்றினற்போல வாயகன்ற சுரைப்பத்தரையுடைய வீணைதண்டத்தை இடத்தோளிலே சாய்த்தி தெரித்துப்பார்த்து முறுக்காணிகளை முறுக்கிப்பற்றின முறுக்காணிகளினின்று படர்ந்து செல்லவிட்டு தேன்ருரைபோல இறுக்கிச்சுருதிகூட்டி வேகத்துடனே மெட்டுகள்தோறும் விரல்கள்நடந்துசென்று வர இசைகள் ஏழினிடத்துப் பலவேருக இன்னிசையாய் விளங்குகின்ற சாதாரிராகத்தின் ஆலாபனையுடனே நீண்டு செல்லுதலுமுடுகியலாகிய அராகமும் நரம்பாகியதந்தியும் கண்டமும் ஒருகுரலாக நன்கொலிக்க வயிறுகுழியவாங்கல் அழுமுகங்காட்டல் புருவமேறல் தலைநடுங்கல் கண்ணுடைல் மிடறுவீங்கல் பையைப்போலே வாயைத்திறத்தல் பல்லைக்காட்டல் ஆகிய உடற்குற்றங்களில்லாமல் வெள்ளை காகுளி கீழோசை வெடிகுரல் குழறுநாசி ஆகிய இசைக்குற்றங்களை நீக்கி ஓரிடத்திலே நின்று இரட்டித்துச்சொல்லுதல் அளவுகடந்து மிகநீண்டொலித்தல் இளைத்து நெடுமூச்சுவிட்டுத் துடித்தல் என்கிற பாடற்ருழிற்குற்றங்கள் முதலியனவெல்லாம் விட்டு எழுதின சித்திரம்போலிருந்து இழுமெனுமருவியோதை மத்தளவோசை வெண்கலத்துவனி சங்கநாதம் வண்டின்குரலாகிய இசைக்கு

ணங்களும் மூங்கிலினின்றும் உதிரு மிலைபோலவும் மீன்கொத்திக்குருவி மீன்மேல் விழுதலைப்போலவும் பாடுதலின் குணங்களும் மந்திரம் மத்திமம் தாரம்துள்ளல் தூங்கல் மெலிதல் மிகுதல் ஆகிய நாதகீதங்கள் தப்பாமல் கேட்டோர்களெல்லாம் இதென்ன புதுமையென்னப் பாடியருளினர் விறகாள் எப்படி யென்றால்.

விரைசார்மலரோனறியாவிகிர்த, னரசாய்மதுரையமர்ந்தானென்னே
யரசாய்மதுரையமர்ந்தானவனென், புரைசார்மனனும்புகுந்தானென்னே.
பாடன்மறையுந்தெளியாப்பரமன், கூடல்கோயில்கொண்டானென்னே
கூடல்போலக்கொடியேனகமு, மாடலரங்காவமர்ந்தானென்னே.
நீலவண்ணன்றேருநிமல, னாலவாயிலமர்ந்தானென்னே
யாலவாயானலரில்வாசம், போலென்னுளமும்புகுந்தானென்னே.

என்று இப்படிப் பாணபத்திரனை ரட்சிக்கும் பொருட்டு பருந்துடனே நிழல்போகுதல்போல வீணைநரம்புடனே சேரப்பாடின இன்னிசைத்தேனானது ஆகாசவாசிகளுடைய செவியாகிய வாய்க்கால் வழியே ஓடி மயிர்த்துவாரங்களிலே வழியத்தேங்கி அவர்களுடைய அமுதமயமானவுடலை இன்னிசைமயமாகச்செய்தது பின்னும்மரங்களெல்லாம்அசையாதுநின்றன கடல்கள் ஒலியாதிருந்தன நீண்ட மலையருவிகளும் நதிகளும்புரண்டுதுள்ளாமனின்றன இப்படி கருணைக்கடலான விறகாள் பாடின சாதாரியான இன்னிசைத் தேனைப்பருகி சித்திரமெழுதவல்லவன்எழுதிவைத்த சித்திரங்கள்போலச் சராசரங்களெல்லா மசையாதிருக்க விஞ்சையர்களிலே சிலர் வீணையைக்கைநழுவவிட்டுச் சோர்ந்தார்கள் சிலர்விரல் நடாத்துகின்றவீணைநரம்பினொலியும்கண்டத்தொலியும் வேறாகி.வேர்த்தார்கள் சிலர் நாணி சந்தோஷமும்அதிகமாய் நாக்குக்குழறி தங்கள்நாயகிகள்மேலே மயங்கிவிழுந்தார்கள் பின்னும்இந்தவிறகாளான வெள்ளியம்பலவாணன் பாடல்கேட்டுஅவன்பாதத்தியானமானன் பிரமன் விஷ்ணு ஆனந்தக்கடலின்முழுகினன் இந்திரன்எனக்கு ஆயிரங்கண்களும்ஆயிரங்காதுகளாகவில்லையேயென்றான்தபோதனர்களும் முத்தர்களும் சித்தர்களும் கடவுளாகிய கடலில் தங்களன்பாகிய ஆற்றுடனே கூடி ஆனந்தக்கண்ணீர்வெள்ளம்பாய பேரின்பக்கடலிலே முழுகினர்கள் இன்னும் நாயகருடனே ஊடின பெண்களெல்லாம் கூடிகலவிக்கடலிலே முழுகினர்கள் நாயகரைப் பிரிந்த பெண்களெல்லாம் நாயகர்மேல் மனஞ்செல்ல மன்மதபாணத்தினலே வருந்தி மயங்கினர்கள் பாம்புகள் மயில்கள் யானைகள் சிங்கங்கள் மான்கள் புலிகள் எல்லாமயங்கி தங்கள்தங்கள்பகை தெரியாமல் இந்த இன்னிசைவலைக்கு ளகப்பட்டுச் சோர்ந்தன பூமிவெடித்து வெம்மையேற கிளைகள் கரிந்தமரங்களுக்குக் காதறிவுண்டாகி நல்லோர்கள் போல எங்குந்தளிர்த்து முகமலர்ந்தன தேவர்மனிதர் விலங்கு புள் முதலானவைகளெல்லாம் அந்தக்கரணங்களடங்க கடவுள்பாடின இன்னிசை மயமாயின இப்படி கடவுள் பாடின முல்லைப்பண்ணாகிய சாதாரிராகம் சராசரவுயிர்களையும் உலகையும் எட்டுத்திக்கையும் விழுங்கித் தன்மயமாக்கி ஏமநாதனை அவனுடம்பையு முயிரையும் உருகச்செய்தது அப்போது ஏமநாதன் பரவசனயிருக்க பாடினவிறகாள் தம்முடைய விறகுசுமையுடனே மறைந்துபோயினர் அவர்போனபின்பு ஏமநாதன் இந்தச்சாதாரிராகம் இதுவரையிலும் நான்தெரிந்ததேயன்று தெரிந்தேனென்று ஒருவர்சொல்லவுங்கேட்டிலேன் ஆனல் இதுதேவராகம் இந்தத்தேவராகத்தை யார் இவனுக்குச் சொல்லிக்கொடுத்தார்களோ இந்தராகம் கடவுளேயன்றி மனிதர்களிலே தெரிந்தவர்களாரென்று மிகவும்அதிசயித்துதள்ளுபடியான இந்தக்கிழவன்பாடலே யிப்படியானல் இதுகற்றுக்கொடுத்த பாணபத்திரன்பாடலெப்படியோவென்று மதித்துப்பயந்து தன்னுடையசமையலாள்கள்முதலான கூட்டங்களெல்லாம் நடுநடுங்கித்தொடர அன்றிராத்திரியே பிரயாணமாய்பலவிதமான சோமன்உடுப்புப்பெட்டிகளும் ஆபரணப்பெட்டிகளும் மடக்குப்பெட்டிகளும் அங்கங்கேகிடக்க வெட்கமும் பயமுமிஞ்சி வீணைகளையும் போட்டுவிட்டுவடதிசையைக் குறித்தோடிப்போனன் அவன்போகும்போது பல்லக்கு ஒருவழி பாடகிகளொருபுறம் குடையொருபுறம் கற்பவர்களொருபுறம் வேலையாள்களொருவழிநாணழிந்து பாடற்கிழ்மக்கள் ஒருவழியாகத் தானும் பயந்துபோயினன் அன்றிராத்திரியே விடைமேலழகரான கடவுள்பத்திரன்கனவிலே யெழுந்தருளி ஓபத்திரனே உனக்குஎதிரியாய்வந்த ஏமநாதனிடத்திலே இன்றுசாயந்திரம்விறகுதலையாளாய்ச் சென்றுநான் பத்திரனடிமையென்று சொல்லிப்பாடி அவனைவென்று துரத்தினேன்இதுதானே நீஎன்னைவேண்டிக்கேட்டுக்கொண்டதென்று மறைய பத்திரன் விழித்தெழுந்துமனத்தாலும்எண்ணக்கூடாத

சொல்லைக்கேட்டுபயந்து இப்படிச்சொல்லுதற்கோ நான்கடவுளை வேண்டினதென்று சூரியோதயமாகு முன்னே கோயிலுக்குப்போய்க் கடவுள் சன்னிதியில் வணங்கிசுவாமி நீர்.

கடியகானகம்புகுதவோகட்டியவிறகை, முடியிலேற்றவோமுண்டகத்தாள்கணெந்திடவந்
தடியனேன்பொருட்டடாதசொற்பகரவோவஞ்சக்,கொடியனேன்குறையிரந்தவாவிளைந்ததேகுற்றம்.

நெடியனேமுதல்வானவர்நெஞ்சமுஞ்சுருதி, முடியனேகமுங்கடந்தநின்முண்டகப்பாதஞ்
செடியனேன்பொருட்டாகவிச்சேணிலந்தோய்ந்த, வடியனேற்கெளிதாயதோவையநின்பெருமை.

நாதவந்தமுங்கடந்தமெய்ஞ்ஞானவானந்த, போதமென்பரஃதின்றுருபுடைவிமானிடமா
யாதபந்தெறத்தறிந்தவிந்தனஞ்சுமந்தடியேன், பேதையன்பளவாயதோபெருமநின்னுருவம்.

மறிந்ததெண்டிரைகிடந்தவனுந்தியில்வந்தோ, னறிந்ததன்றரும்பொருள்வரம்பகன்றெழுவிசும்புஞ்
செறிந்தவண்டமுங்கடந்ததுசிறியனேன்பொருட்டாந்,தறிந்தவிந்தனஞ்சுமந்ததோதம்பிரான்முடியே

என்று பத்திரன் மீனாட்சி சுந்தரேசனைத் துதித்து வலஞ்செய்து தொழுதுமீண்டு வாருணபாண்டியன் அரசாட்சிமண்டபம்வந்து அரசனைவணங்கி நிற்க பாண்டியன் சேவகரையழைத்து வடக்கேயிருந்துவந்த பாடகனை அழையுங்களென்ன சேவகர் அவனிருக்குமிடம்போய்அவன்பயந்தோடிப்போன செய்தி தெரியாமல் அங்கெல்லாந்தேடிக் காணமலுழல அயல்வீட்டுக்காரர்தங்களுக்குத்தெரிந்ததைச் சேவகரோடுசொன்னதாவது ஐயா சேவகர்களே அந்தப்பாடகன்நேற்று இங்கேயிருந்தான் ஒருவிறகு தலையன்பத்திரனடிமையென்று சாயந்திரம்வந்துபாடினான் அவளவுதா னெங்களுக்குத்தெரியும் பின்பு பாதிராத்திரியில் பிரயாணமாய்ப்போய்விட்டா னென்று சொல்லக்கேட்டுசேவகர் விரைந்துசென்றுபாண்டியனைவணங்கி அயல்வீட்டார் சொன்னபடியே சொல்ல சபையாரெல்லாம் அதிசயித்துக் கூத்தாடினார்கள் அப்போதுபாண்டியன் அனுமானங்கொண்டுதன்னைச்சேர்ந்த பத்திரனைப்பார்த்து அந்தப்பாடகன் என்னகாரணத்தினாலே ராத்திரியே பிரயாணமானான் நீநேற்று என்னிடத்திலிருந்து போனபின்பு நீ என்னசெய்தா யென்று கேட்க பத்திரன் வாருணபாண்டியனை வணங்கி ஐயா நேற்று இங்கிருந்து நான்போய் சோமசுந்தரக்கடவுளை வணங்கி என்குறைகளைச் சொல்லிக்கொண்டு பின்பு என்வீட்டிற் போயிருந்தேன் ராத்திரி என்கனவிலே கடவுள்வந்துபத்திரா உனக்காக விறகுதலையனாய்ச் சென்றுஉன்னெதிரிமுன்னே சாதாரிராகம்பாடி அவனைவென்று துரத்தினேனென்றார் நான்உடனே விழித்தேன் இதுதான் நடந்ததென்று சொன்னான் அப்போது சேவகர்போய் விசாரித்துவந்துசொன்னதும் பத்திரன் கனவின்செய்தியும் ஒத்திருந்ததினாலே இது கடவுள் திருவிளையாடலிலொன்றென்று பாண்டியன் தெளிந்து பத்திரன் அன்பையும் கடவுளருளையும் வியந்து கொண்டாடி மதுரேசனைப்போய் வணங்கி பத்திரனை யானைமேலேற்றி மதுரையை வலஞ்செய்வித்து அனேகம் வெகுமானஞ்செய்து பத்திரனைப்பார்த்து பிரமன்முதலாகிய எல்லாரையும் ஏவல்கொண்ட கடவுளே உனக்கு விறகாளாய்வந்துஏவல் செய்து உன்குறையைத் தீர்ப்பாரானால் எல்லாரும் உனக்கு ஏவலாளிகளல்லவோ ஆதலால்இனிநானும்ஏவலாளியே பிசகில்லை இனிநீர் இன்றுமுதல்வேதநாதனையே பாடத்தக்கதென்று உபசரித்தனுப்பினான் பத்திரன் தனக்குப் பாண்டியன் கொடுத்தனவெல்லாம் தன்னையடுத்த வித்வான்களுக்கும் கற்றுச்சொல்லிகளுக்கும் பங்கிட்டுக்கொடுத்துத் தன்னுடைய பாடகர்களுடனே வீட்டுக்குவந்து அளவில்லாத மகிழ்ச்சிகொண்டிருந்தான்.

விறகுவிற்றபடலம் - முற்றியது.

---

நாற்பத்திரண்டாவது

## திருமுகங்கொடுத்தபடலம்.

### அறுசீரடியாசிரியவிருத்தம்.

முன்னவன்மதுரைமூதூர்முழுமுதலிசைவலானை
யின்னிசைபாடிவென்றதென்னுரைசெய்கேனந்தத்
தென்னவன்சேரன்மாடேதிருமுகங்கொடுத்துப்பாணர்
மன்னவன்றனக்குச்செம்பொன்வழங்கியவழக்கஞ்சொல்வாம்.

வந்துமதுரைப்பெருமானைவணங்கிக்கொணர்ந்தநிதியெல்லா
மிந்துமருமானகருள்ளார்யாருமறியயாவர்க்கு
முந்தைவேதமுதல்வர்க்கும்புலவோர்தமக்குமுறைநல்கிச்
சந்தயாழினிசைப்பாணர்தருமமனையான்வைகினன்.

பின்பு பத்திரன் பாண்டியன்சொன்னதே சரியென்று அன்றுமுதல் பாண்டியனிடத்தில் பாடுந்தொழிலைவிட்டு கடவுள் கோயிலுக்குப்போய் மூன்றுகாலமும் தினந்தோறும் சன்னிதிமுன்னேநின்று பாடுவதே நியமமாகக்கொண்டு பாடிவருகிறநாளில் கடவுள் கோயிலிற்போய்ப் பாடுவதேயன்றி வேறே தொழிலில்லாமையினாலே பத்திரன் அதிகவறுமையினாலேமெலிய அவன் அப்படி மெலிவதைச் சோமசுந்தரக்கடவுள்பொறுமல் பாண்டியனுடைய பொக்கிஷத்திலுள்ள திரவியங்களைக்கொண்டுவந்து தம்முன்னேநின்று பாடுகிற பத்திரன் கண்ணுக்குமுன்னே சிலநாள் வைத்துக்கொண்டுவந்தார் சிலநாள் பொன்பூவிராகன்வைத்தார் சிலநாள் ரத்தினுபரணங்கள் வைத்துவந்தார் சிலநாள் பொன்னுடைகள் வைத்தார் சிலநாள் சாமரைக்காம்புத்தகட்டுப்பொன்னைவைத்தார் சிலநாள் சிங்காசனப்பொன் றகடுகளைக்கொண்டுவந்துவைத்தார் இப்படி ஒருவருக்குந்தெரியாமல் கடவுள்கொடுத்துவந்த பொருள்களெல்லாம் பத்திரன் நெருப்பிலிட்டுருக்கி அழித்துடைத்து தன்னைச்சேர்ந்தவர்களுக்கும் யாசகர்களுக்கும் தன்கைபார்த்திருக்கு மவர்களுக்கும் பிறருக்கும் மாறுமல்கொடுத்து அவர்கள் துன்பமும் தன்மிடியும் தீர்த்துகொண்டுவந்தான் இப்படிப் பாணபத்திரனுக்கு தினங்கொடுத்துவந்த கடவுள் பின்பு சிலநாள் கொடாதிருந்தார் அக்காலம் பத்திரன் கோயிலுக்குப்போய்ப்போய்க் கடவுளைவணங்கி ஒன்றும் பெறுமல் சும்மாவந்து பெருந்துன்பத்திலழுந்தி வேறே பிழைக்கும்வகைகிடையாமல் மிகவும் இளைத்துவாடி தரித்திரம் பொறுக்கமாட்டாமல் நித்திரைசெய்தான் அப்படி அவன் தூங்கும்போது கடவுள்கனவில் ஒருசித்தவடிவுகொண்டுவந்து நின்று அப்பா பத்திரா உனக்காக யாம் பாண்டியன் பொன்னறைக்குள்ளிருந்த பொருள்களைப் பெருதுளம்புண்ட கனிபோல் கொண்டுவந்துகொடுத்தோம் இனி அப்படிக்கொடுத்தால் எம்மிடத்தில் மிகுந்த பத்திமானை பாண்டியன் தெரிந்தால் இவ்வளவு காவல்கட்டியிருக்கிற பொருளைக்களவுசெய்தது கடவுளேயென்று மனம்வேறுபட்டு பொக்கிஷங்காக்கிற காவலாளிகளை தண்டித்தாலும் தண்டிப்பான் ஆதலால் இனி உன்போல எம்மிடத்தில் அன்புள்ளவனைசேரமானுக்கு ஒரு ஓலையெழுதிக்கொடுக்கிறோம் நீ அந்த ஓலையுடனேபோய்ச் சேரமானைக்கண்டுவாவென்று.

மதிமலிபுரிசைமாடக்கூடற் - பதிமிசைநிலவுபானிறவரிச்சிற
கன்னம்பயில்பொழிலாலவாயினின் - மன்னியசிவன்யான்மொழிதருமாற்றம்
பருவக்கொண்மூப்படியெனப்பாவலர்க் - குரிமையினுரிமையினுதவியொளிதிகழ்
குருமாமதிபுரைகுலவியகுடைக்கீழ்ச் - செருமாவுகைக்குஞ்சேரலன்காண்க
பண்பால்யாழ்பயில்பாணபத்திரன் - றன்போலென்பாலன்பன்றன்பாற்
காண்பதுகருதிப்போந்தனன் - மாண்பொருள்கொடுத்துவரவிடுப்பதுவே.

எனத் திருமுகப்பாசுரத்தையெழுதிப் பத்திரன்கையிற்கொடுத்துச் சித்தராகவந்தவர் மறைந்தருளினர் பத்திரன் நித்திரைதெளிந்து விழித்தெழுந்து ஆடிப்பாடி ஆனந்தக்கடலிலே முழுகி தான்பெற்ற திருமுகத்தைப்பட்டுவஸ்திரத்தில் முடிந்துகொண்டு கடவுள்பாதங்களைவணங்கிக் கோயிலைவலஞ்செய்து பத்திரன்விரைவிலே மேற்றிசையைக்குறித்து வழிபிடித்துக்கொல்லைகளும் குறிஞ்சிநிலங்களும்பாலைவனங்களும்கடந்துசென்று பலாச்சுளைகள் பழங்களுடனே காலிலேதடுக்க மிகுந்தவளங்கொண்டமலைநாட்டுக்குப்போய் கடலாகிய உடையாடையும் மலைகளாகிய முலைகளோடுவிளங்குகின்றமலைநாடென்கிற பெண்முகத்திலிட்ட திலகம்போன்ற திருவஞ்சைக்களம் அறப்பெருஞ்செல்வமும் ஐஸ்வரியமும் வீரமும் வடமொழிதென்மொழிகளும் சிறந்துவிளங்குகின்றதைக்கண்டு பத்திரன் அந்தப்பட்டணத்தில் ஒருபுறத்திலே ஒருதண்ணீர்ப்பந்தலில் வந்திருந்தான் இப்பால் அந்த அஞ்சைக்களத்தையாளுகிற சேரமான்கனவிலே அன்றுராத்திரி சோமசுந்தரக்கடவுள் ஒருசித்தராயெழுந்தருளி ஓசேரமான்பெருமானே யாம் மதுரையிலிருக்குஞ்சித்தர் எம்முடையஓலைகொண்டு பாணபத்திரனென்பவன் திரவியங்கள்வேண்டி உன்னைக்காண இங்கேவந்திருக்கிறான் அவனுக்குவேண்டிய பொருள்களெல்லாங்கொடுத்து அவனைச்சீக்கிரம் நம்முடையமதுரைவந்துசேரும்படி செய்யென்றுசொல்லி மறைந்தருளினர் உட

னே சேரமான்பெருமாள் விழித்தெழுந்து விடிந்த பின்பு தன்மந்திரி பிரதானிகளுக்குத்தெரியச்சொல்லி இப்போது மீனாட்சிசுந்தரேசன் திருமுகங்கொண்டுவந்தபத்திரன் எங்கேயிருக்கிறார் கண்டு கூட்டி வாருங்கோளென்று ஏவல்வீரரையனுப்ப அந்தஏவல்வீரர் வீதிதிண்ணை முடுக்குசாவடி சத்திரங்களெல்லாம்போய்த்தேடி தண்ணீர்ப்பந்தலிலிருக்கிற பத்திரனைக்கண்டுதெரிந்து விரைவிலேசென்று சேரமான்பெருமாளுக்குத் தெரியப்படுத்தினார்கள் உடனே சேரமான் சேனைகளுடனே எதிர்கொண்டுபோய் பத்திரனைக்கண்டு கைகளைத் தலைமேற்குவித்துக்கொண்டு துதிகள்பாடிக் கூத்துமாடி நிலத்திலேவிழுந்து தேனைக்கண்ட வண்டுபோல்மகிழ்ந்து திருமுகத்தைவாங்கிக் கண்களிலேயொற்றி முடிமேல் மாலையாகச் சூட்டிக்கொண்டு ஆனந்தக்கண்ணீர்துளும்ப உடம்புபூரித்து ஓலையைப்பிரித்துவாசிக்க.

மின்போல்விளங்குகின்ற செம்பொன்னாலும் ரத்நங்களாலும் அமைந்த உபரிகைகளால்நிறைந்த மதுரையிலிருக்கும் சிவனாகியயாம் எழுதிவிடுக்கும் பாசுரத்தை அழகானமேகம்போல் புலவர்களுக்குக் கைமாறுகருதாது கொடுக்கிற சேரநரபாலன் காணக்கடவது தன்னைப்போல் நமதிடத்தன்பனாகிய இன்னிசையாழ்ப்பத்திரன் தன்னிடத்திற்குவருகிறதினாலே அவனுக்குவேண்டிய இருவகைநிதியங்களுங் கொடுத்துவரவிடக்கடவை.

என்று பாண்டியர் குலதெய்வமான கடவுளனுப்பின திருமுகத்தின் செய்தியைப்பார்த்துச்சேரமான்பெருமான் தனதுமகிழ்வுக்கு முடிவுதெரியாதவனாய் அந்தஓலையைப் பொன்றட்டின்மேல்வைத்து அதை மதயானைத்தலைமேலேற்றி பாணபத்திரனை முன்னேவைத்து தான் பின்னேயிருந்து சாமரம்பணிமாறி பலவாத்தியங்களுமுழங்க பட்டணத்தைவலஞ்செய்து மங்கிலியப்பெண்கள் மங்களதீபங்கொண்டு எதிரேவரத் தன்னரண்மனைக்குக்கொண்டுவந்துதிருமஞ்சனஞ்செய்து பஞ்சவர்னங்களாலும் சித்திரவிசித்திரமான மணிமண்டபத்திலே பாணபத்திரனை எழுந்தருளப்பண்ணி பொன்னாசனத்திலிருக்கச்செய்து பூசித்து அறுசுவைப்போனகமுண்ணச்செய்து சந்தனகளபகஸ்தூரிபனிநீர்புஷ்பதாம்பூலாதிகள்கொடுத்துப்பின்புகடவுள்அனுப்பிவிடுகவென்று எழுதியிருத்தலினாலே பத்திரனையழைத்துக்கொண்டுபோய்செம்பொன்னறையைத்திறந்துகாட்டிஇந்தப்பொருள்களெல்லாம் ஐயாபத்திரரே உம்மதே ஒப்புக்கொள்ளுமென்ன அதற்கு பத்திரன் சேரமானைவணங்கி ஐயா நீரோ கடவுளருளுக்குப் பாத்திரமானவராதலால் நீர்கொடுத்ததே எனக்குப்போதுமென்ன சேரமான்பெருமாள் தான் நினைத்தபடியே கொடுக்கக்கொடுக்கப் பத்திரன் போதும்போதுமென்று மிடிதீர்ந்து பல்லக்கு யானை குதிரை பொன்னுடைகள் பொன்னாபரணங்கள் அனேகந் திரவியங்கள் முதலானபொருள்களெல்லாம் கொடுக்கப் பெற்று சேரமான் ஏழடிபின்றுடர்ந்து வழிவிட்டுமீண்டு நிற்க பத்திரன்மீண்டு மதுரைக்குவந்து முத்தமிழ்மதுரேசனைக்கண்டு தொழுது பாண்டியனது மதுரையிலுள்ளவர்களெல்லாந் தெரிய எல்லாருக்கும் வேதியருக்கும் புலவருக்கும் இசைப்பாணருக்கும் முறைப்படி கொடுத்து பாணரில் தர்மதேவதைபோல் வாழ்ந்திருந்தான்.

திருமுகங்கொடுத்தபடலம் – முற்றியது.



நாற்பத்துமூன்றாவது

## பலகையிட்டபடலம்.

### கொச்சகக்கலிப்பா.

கருந்துழாய்முகிலொருபாற்கலந்தவர்பத்திரற்குநிதி, திருந்துதாருதியநிடைத்திருமுகமீந்தளித்ததிது
வருந்தியாழவனிசைப்பமழைதாங்குநள்ளிரவி, லிருந்துபாடெனப்பலகையிட்ட துஉமினிப்பகர்வாம்.

எழுசீரடியாசிரியவிருத்தம்.

இறையருள்வரிசைபெற்றபத்திரனுமேலுயர்த்தவரைநாற்போது
முறையினல்வழிபட்டொழுகுவானாகமுடிகெழுவரகுணவேந்து
மறைமுதலடிகள்வந்துவந்தனையால்வழுத்துவான்சில்பகல்கழிய
நிறைபெருஞ்சுடரோன்றிருவுருவடைந்துநெறியினாற்சிவபுரமடைந்தான்.

பின்பு பத்திரன் தன்னையுகந் தடிமைகொண்ட கடவுள் கோயிலுக்குப்போய் மூன்றுகாலமும் வணங்கிவருநாளிலே திருமுகங்கொடுத்துப் பொருளருளியபின்பு அர்த்தசாமத்திலுஞ்சென்று விடையின் பின்னேநின்று ஏழிசையும்பாடி கடவுள் அடியார்களும் தேவர்களும் வணங்க முத்துப் பல்லக்கின்மேலேறிக்கொண்டு தேவிபள்ளியறைக் கெழுந்தருளும்போதும் சேவித்து இப்படிதினநியமந்தப்பாமல் நடந்துவருகிறநாளிலே இந்தப்பத்திரன் என்னவிக்கினங்கள்வந்தாலும் தான்கொண்ட நியமம் விடாதவனென்பதை எல்லாருக்குந்தெரிவிக்க கடவுள்திருவிளையாட்டாக ஒருநாள் பத்திரன் பள்ளியறைசேவிக்கப்போகும்போதில் மேகங்கள்குமுறி திக்குகள்தெரியாமல் ஆகாயமெல்லாநிறைந்து வருணன் விட்டமழையைப்போல மின்னிப் பாம்புகள்பயந்தொடுங்க இடித்து நக்ஷத்திரங்களும் தெரியாமலிருண்டு ஆகாயம் கருங்கடலை அடியோடே வாரிக்கவிழ்த்தாற்போலவும் இருப்புக்கம்பிகளை எங்கும் ஊன்றினாற்போலவும் அஞ்ஞானிகள் மனம்போல்.கீழ்மேலொன்றுந்தெரியாதபடி மழைபொழிய அந்தமழையில் பத்திரன் நனைந்து அந்தமழையைப் பூமழைபொழிவதாகவெண்ணிவந்து கடவுள்கிருபையாகிய மழையிலேநனைந்து தேன்மழைபொழிவதுபோலே நந்தியின்பின்னேநின்று வீணையையிடதுதோளிலே சாய்த்தி சுருதிகூட்டி ஆலாபனம்பண்ணி கடவுள் செவிவழியேபோய் அருட்பயிர்தலையெடுக்க தான்தொடுத்த தமிழினிசையமுதம் மடைதிறந்து நரம்புநனைந்து ஓசைமழுங்கவும் உடல்குளிர்ந்துநடுக்கவும் கைவிரல்கள் மிறைத்திழுக்கவும் மயிர்சிலிர்க்கவும் கால்கள் சேற்றிலழுந்தவும் நின்று அன்புமிகுந்து என்னையும் உருக்கத்தக்க அமுதவிசை பாடுகிறான் எப்படி யெனில்.

மாதர்நகையாய்மதுரேசருண்பலிக்கெம்மனைவாய்வந்து
காதன்முகத்தரும்பிக்காட்டியென்சிந்தைகவர்ந்தார்போலுங்
காதன்முகத்தரும்பக்கையறவுதீரக்கலப்பேன்பாதி
பேதையுருவாயிருந்தார்நாணிவிழித்தாவிபிழைத்தேன்போலும்.

ஒண்ணுதலாய்வெண்டலைகொண்டுண்பலிக்குநம்மனையினூடேகூடற்
கண்ணுதலாருள்ளாளக்கானமிசைத்தென்னுள்ளங்கவர்ந்தார்போலுங்
கண்ணுதலார்பாடுமெவினயங்கண்டாகங்கலப்பேன்பாதி
பெண்ணுருவமாயிருந்தார்வெள்கிவிழித்தாவிபெற்றேன்போலும்.

ஐயரியுண்கண்ணாய்திருவாலவாயுடையானையங்கொள்வான்
மையனகைசெய்தென்வனமுலையின்மேற்செங்கைவைத்தார்போலு
மையனகைசெய்தென்வனமுலைமேற்கைவைப்பமாழ்கிச்சோர்வேன்
றையலிடங்கண்டுநெடுநெடுங்கிவிழித்தாவிதரித்தேன்போலும்.

என்றிப்படிப்பாடுகிற தம்புருநாரதருக்கு வெகுமானமாகக்கொடுத்த சங்கக்குழையணிந்த காதுகளிலே பத்திரன் இன்னிசைத்தேனை ஊற்றுகின்ற அடிமைத்தனத்தை கடவுள் கண்டு இதன்மேனின்று பாடென்று ஆகாசவாக்காகச் சொல்லி ஒருபலகை பத்திரன்முன்னே காணவிட்டார் அப்படி கடவுளிட்ட பொற்பலகைமேல் கடவுள் அருளாணைக்குப் பயந்தேறி மதுரகீதம்பாடி கடவுள் திருவடிகளைத் தியானித்துப் பலகையையு மெடுத்துக்கொண்டு பத்திரன் தன்வீட்டுக்குப் போகும்போது மழைவிட்டு நக்ஷத்திரங்கள் விளங்க வீடுவந்து புகுந்திருந்தான் இப்பால் வரகுணபாண்டியன் பொழுதுவிடிந்தபின்பு தங்கள் குலதெய்வமான கடவுள் பாணப்பத்திரனுக்கு நின்று பாடப் பலகையருளின சிறப்புக்கேட்டு பத்திரனையழைத்துவந்து அந்தப் பலகைமேலிருக்கச்செய்து இந்தப்பத்திரனே மதுரேசனென்றுநினைத்து ரத்தினாபரணங்கள் விளைநிலங்கள் முதலான பல சிறப்பும் போதும் போதுமென்னக் கொடுத்து பத்திரனுக்கு முன்போலவே மாதச்சம்பளமும் நடத்திக்கொண்டுவந்தான் இப்படிபாண்டியனாலே வரிசைபெற்ற பத்திரன் கடவுள்கோயிலுக்கு நாலுகாலமும்போய்ப் பாடுந்தொழில்விடாமல் நடத்திக்கொண்டுவருகிறநாளில் வரகுணபாண்டியனும் மறைமுதலடிகளிடத்தில் வந்து தொழுது துதிக்கும் நியமம் வழுவாமல் சிலநாள் கழிந்தபின்பு கடவுளது சாரூப்பியம்பெற்றுச் சிவபுரமடைந்தான்.

பலகையிட்டபடலம் - முற்றியது.



நாற்பத்துநான்காவது

# இசைவாதுவென்றபடலம்.

எண்சீரடியாசிரியவிருத்தம்.

கூடலம்பதியிலாடகமேருக்கொடியவிற்குருசிலடியவனுக்குப்
பாடலின்பரிசிலாகியசெம்பொற்பலகையிட்டபடிபாடினமன்னன்
வீடரும்பொருவில்கற்புடையாளோர்விறலியைப்பரமனிறையருள்பற்றி
மாடகஞ்செறியும்யாழ்வழிபாடிவாதுவென்றவரலாறுமிசைப்பாம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

மின்னியல்சடையினானைவிடைகொடுவலஞ்செய்தேகி
யின்னியமியக்கஞ்செய்யவெழில்கொடன்கோயிலெய்தித்
தொன்னிதிபெற்றான்போலச்சுகுணபாண்டியனைப்பெற்று
மன்னியமகிழ்ச்சிவீங்கவைகினானிராசராசன்.

அப்படி வரகுணபாண்டியனுக்குப் பின் அவன்புத்திரனான ராஜ ராஜ ராஜபாண்டியன் முடிசூடி அரசாளுங்காலத்தில் அவனுக்கு குலபத்தினிகளனேகர் காதற்பரத்தைகளனேகரில் ஒருபரத்தை அந்தப் பாண்டியனுக்கு அமுதும் ஆவியும் போன்றவள் பின்னும் அவன்மகிழ மதுரகீதம்பாடும் வித்தையிலும்வல்லவள் அப்படிப்பட்ட அவளுக்கும் பாணபத்திரன்மனைவிக்கும் கீதம்பாடும்விஷயத்தில் பகையுண்டாகி மிஞ்சி பாண்டியன் பரத்தையானவள் பத்திரன்மனைவிக்கெதிராக இன்னமொரு பாடகியைவரவழைத்துவிட்டுப்பாடி இவள்கருவபங்கம் பண்ணவேணுமென்று நினைத்து பாண்டியனுக்குத் தெரியப்படுத்த அவன் அவள்சொல்வழி நடக்கிறவனாகையாலே தேடி ஈழநாட்டில்நின்றும் ஒருசமர்த்தியான பாடகியை வரவழைக்க அவள் தன்னுடைய தோழிக்கூட்டங்கள் பக்கங்களிலேநெருங்க ராஜசபைக்குவந்து பாண்டியனை வணங்கி ஒருபுறத்திலிருந்து கின்னரமங்கைபோலே வீணாகானம் பண்ணி நிற்க அவள்மேல் மனஞ்சென்ற பாண்டியன் பழிநோக்காமல் அந்தஈழநாட்டாளைப்பார்த்து நீ இப்போது உன்னுடன்பாடவருகிற பத்திரன்மனைவிபக்ஷமாக நாங்கள்பேசினாலும் நீவிடாமல் அவள் வெட்கும்படி ஆணையிட்டுமறித்து பாடி வெல்லவேணு மென்று சொல்லி பின்பு நீநாளைக்குவாவென்று விடைகொடுத்தனுப்பிவிட்டு பத்திரன் மனைவியை வரவழைத்து உள்ளொன்று வெளியொன்றாக என்னோடு பாடவல்லவளுமுண்டோ வென்று கருவங்கொண்டு வந்திருக்கிறாளொருத்தி அவளோடு நீபாடவல்லையோ வென்று கேட்டான் அதற்கு ஐயா பாண்டியமஹாராஜனே எனது கற்பும் மதுரேசன் கருணையும் நிலைகொண்டிருக்கையாலே வந்தவளோடு பாடி வெல்வதேயல்லாமல் நான் பயந்திருக்கிறவளல்லவென்று பத்திரன் மனைவி சொல்ல பாண்டியன் அவளையும் நாளைக்குவாவென் றனுப்பிவிட்டு மற்றைநாள் பாண்டியன் சபையிலே அந்த இரண்டு பாடினிகளையும் வரவழைத்து பாடவிட்டுப் பாடல் கேட்குமுன்னே யாழ்ப்பாணத்தி லிருந்து கப்பல்வழியாக வந்த பாடினி பத்திரன்மனைவியைப்பார்த் திகழ்ந்து குற்றமெத்தனை குணமெத்தனை வீணைக்குத் தெய்வம் யார் முன்னே இசைப்பது எந்த உயிர் உயிரளவெத்தனை உடம்பளவெத்தனை உயிர்மெய்யளவெத்தனை இவைகளுக்கு மறுமொழி சொல்லிப் பின்பு நீ சமர்த்தியானால் என்னோடுபாடு இல்லாவிட்டால் நீ தோற்றவள் என்று சொன்னாள் அதற்கு பத்திரன் மனைவி நீயோ கப்பலிலிருந் திறங்கிவந்த பெருமையும் வித்தையும் வாதஞ்செய்வதில் உற்சாகமும் யாரும் ஆசைப்படத்தக்க உன் பெண்மையழகின் செருக்கும் இந்த ராஜகுமாரன்முன்னே உன் வாயைத் திறவாவிட்டால் எப்படி விளங்கும் ஏடி பெண்ணே உன்னோடு இசைவாது வெல்ல நான் ஒப்புவேனேயல்லது சும்மா வாய்ச்சண்டை செய்ய நான் எதிரியல்லேன் உன்னைப்போலே மானம்விற்றுண்டுபிழைக்கும் வேசிகளே வாய்ச்சண்டைக்குத் தக்கவர்களென்று பத்திரன்மனைவி மறுமொழி சொன்னாள் அப்போது பாண்டியன் அவ்விருவரையும் சண்டைவிலக்குகிறவன்போலே விலக்கி இப்போது நீங்களிருவரும் பாடுங்கள் தோற்றவள் வென்றவளுக்கு அடிமையாவதே சபதம் என்று ரோஷமுண்டாக்கிவிடவும் ஈழநாட்டுப்பாடினியானவள் ஏந்தி வீணையை இடது தோளிலே சாய்த்தி அவள் குரலின்படியே

கைவிரல்கள் தந்தியைத்தெறிக்க பெருமிதநகை உள்ளேநின்று சிறிதுதோன்ற ஏழிசைப்பாடலை ராஜகுமாரன் காதுக்கின்பமாக மழலையமுதம்போலப் பாடினாள் அதற்கு பத்திரன் மனைவிவீணையைக்கொண்டு முறுக்காணிகளைமுறுக்கிச் சுருதிகூட்டி யக்ஷக்கின்னரர்கள் நாணவிரல்கள் செல்லும்வழியே நாவில்வருகிற இன்னிசையமுதத்தைப் பலருங்கேட்கப்பாடினாள் அப்போது பாண்டியன் மனக்கருத்துச் சபையார்தெரியாமல் பத்திரன் மனைவிபாடலை மெச்சிக்கொண்டாடினார்கள் பாண்டியன் இலங்கையிலிருந்துவந்த பாடினிபாடலை மகிழ்ந்துகொண்டாடினான் அப்படியான பாண்டியன் கருத்தைத்தெரிந்து சபையார் பாண்டியன்கொண்டாடினபடியே இலங்கைப்பாடினிபாடலைக் கொண்டாடினார்கள் மன்னவனெப்படி மன்னுயிரப்படி என்கிறபடியே கொண்டாடினசபையாரைப்பார்த்து பாண்டியன் தனக்கு இன்பமானபரத்தை சுகபோகத்தைமகிழ்ந்துநீதி தவறி இன்று ஒருநாளிலே இவ்விருவர்பாடலையும் தெரிந்து சொல்லக்கூடுமோ போங்களென்றனுப்பிவிட்டான் இலங்கைப்பாடினியானவள் பாண்டியன் தன்னைமெச்சினதே வெற்றியாகக்கொண்டு பெருங்களிப்படைந்து தன்னிடத்துக்குவந்து தூங்குமஞ்சத்தின்மேலிருந்து இளைப்பாறிக்கொண்டிருந்தாள் இப்பால் பத்திரன்மனைவி மீனாக்ஷிசுந்தரேசர் திருவடிகளைவணங்கி வருந்திநின்று கண்ணீரொழுக அழுது ஸ்வாமி சுந்தரபாண்டியனாகி நீதிசெலுத்தின கடவுளே இந்தப்பாண்டியன் பக்ஷபாதமானவழக்குச்சொல்ல உடன்பட்டான் சபையாரும் அவன் சொன்னபடியே சொன்னால் எப்படி நியாயமான நீதிவிளங்கும் ஆனதினாலே உம்முடைய கிருபையாகிய துணைசெய்து எனக்குவந்த பகையைவென்று தரவேணுமென்றுவேண்ட கடவுள் அசரீரிவாக்காய்பெண்ணே நீபயப்படாதை நாளைக்கும் நீயே வெல்லும்படி செய்கிறோம் போவென்ன பத்திரன்மனைவி வீட்டிற்குப்போயிருக்க மற்றைநாள் பாண்டியன் அந்த இரண்டுபாடினிகளையும் வரவழைத்துநேற்றுச்சொன்னபடியேசொல்லிப் பாடுங்களென்ன சபையாரு மப்படியேசொல்ல அப்போது பத்திரன்மனைவி ஐயா பாண்டியராஜனே நீரோபக்ஷபாதமான நியாயஞ்சொல்லுகிறீர் சபையாரும் அப்படியே சொல்லுகிறார்கள் ஆனதினாலே தராசுமுனைபோல நியாயஞ்சொல்லுதற்கு நம்முடையகடவுள் சன்னிதிமுன்னேநின்று பாடினால் இருவர்பாட்டையுங்கேட்டு யாராயினுமொருவர் இன்னாள்வென்றாளென்று சொன்னாற்போதும் ஆகையால் அப்படிச்செய்யவேணுமென்ன பாண்டியன் அப்படியே செய்யுங்கள் நாளைக்கென்று விடைகொடுத்தனுப்பிவிட்டான் மற்றைநாள் பாண்டியனு மந்திரிகளும் அறம்பொருளின்பம் வீடாகியவைகளை முழுதுந்தெரிந்த பெரியோர்களும் கூடிப்போய் வெள்ளியம்பலவாணர் மணிமண்டபத்திலிருந்துகொண்டு அந்த இரண்டுபாடினிகளையும் கூட்டிவாருங்களென்ன ஏவலாளர் விரைவிலோடி அழைத்துவந்தார்கள் அப்போது இலங்கைப்பாடினி இந்தக்கிழவி இன்று தோற்று எனக்கடிமையாவதற்குச் சந்தேகமில்லையென்று மனக்களிப்புடனே முன்னேவந்தாள் பத்திரன்மனைவியும் தனதுகற்பும் கடவுள்திருவடிமேலன்பும் நிலையாகக்கொண்டுவந்தாள் அப்போது மதுரேசனும் முத்தாரங்களும் ரத்தினகேயூரங்களும் இன்னம்பலவித ஆபரணங்களும் விளங்க அலங்கிருதராய் தாமும் ஒருவித்வானாகி பெரியோர் கூட்டத்திற்கூடி வந்திருந்தார் அப்போது கப்பலிறங்கி வந்தவள் முன்னேபாட அதுகேட்டு சபையார் ஒன்றுங்கொண்டாடாமற் பேசாதிருந்தார்கள் அப்போதுபத்திரன்மனைவி சரஸ்வதிபோலிருந்து வீணையைக்கொண்டுபாடினாள்-எப்படியென்னில்.

குடங்கைநீரும்பச்சிலையுமிடுவார்க்கிமையாக்குஞ்சரமும்
படங்கொள்பாயும்பூவணையுந்தருவாய்மதுரைப்பரமேட்டி
படங்கொள்பாயும்பூவணையுந்தருவாய்கையிற்படுதலைகொண்
டிடங்கடோறுமிரப்பாயென்றேசுவார்க்கென்பேசுவனே.

தேனார்மொழியார்விழிவழியேசெல்லாதவர்க்கேவீடென்று
நானாவேதப்பொருளுரைத்தாய்நீயேமதுரைநம்பரனே
நானாவேதப்பொருளுரைத்தாய்நீயேபாதிநாரியுரு
வானாயென்றுபிறர்பழித்தாலடியேன்விடையேதறைவேனே.

வரதனாகியெவ்வுயிர்க்குமாயாவிருத்திவலியடக்கிச்
சரதமானவீட்டின்பந்தருவாய்மதுரைத்தனிமுதலே
சரதமானவீட்டின்பந்தருவாய்வீடுபெறுவார்போல்
விரதயோகநிலையடைந்தாயென்பார்க்கென்னான்விளம்புவனே.

என்று மதுரேசனைத்தியானித்து இப்படி இசைப்பாட்டாலே கனிந்துபண்ணுதல் பரிவட்டணை முதலாக இசைநூலிற்சொல்லிய தொழில்களெட்டும்வார்தல் வடித்தல்முதலாகிய இசைக்கரணங்களெட்டுந்தோன்ற மண்ணுலகத்தார் செவிகளுக்கேயல்லாமல் விண்ணுலகத்தார் செவிகளுக்கும் இன்னிசையமுதம் வார்த்தாள் இப்படி இடைபிங்கலை இயங்காமல் மூலாதாரந்தொடங்கி அசைந்து பொதுவானதொழிலால்பிரமரந்திரபரியந்தம்நடக்கஇசைக்குமுள்ளாள மிடறுவீங்காமலும் கண்களிமையாமலும் பல்தோன்றாமலும் புருவம்மேலே நிமிராமலும் கொடிறு துடியாமலும்பாட எல்லாருங் கேட்டுக் குதுகலங்கொண்டு மெய்ச்சத் தொடங்கும்போது பாண்டியன்முன்னே தான் கொண்டாடினவனையே கொண்டாட நினைக்க அப்போது கடவுளருளாலே பாண்டியன் மனக்கோணல்தீர்ந்து பத்திரன்மனைவியே நன்றாய்ப்பாடினாளென்று மெய்ச்சி இலங்கைப் பாடினிகழுத்தின்மேலே பத்திரன்மனைவியைக்கொண்டுவந்துவையுங்களென்று சொல்லும்போதுவித்வானாய்வந்திருந்தகடவுள் இந்தப் பத்திரன்மனைவி பாடலே ஆச்சரியம் ஆச்சரியமென்று கொண்டாடி சபையார்காண அப்பொழுதே மறைந்தருளினார் அதுகண்ட சபையாரெல்லோரும் அதிசயித்தார்கள் பாண்டியன்பயந்து இதுவிடைமேலழகர் திருவிளையாடலென்று தெரிந்து சபையாரும் பாண்டியனும் அடியவரன்பையும் கடவுளருளையும் ஆராய்ந்துபார்த்து ஆனந்தக்கண்ணீர்பெருகப் பேரின்பக்கடலில் முழுகினார்கள் உடனேபாண்டியன் கப்பலிறங்கிவந்தவள் பிடரின்மேலிருக்கிறவளை இறங்கச்செய்து அவளுக்குமுன்னே ஆடையாபரணங்கள் முதலான பலவெகுமானங்கள்செய்து பின்பு கப்பலிறங்கிவந்தவளுக்கும் சிலவரிசைகள்கொடுத்து ராஜசபைக்குவந்து மீனாக்ஷிசுந்தரேசராகிய வித்வானுக்கும்ஆபரணதிகள்முதலான சிறப்புச்செய்து ராஜாக்கள் பலமெல்லாம் தெய்வபலத்தின்முன்நில்லா அந்தத்தெய்வபலமும் மதுரேசன்முன்னேநில்லாவென்றுசொல்லும்பழமொழி இந்தப்பத்திரன் மனைவியாலே விளங்கக் கண்டோமென்று அதிசயித்து கடவுளிடத்தில் விடைகொண்டு கோயிலைவலம்வந்து ஆடல்பாடல்களுடனே தன்னரண்மனைக்குவந்து வாழ்ந்து பின்பு ராஜராஜராஜபாண்டியன் சுகுணபாண்டியனைப்பெற்று வாழ்ந்திருந்தான்.

இசைவாதுவென்றபடலம் - முற்றியது.

---

நாற்பத்தைந்தாவது

## பன்றிக்குட்டிகளுக்குமுலைகொடுத்தபடலம்.

### அறுசீரடியாசிரியவிருத்தம்.

இருளைக்கந்தரத்தில்வைத்தோன்றன்னிடத்தென்றுமன்பின்
றெருளைத்தந்தவட்குமாறுந்தெரிவையையிசையால்வெல்ல
வருளைத்தந்தளித்தவண்ணமறைந்தனந்தாயாய்ப்பன்றிக்
குருளைக்குமுலைதந்தாவிகொடுத்தவாறெடுத்துச்சொல்வாம்.

கலிநிலைத்துறை.

இம்மையிப்பவத்தன்னையாயினிவருபவமுஞ், செம்மைசெய்தசேதனத்தையுஞ்சேதனஞ்செய்தா
ரொம்மையெப்பவத்தாயினுமெனைப்பலவுயிர்க்கு, மம்மையப்பராய்க்காப்பவரவரலாலெவரே.

முன்னே தேவர்களுக்காக நஞ்சையுண்டதற்குச் சாட்சியாகக் கழுத்திலே நஞ்சைவைத்த நீலகண்டக்கடவுளுடைய மதுரைக்குத் தெற்கே குருவிருந்ததுறையென்றொருஊருண்டு அந்தஊரில் தேவர்குருவாகிய வியாழபகவானிருந்து தவஞ்செய்ய அவருக்காக வேண்டியவரங்களைக்கொடுத்து சித்திரத்தேர்வலவனும் லக்ஷுமிநாதனும் வணங்கக் குருநாதனென்னும் பெயரினாலே விளங்கத்தக்கது குருவிருந்ததுறை அந்தஊரில் சுகலனென்றொருவேளாளனுண்டு அவன்மனைவி சுகலையென்பவள் மஹாபதிவிரதையாய் வாழ்ந்து பன்னிரண்டு பிள்ளைகள் பெற்றாள் அந்தப்பிள்ளைகளை தாய்தகப்பன்மார் தங்களுக்குள்ள செல்வப்பெருக்கினாலே எவ்வளவும் தண்டியாமல் மிகுந்த அன்புகொண்டுவளர்க்குநாளில் அந்தத் தாயுந்தகப்பனுமிறந்துபோக அந்தப்பிள்ளைகள் எவ்வளவு மஞ்சாதவர்களாய் வேடருடனே கூடிக்

காட்டிலேவேட்டையாடி வெயில்ப்படாத ஒருமரப் புதலின்கீழேயிருந்து தவஞ்செய்கிற தேவகுருவை அங்கேகண்டு கைகளைக்கொட்டிச் சிரித்து கல்லு ம ணலும்வாரி அவர்மேலேவீசினர்கள் அப்போது த வஞ்செய்கிறதேவகுருவானவர் அந்தப்பிள்ளைகளைச் சினந்துபார்த்து நம்முடைய தவத்துக்கு விக்கினஞ் செய்தார்களேயென்று மனநொந்து பிள்ளைகளே உ ங்கள் நல்லதொழிலைவிட்டு வேடத்தொழில்செய்த லைகிறீர்கள் ஆனலும் நீங்கள் உழுகிறதொழிலாளிக ளானதினலே பன்றிவயிற்றிலேபிறந்து குட்டிகளா ய் தாயையுந்தகப்பனையு மிழந்து அலைந்து துன்பப் படக்கடவீர்களென்று கடியசாபமிட்டார் பின்புபா பரூபிகளான பன்னிரண்டுபிள்ளைகளும் பயந்து சா பத்தையேற்றுக்கொண்டு அய்யா பெரியவரே எங்க ளுக் கிந்தச்சாபம் எப்போது தீருமென்று மிகவும் வேண்டிக்கேட்க அதற்குத் தேவகுரு குருநாதனு டைய திருவடிகளைத் தியானித்துத் தமது கோபத் தைத் தணித்துக்கொண்டு பிள்ளைகளே உங்களுக்கு மதுரேசனே தாயாய்வந்து முலைகொடுத்து உங்களு யிரைக்காப்பாற்றிப் பின்புஉங்களைமந்திரிகளாகச்செ ய்து பின்பு அழியாதவீடும் தருவாரென்று சாபத்தி ற்கு விமோசனஞ்சொல்ல பின்பு அந்தப்பன்னிரண் டுபிள்ளைகளும் அந்தக்குருவிருந்ததுறைக்குப் பக்க மானகாட்டில் அனேகம்பன்றிகளுக்குத் தலைவனன பன்றியரசனது பெட்டைப்பன்றியின் வயிற்றில்வந் து குட்டிகளாகப்பிறந்து வளருகிறனளில் மதுரை யில் ராஜாதிராஜனென பாண்டியன் மதுரையைவிட் டு மேல்புறக் காடுகளெல்லாந்தேடி மான்வேட்டை யாடுதற்கு மதயானைமேலேறிக்கொண்டு தன்சேனை கள்நெருங்க வர அப்படியவன்வரும்போது மிருகங் கள்சஞ்சரிக்கிற இடங்கள்தெரிந்த வேட்டைக்காரர் கள் தோல்ச்செருப்பிட்ட கால்களுடனே மிருகங்க ள்செல்லுகிற அடிச்சுவடுகண்டு புலால்நாறுகிறவா யும் நெருப்புவிழிகளும்கொண்ட புலிகள் பன்றிகள் கடமைகள் மான்கள் மேய்கின்ற கும்பல்கண்டோடி வந்துசொல்ல சிலவேட்டையாடிகள் சீக்கிரத்திலே போய் அந்தக் கும்பலைச்சுற்றி வலைகட்டி அதிர்வெ டிமுழக்கி நாய்கள் சுற்றிலும்நிற்க மிருகங்களைக்கலை த்து ஒருபுறத்திலேயொதுக்கி ஈட்டி வேல்கள்கொ ண்டு வீரர்கள்சூழ்ந்துநிற்க யானைமேல் பாண்டியன் ஏறியிருக்க பம்பை தவண்டை சங்கு கொம்புமுதலி யபறைகளாலே திசைகள்செவிடுபடமுழங்க பலவி தங்களான பார்வை மிருகங்களைவைத்துக்காட்டி அ ந்தமிருகக்குரல்களுங் காட்டி புலி கரடி யானை கட மை மான் முதலியவைகள் மருண்டு கலங்கச்செய்து விற்களைவளைத்து வீரபாணங்களைப்பொழிந்தார்கள்

அப்போது அங்கே கூடின மான்களெல்லாம் கால்க ள்முறிந்தன தலைகளுடைந்தன ரத்தங்கள்பீறிட்டன வெள்ளைநிணம் வெளியே சரிந்து கைகளொடிந்து யானைகளிறந்தன கரடிகள் புலிகள் வாய்கள்கிழிந்து விழுந்திறந்தன கடித்தபுல்லும் கிழங்குகளுமாக அ வசரத்துடனேவந்து கண்ணிக்குளகப்பட்டன்சில சாயல் கண்டு பார்வைகளின் மேலே விழுந்தகப்ப ட்டனசில கட்டினவலைக்குத் தப்பி அப்பால் நாய் களைவிப்பிடிக்க அகப்பட்டனசில வீரர்கள் கைவே ல்களினலே குத்துப்பட்டிறந்தனபல இப்படி இறந் தவைகள்போக சிலகொலைவிலங்குகள்வலையைத்தா ண்டி அங்கேநிற்கிற வீரர்களை டெதிர்த்து மீண்டு பார்வை விலங்குகளோடு கூடி நிற்பனசில வீரர்கள் விட்ட அம்புகள் புலிகளைத்துளைத்துச்சென்றும்மா ன்களைஉருவியும் மலைக்கரடிகளைத்துளைத்தும் யானை களைப்பொத்தும் இப்படியாகமாண்டனபல அம்புப ட்டுத்தப்பி வலையைக் கிழித்துச் செல்கிற மானை நா ய்கள்பிடித்துக்கொண்டுநிற்க யானைகள்மேலேபட்ட வேலாலாகிய புண்வழியே மலைமேல் நெருப்பெரிவ துபோல ரத்தங்கள்பொங்குகின்றனசில வீரர்களொ லியும் பம்பைச்சத்தமும் கொம்புச்சத்தமும் அம்பு கள் பட்டு விழுகிற விலங்கின் ஓசையும் தப்பி ஓடு கிற மான்மேலே தாவிப்பாய்ந்து நாய்குலைக்குஞ்சத் தமும் அந்தக்காடெல்லாம் நிறைந்து இடிமுழக்கம் போலாக இப்படிபலமிருகங்களையும்கொன்று பாண் டியராஜன் மேலைத்திக்கில் போகும்போது ஒருபன் றிகண்டு தங்கள் பன்றியரசனிருக்கிற காட்டுக்கோடி முன்னே நின்று ஓ பன்றிராஜனே கேளும் பாண்டிய ன் இந்தக்காட்டிலுள்ள மிருகங்களையெல்லாங் கொ ன்றுகொண்டு இதோவருகிருன் நீர் அசட்டைபண் ணலாமோ வென்ன பன்றியரசன் மிகுந்தமனோரத ங்கொண்டு பாண்டியனேடுபோர்செய்ய வெண்ண ங்கொண்டு தன்பெட்டைப்பன்றியைப்பார்த்து ஓய்பெ ண்ணே நான்இன்று பாண்டியனுடனே சண்டைப ண்ணி வென்றுவருவேனே அல்லது சாவேனே இ னிநீஉன்குட்டிகளைக்காத்துக்கொண்டு இங்கேசாக்கி ரதையாய் இருவென்றுசொல்ல அந்தப்பெண்பன்றி ஓஓஅங்கேஉயிர்போனல் இங்கேஉடல்பிழைக்குமா பாவியானநாமிருவரும் பெற்றகுட்டிகளைக்கொடுத்த தெய்வபலத்தினலே ஜெயங்கொண்டுவந்தீரானல் உ யிர்வாழ்வேன் அன்றேல்நீர்இறந்தவிடத்திலேயே உ யிர்விடுவேன் உடலையல்லாமல் நிழலிருக்குமாநானு ம் கூடவருகிறேன் வாருமென்றுகுட்டிகளையுஞ்சூழ விட்டுக்கொண்டு பெட்டைப்பன்றி பின்னேபற்றிவர ம ஹாவேகத்துடனே பன்றியரசன் வீரர்கூட்டம்போ லேபலவகைமுள்ளம்பன்றிமுதலான பன்றிக்கூட்ட

ங்கள் முன்னேதிரள இந்தவராகவீரன் கண்களிலே நெருப்புப்பொறிகள்பறக்க முழுரோஷத்துடனே வருகிறபோது பாண்டியன் சேனைவீரர்கள் விடாத மழைபொழிவதுபோல அந்தப்பன்றிக்கூட்டத்தில்பாணவருஷங்களைப்பொழிய பாணங்கள்பட்டு முன்னே இரத்தவெள்ளம்பெருகின அந்த இரத்தவெள்ளத்திலேஉடல்கள் மிதந்தன குடல்கள்சரிந்தன எலும்புகள்முறிந்தன நிணங்களு மூளைகளும்சிதறின பருந்து காகங் கழுகுகள்மேலே பட்ர்ந்து பறந்தன உடல்வேறு பன்றிகளுயிர்வேறாயின அப்போது பன்றிகள் நெருப்பைப்போலே கொதித்துப் பாண்டியன் சேனைகளை சிலரைக்கடித்து சிலரை உதைத்து வாயிலே ரத்தம்பெருகக் கொம்பாலே குத்திசிலரை நெஞ்சுநேரே பிளந்து பன்றிகள்கொல்ல சிலவீரர்கள் காலொடிந்தார்கள் சிலர் தலையுடைந்தார்கள்சிலர் தோள்முறிந்தார்கள் சிலர் துடைமுறிந்தார்கள் சிலர் கை யாயுதங்கள் முறிந்தார்கள்சிலர் உயிர்போனார்கள் இப்படி பாண்டியன் சேனைவீரர்கள் சாவக்கண்டு பாண்டியன் மந்திரிகள் சீறி இருப்புலக்கை சக்கரமுதலியவைகளைக்கொண்டு அடித்து நறுக்கிகுத்திவெட்டி குறைத்து துணித்துப் பலவகையாகக் கொன்று தொலைக்க அதெல்லாங் கண்டு பெண்பன்றியானது தனது தலைவனான பன்றியரசனைப் பார்த்து ஓய்தலைவனே இப்போது நாம் முன்னே அனுப்பினபன்றிக்கூட்டங்களெல்லா மிதோ கொஞ்சக்காலத்தி லிறந்தழிந்தன நாமினி செய்யத்தக்கதென்ன கிடக்கிறது இனிநாம் வீணே இறந்துபோகாமல் தப்பிப் பிழைத்தோடிப்போவதே நல்லகாரியமென்று வேண்டிச் சொல்ல அது கேட்ட பன்றியரசன் சாவதற்கஞ்சாமல் (நுண்ணறிவுடையராய்நூலொடு பழகினும் - பெண்ணறிவென்பதுபெரும்பேதைமைத்தே) ஆதலால் உன்னுடைய அறிவுக்கேற்றபடி சொன்னாய் மானமுள்ளவர்கள் போர்க்குப் பின்வாங்கினால் குற்றமான பழிப்பல்லவோ இன்னம்இரண்டு சிங்கங்கள் தங்கிக்கிடக்கிற நீர்த்துறையில் ஒருபன்றிவந்து நீர்குடித்து மீளும் ஒருபன்றியிருக்கிற நீர்த்துறையில் வீரத்தில்மிகுந்த சிங்கம்வந்து தண்ணீர்குடிக்கப் பயப்படும் அப்படிப்பட்டவீரவுறுதிகொண்ட குலத்திலே பிறந்தேனாதலாலே இந்தவேப்பமாலையணிந்த பாண்டியன் வீரத்தினையடக்கி என் கீர்த்தியை எங்கும்பரவச்செய்யவல்லேனேயல்லது மடிவேன் அழிவது பூதவுடம்பேயல்லது புகழுடம்பழியுமோ நீ சும்மா இங்கேதானே நில்லென்றுதனது பேட்டுப்பன்றியை நிறுத்தி மற்றைப் பன்றிகளெல்லாம் என்காற்புறத்தில் நின்று பாண்டியன் சேனைகளைக் கொல்லவேணுமேயல்ல தோடக்கூடாதுஎன்றுசொல்லிப் பாண்டியா ஓடிப்போகாதை நில்லென்று கொதித்துவந்து நிலத்தைக்கிண்டிப் பள்ளமாக்கி அதிலிருந்து கிளம்புகிற தூளியினாலே ஆகாசமெல்லாமறையத் தான் தனியேவருகின்ற பன்றியரசனைப் பார்த்துப் பாண்டியன் அதன்வீரத்தை மிகவும் புகழ்ந்து கொண்டாடி வில்லைவளைத்துப் பாணங்களைப் பொழிந்தான் அப்போது பன்றியரசன் பாண்டியன்விடுகிற பாணங்களைப் பறித்துச் சிலபாணங்களைப் புல்லைப்போலக் கடித்தும் சிலபாணங்களைக் காலாலே தேய்த்தும் சிலபாணங்களை முறித்தும் சிலபாணங்களை வாலாலேவீசியுதிர்த்தும் இப்படிச் சின்னபின்னம் பண்ணுவதைப் பாண்டியன் கண்டு நாணித் தன் யானைகையிலே இருப்புலக்கையைக்கொடுத்துவர அதுகண்டு இடியேறுபோலே சீறிப் பன்றியரசன் அந்த யானையைக்கொல்ல நினைத்து அதன்கை வாழைத்தண்டுபோ லொடியச்செய்து தன் கொம்பாலே குத்திச் சிதைத்துக் கொல்ல உடனே பாண்டியன் ஒருதேர்மேலே பாய்ந்தேறிச் சக்கரத்தைச்சுழற்றி அதன்மேலே விட்டான் அந்தச் சக்கரத்தைப் பன்றியரசன் தடுத்துவிட்டு மிகுந்த வேகத்துடனே பாய்ந்து அவனேறின தேரையுடைக்கப் பாண்டியன் வேறே ஒருகுதிரைமேலேறி வேலாயுதத்தைச் சுழற்றும்போது பன்றியரசன் அவனேறின குதிரையின்பின்னேசென்று பாய்ந்து குடல்சரியவும் ரத்தமொழுகவும் கொம்பால்குத்திக் குதிரையைக்கொல்ல பாண்டியன் மனம்பொறாமல் கீழேகுதித்துத் தன்கையிருப்புத்தடியாலே அந்தப் பன்றியரசன் தலைமேலே ஓங்கியடிக்கப் பன்றியரசனிறந்து விமானமேலேறி மன்மதாகிருதியாய்த் தேவர்கள்வியந்து பூமழைபொழியச் சுவர்க்கலோகத்துக்குப் போய்த்தேவகானங்களைக்கேட்டும் அமுதம்பொசித்தும் தேவரம்பைகள் போகசுகமும் அனுபவிக்கலானான் பின்பு பெண்பன்றி எனதுநாயகன்சாக நான்கண்டிருக்கலாமோ வெல்லாவிட்டாலும் நானும்கூடச்சாகிறேனென்று கோபித்தெதிர்க்க அதுகண்டு அரசர்கள் பெண்மிருகத்தைக்கொல்வது நீதியன்றென்று விலக்கி வீரர்களுக்குத் தலைவனான சருச்சரனென்பவன் அத்துடனே போர்செய்யவளைந்து வெகுதேசகாலம் போராடப் பெண்பன்றி மிகவுஞ்சினத்து அந்தச் சருச்சரனாகிய வேடவீரனைமுட்டிக் கீழே தள்ளிக்கொல்லும்போது அவன் தன்கையிலிருந்த இரும்புத்தடியாலே அதன்தலைமேலே யோங்கியடித்து அதையுங்கொன்று தானும் அத்துடனே வீரசுவர்க்கம்சேர்ந்தான்.

பின்பு பாண்டியனும் மதுரைபோய்ச் சேர்ந்தான் அந்த ஆண்பன்றிவிழுந்து ஒருமலையாய் இன்

னமும் பன்றிமலையென்று விளங்குகின்றது அந்தமலையில் தபோதனர்கள் அளவில்லாதபேர்கள் மோக்ஷமடையத் தவஞ்செய்கிறார்கள் என்றுசொன்ன அகஸ்தியரைப்பார்த்து கேட்டமுனிவர்கள் ஐயா மஹரிஷியே அறிவில்லாத பன்றிவடிவாயிருக்கிற மலையிலே முனிவர்களிருந்து தவஞ்செய்வது என்ன காரணமென்ன அதற்குஅகஸ்தியர் கேளுங்கள் முனிவர்களே முன்னாளில் மன்மதன்போலே விளங்குகின்ற ஒருவிச்சாதரன்புலத்தியமஹாமுனி பண்ணுகிறதவத்துக்கு விக்கினமாக வீணையிசைபாடினான் அதுகேட்ட புலத்தியர் அவனைப் பன்றியாகச் சபித்தார் அதற்குஅவன் பயந்துஐயா முனீந்திரரேஎனக்கு எப்போது இந்தச்சாபம் தீருமென்றுகேட்கமுனிவர் ராஜாதிராஜனென பாண்டியன் வேட்டையாடவந்து பலமிருகங்களையுங்கொன்று உன்னையுங் கொல்வான் பின்பு இந்தவடிவைப்பெறுவாயென்றுசொன்னார் அவர்சொன்னபடியே அந்த விச்சாதரன் பன்றியாய்ப் பிறந்திறந்து பழையவடிவைப் பெற்றான் ஆதலாலே அந்தப்புண்ணியன் உடல்கிடந்தபடியே மலையாய் அதிலேபெரியோர்களெல்லாரும் வாசஞ்செய்கிறார்கள் மதுரேசனுமங்கே விரும்பியிருக்கிறார் என்று முனிவர்கள்கேள்விக்கு மறுமொழி சொல்லி இப்பால் அந்த ஆண்பன்றியையும் பெண்பன்றியையும் கொன்றவிடத்திலேயே அவர்கள்போட்டுவிட்டுப் போனபின்பு பன்னிரண்டுகுட்டிகளும் திகைத்துத் துன்புற்று தாயென்று இன்னமொருபன்றியின்பின்னே ஓடும் நல்ல நிழலைத்தேடியலையும் பால்குடிக்கப் பசியுந் தாகமுமிகுந்து உபத்திரவப்படும் வெயிலாலே வெதும்பும் இப்படி இந்தக்குட்டிகள் படும்பாட்டை யாராலே சொல்லிமுடியும் அப்போது மீனாக்ஷிசுந்தரேசர் தமதிச்சைப்படி விமானமேல்வந்தவர் கண்டிரங்கி அந்தக்குட்டிகள் துன்பந்தீர்க்க வெண்ணிஅன்புடைய தாய்ப்பன்றி வடிவீகொண்டுகிட்டிவர குட்டிகள் கண்டு தந்தாயென்று கிட்டி முட்டி மொய்த்து அதன் முதுகின்மேலேறி எட்டிஎட்டிக் கால்களாலுதைத்துநிலத்தைக்கிண்டித் துள்ளிக்குதித்து மீண்டுதிரும்பி இப்படிப்படுகின்ற குட்டிகளைப்பார்த்துப் பன்றிகாணுததாய்ப்பன்றி தன்மயிர்சிலிர்த்துத் தழுவிமோந்து முலைகுடிக்கச் செய்து அந்தக்குட்டிகளுக்கு மிகுந்தபலமும் வீரமும் ஞானமும் பெருமையும் நல்லகுணங்களுமுண்டாகச்செய்து முகமாத்திரம் பன்றிமுகமாகவும் உடம்பெல்லாம் மனிதவடிவாகவுஞ் செய்து ( கங்கைநாயகன்கடவுளர்நாயகன்கயற்கண் - மங்கைநாயகன் கருணையாந்திருவுருமறைந்தருளினர்.) ஆகையால்அவரே அறிவில்லாத பன்றிவடிவாகி அறிவுண்டாகச் செய்வாரானால் இனிநமக்குத் தாயுந்தந்தையுமாய்க் காக்கவல்லவரவரோயென்றுபின்னும்சொல்லுகிறார்.

பன்றிக்குட்டிகளுக்குமுலைகொடுத்தபடலம் — முற்றியது.

---

நாற்பத்தாறுவது

## பன்றிக்குட்டிகளைமந்திரிகளாக்கியபடலம்.

### கலிநிலைத்துறை.

தந்தைதாயிழந்தலமருங்குருளையைத்தாயாய், வந்துநாயகன்முலைகொடுத்தருளியவகையீ
தந்தவாறிருமைந்தருமந்திரராகி, யெந்தையார்சிவபுரம்புகுந்திருந்தவாறிசைப்பாம்.

எழுசீரடியாசிரியவிருத்தம்.

இன்னவாறெழுகும்பன்னிருவோருமீகையுந்தருமமும்புகழுந்
தென்னர்கோமகற்குவைகலும்பெருகத்திசையெலாம்விசயமுண்டாக்கிப்
பன்னகாபரணன்சிவபுரமடைந்துபரன்கணநாதருட்கலந்து
மன்னிவீற்றிருந்தார்மன்னர்மன்னவனும்வான்பதமடைந்துவீற்றிருந்தான்.

ஆதிநாயகன் திருவுருமறைந்தபின்பு அந்தப் பன்னிரண்டு பிள்ளைகளும் பன்னிரண்டு சூரியர்களும் கூடினாற்போல அந்தப்பன்றிமலையிலே எல்லாங்கற்றுணர்ந்து பலகலைகளிலும் வல்லவராய்க் கூடியிருந்தார்கள் அவர்களப்படி யிருக்குங்காலத்தில் கடவுளருள் எல்லா வுயிருக்கும் பொதுவா யின்பந்தருமென்பதை எல்லாருந்தெளிய அங்கயற்கண்ணம்மையானவள் தன்மணாளனை கடவுளைப்பார்த்து சுவாமி உலகத்திலே மிருகங்களிலே கெட்ட அறிவில்லாத மிருகமாகிய இந்தப் பன்றிக்குட்டிகளுக்குத்

என்று இப்படியாக கடவுள் கோயில்முன்னே நின்று துதித்து சுவாமி வேதாகமங்கள் முடியக்கற்று அவ்வழியே யானடந்தேனுனாலும் இல்லறமான மனைவி வாழ்க்கையில்லாமல் உன் பாதவருச்சனைக்குயோக்கியனுவேனே மனைவியில்லாதவன் உன்னைத் தொடலாகாதே ஓலகடவுளே இதுவேநல்ல சமையம் எல்லாமறிந்திருக்கிற நீர் இந்தப்பாண்டியன் கருத்தறியீரோ இந்தச்சமையத்தில்நான்போய்ச்சொல்லி ஆயிரம்பொன்னும் பெறும்படியான ஒரு கவி பாடியருளவேணுமென்று மிகவும் பிரார்த்தித்தான் அப்போது பாண்டியர் குலதெய்வமாகியகடவுள்.

கொங்குதேர்வாழ்க்கையஞ்சிறைத்தும்பி, காமஞ்செப்பாதுகண்டதுமொழிமோ
பயிலியதுகெழீஇய நட்பின்மயிலியற்
௪ செறியெயிற்றரிவைகூந்தலின், நறியவுமுளவோஅறியும்பூவே.

என்கிற ஒருசெய்யுளைச்சொல்லி எழுதிக்கொடுக்க தருமியென்பவன் ரெழுதுவாங்கி தனதுதுன்பந்தீர்ந்து கடவுள்சொன்ன பாடலைக்கைக்கொண்டு புதையல்கண்டெடுத்தவன்போல மனமகிழ்ந்து சங்கப்புலவர்களுக்கு முன்னேபோய் அங்கேகற்றுவல்லசான்றோர்கையில் அந்தப்பாடலைக்கொடுக்க அவர்கள்வாங்கி வாசித்துப்பார்த்து சொற்சுவை பொருட்சுவைதெரிந்து நல்லநல்லவென்று கொண்டாடிஅந்தச்சான்றோர்கள் பாண்டியனுக்கு முன்னேபோய்ச்சொல்ல பாண்டியன்கேட்டுத் தன் மனக்கருத்துக்கு ஒத்திருந்ததினாலே தலையை அசைத்து மனமகிழ்ந்து இந்தச்செய்யுள்பாடிக்கொண்டு வந்தபிராமணன் முன்னே முடிவுகட்டிவைத்த ஆயிரம் பொன்னும் யாதொரு தடையுமில்லாமற் பெறக்கடவனென்று கொடுக்க அப்போது பாண்டியனேவினபடியே கற்றுவல்ல சான்றோரோடு ஏவலாளிகள் கூடவந்து சங்கமண்டபத்துக்கு முன்னேகட்டித் தொங்குகிற பொன் முடிப்பை தருமி அறுக்கும்போது கீரன் நில்லென்று விலக்கி இந்தச்செய்யுளிலே குற்றமிருக்கின்றதென்றுசொல்ல தருமியென்பவன்கேட்டு பசியன் நெடுங்காலம் அன்னங்கிடையாமல் பட்டினியே கிடந்து கிடைத்துண்ணப் போம்போது கையைப்பிடித்துக்கொண்டால் அந்தப்பசியன் கலங்குவதுபோலக் கலங்கி மனமும் வாயுமுலர்ந்து பயந்து கடவுள் கோயில்முன்னேவந்து அந்தப்பாடலை வைத்து சுவாமி நீர் என்னகாரணத்துக்காக இந்த வழுவானபாடலை எளியேன்கையிலேகொடுத்தீர்தரித்திரமென்கிற வியாதிபிடித்து பலகாலமும் வழிபடுகின்ற உமதடியேன் இப்போது கிடைக்கிறபொருள் போயிற்றேயென்று அதற்கே நான்முழுதும் வருந்தவில்லை தெய்வநாயகனுன நீர்பாடினபாட்டு குற்றமென்று கொஞ்ச ஆயிசும் கொஞ்ச அறிவுமுள்ளவர்கள் சொல்லலானல் இனி உம்மை யாவர்தெய்வமென்று மதிப்பார்களென்றல்லவோ நான்முழுதும் துன்பப்படலானேன் இப்போதுநேரிட்ட அவமானம் உமக்கேயல்லாமல் எனக்கென்னவுண்டு ஓகோதெய்வமேயென்று முழுதும் மனம்வருந்தி அந்தச் சைவப்பிராமணன் அழ அப்போதங்கே எல்லார்க்கும் பந்தம் வீடு வேதம் அதன்பயன் ஆகிய எல்லாமான சுந்தரேசர் ஒருபுலவராக கண்டிகை மதாணி மோதிரம் கதிர்முடி வயிரம்பதித்தகடுக்கன் இவைகளாலே அலங்கிருதராய் முத்தமிழும் வல்லவரிவரோயென்று அறியவிட்டகுறிபோலத் திரிபுண்டரங்கள் நெற்றியிலே யிட்டுக்கொண்டு நல்ல பட்டங்கியும் போட்டுக்கொண்டு கங்கணங்களணிந்த தோள்களையுடைய கற்றுச்சொல்லிகள் அடைப்பைதாங்கவும் களாஞ்சிதூக்கவும் கோடிகமேந்தவும் முத்துக்குடை நிழலின்கீழே பொற்காற்சாமரை வீசவும் வேதமே பாதுகையாகத் தாங்கவும் தாமருளிச்செய்தவைகளைக்கற்றுப் பாடவல்லவரான வேதாகமங்கள் தருமசாஸ்திரங்களெல்லாந்தெரிந்த சான்றோர்கள்கூடின சங்கமண்டபத்துக்குவந்து அங்கே அவர்கள்முன்னேநின்று அவர்களைப்பார்த்து நாம் பாடியனுப்பின பாட்டிலே குற்றஞ்சொன்னவர் இவர்களில்யாரென்று கேட்குமுன்னே கீரன் அஞ்சாமல் நானே குற்றஞ்சொன்னவனென்ன வந்தபுலவர் அதில் எதுகுற்றமென்றுகேழ்க்க அவர்பெருமைகள் ஒன்றுந்தெரியாத கீரன் அப்பாட்டிலே சொற்குற்றமில்லை பொருட்குற்றமிருக்கிற தென்ன அதற்குப்புலவர் பொருட்குற்றமென்னவென கீரன் தனக்குக் குற்றம்வருவது தெரியாமல் முடிக்கும் பூவால்வாசமேயல்லாமல் கூந்தலுக்கு சுயமேவாசமேது அப்படி வாசமுள்ளதாக ( கூந்தலினறியவுமுளவோ ) வென்று வினவியதே குற்றமென்ன புலவர் பதுமினி கூந்தலுக்குஞ் செயற்கைதானே வென்ன கீரன் அவள் கூந்தலுக்கு மூடித் ததினலேதான் வாசமுண்டாகுமென்ன புலவர் தெய்வப்பெண்கள் கூந்தலும் அப்படித்தானேவென்ன கீரன் அந்தப்பெண்கள் கூந்தலும் மந்தாரமுதலிய மலர்களாலேதான் வாசங்கமழுமென்ன புலவர் நீ துதித்து வணங்குகின்ற பரஞ்சோதியான திருக்காளத்தியப்பர் பாகத்தே வீற்றிருக்கின்ற ஞானப்பூங்கோதை கூந்தலும்

அப்படித்தானேவென்ன அதற்கும் அஞ்சாமல் கீரன் ஞானப்பூங்கோதை கூந்தலுக்கும் அப்படியே செயற்கையாலேதான் வாசங்கமழுமென்று முழுதும் ஒரேநிலையாகச் சாதிக்கும்போது வந்த கடவுட்புலவர் தமது நெற்றிக்கண்ணைக் கொஞ்சந் திறந்துகாட்ட கீரன்கண்டு பயப்படாமல் நீரோபரமசிவனுனாலுமாக உம்முடைய நெற்றியிலேயொருகண்காட்டினதுபோல உம்முடைய உடம்பெல்லாம்சண்களாகக்காட்டினாலும் பாட்டில் குற்றம் குற்றமேயென்று சொல்ல அப்போது கடவுள் நெற்றிக்கண்வெம்மை கீரன் மேலே தாக்கி பொற்றாமரைக் குளத்திலே போய் விழுந்தான் அவனையெரித்து வீழ்த்தின கடவுள் உடனே தமதுதிருவுருமறைந்தருளினர்.

தருமிக்குப்பொற்கிழியளித்தபடலம் – முற்றியது.

---

ஐம்பத்துமூன்றாவது

# கீரனைக்கரையேற்றியபடலம்.

கலிநிலைத்துறை.

மாரனைப்பொடிகண்டவனந்தணமைந்தனுக், காரநற்கனகக்கிழியீந்ததறைந்தன
மோனத்திரள்சூழ்மலரோடையிடத்தினுங், கீரனைக்கரையேற்றியவாறுகிளத்துவாம்.

சம்பகமாறனென்னுந்தமிழ்நர்தம்பெருமான்கூட, லம்பகநுதலினேயங்கயற்கண்ணினை
வம்பகநிறைந்தசெந்தாமரையடிவந்துதாழ்ந்து, நம்பகநிறைந்தவன்பாற்பல்பணிநடத்திவைகும்.

கடவுள் நெற்றிக்கண்ணாலே தாக்கப்பட்டகீரன் பொற்றாமரைக்குளத்திலே விழுந்து துக்கசாகரத்திலேயழுந்தித் துன்பப்படுதலை அவரோடு கூடின சங்கப்புலவர்கள்கண்டுபொறாமல் அரசனில்லாதகுடிகளும் நாயகரத்தினமில்லாத கண்டியும் ஞானமில்லாத கல்வியும்போலச் சங்குலைகுலைந்து ஐயையோ சொல்லும்பொருளுமான கடவுளோடு வாது செய்த குற்றமெப்படிதீருமோ இனிக் கீரன்பிழைப்ப தருமையென்றெண்ணி முன்னாளிலே வெள்ளிமலையை வேரோடுபெயர்த்த ராவணன்பயந்து கைவீணையாலே இன்னிசைபாடக் கேட்டு மனமிரங்கின கடவுள் பின்னும் அந்தராவணனுக்கு தேரும் வாளும்கொடுத்து அவன்செய்த குற்றத்தையும் பொறுத்தருளினரல்லவோ ஆகையாலே இக்குற்றத்தை ஒருவராலுந்தீர்க்கப்போகாது எல்லார்க்குந் தெய்வமான கடவுளே மனமிரங்கினற் றீர்ந்துபோகுமென்று துணிந்து சொல்லிக்கொண்டுபோய்ப் புலவர்கள் கடவுளடிநிழலிலே யொதுங்கி நின்றுவணங்கி.

திருத்தனேசரணஞ்சரணம்மறைச்சென்னிமே, னிருத்தனேசரணஞ்சரணந்நிறைவேதநூ
லருத்தனேசரணஞ்சரணந்திருவாலவா, யொருத்தனேசரணஞ்சரணங்களுனக்குநாம்.

பாயுமால்விடைமேல்வருவோய்பல்லுயிர்க்கெல்லாந், தாயுந்தந்தையுமாகுநின்றண்ணளிதாமரைக்
கேயுமாதவன்போனல்லதீயவியற்றினர்க், காயுமின்பமுந்துன்பமுமாக்குவதாதலால்.

அத்தகற்றசெருக்கினறிவழிகீரனின், வித்தகக்கவியைப்பழுதென்றவிதண்டையான்
மத்தகக்கண்விழித்துவெதுப்பின்மலர்ந்தபொன், முத்தகக்கமலத்திடைவீழமுடிக்கினுய்.

என்று துதித்து ஓ நீலகண்டக்கடவுளே இனி இந்தக் குற்றத்தைப் பொறுத்தருளவேணு மென்று கபிலனும் பரணனுமுதலான புலவர்களெல்லாம் சரணமென்று விழுந்து வணங்கி மிகவும் வேண்டினர்கள் அப்போது அந்தப் பாற்கடலிற்பிறந்தநஞ்சையுண்ட கிருபாசொரூபியான கடவுள் கரும்பின் மாதுரியத்தையும் வெல்லத்தக்க தீஞ்சொல்லையுடைய மீனாக்ஷியம்மையோ டெழுந்துவந்து நக்கீரன்கிடக்கின்ற பொற்றாமரைக் குளத்தருகேபோய் குளிர்ந்த மதுரத் தீஞ்சொற் புலவர்கூட்டத்திலே நின்றருளினர் அப்படிநின்றருளின கடவுள்முன்னே நெருப்புக்கண்ணாலே பார்த்து வீழ்த்தி இப்போ தருட்கண்ணாலேபார்க்க ஆழ்ந்தநீரிலேகிடக்கிற நக்கீரன் பொறி புலன் கரணங்களெல்லாம் கடவுள்விஷயமாயொருமித்து அவரது கிருபைக்கடலிலே முழுகி அன்புருவாய் ஐயோ உலகமாதாவான ஞானப்பூங்கோ

கள

தையம்மை கூந்தலுக்குங் குற்றஞ்சொன்ன என்வாய்க்குற்றத்தை சுந்தரக்கடவுளையல்லாமல் யார்பொறுத்தருளுவாரென்று (காளத்திகையில) யென்றெடுத்தசொன் மாறிமாறியிசைய நேரிசைவெண்பாவினாலே ஒரு அந்தாதிபாடித் துதிக்க அதுகேட்டகடவுள் அவன் முன்னேவந்து அவன்கையைப்பிடித்துக் கரையேற்றிவிட்டார் கரையேறின கீரன் பிறவிக்கடலினின்று கரையேற்றவல்ல கடவுளையும் அங்கயற்கணம்மையையும் வணங்கி அவ்விருவருடைய திருவடிக்கீழ் குற்றஞ்செய்தவர்களுக்குப் பயந்தண்டமும் நன்மைசெய்தவர்களுக்கு அன்புஞ் செய்கின்றதே பொருளாகக்கொண்டு கடவுளருளை வேண்டிப் பாடுகின்றார்.

அறனிலாளிழைத்தவேள்வியழித்தபேராண்மைபோற்றி, மறனிலாத்தண்டிக்கிந்தமாண்பெருங்கருணைபோற்றி
கறுவிவிழ்கூற்றைக்காய்ந்தகனைகழற்கமலம்போற்றி, சிறுவனுக்கழியாவாழ்நாளளித்தருள்செய்திபோற்றி.

சலந்தரனுடலங்கீண்டசக்கரப்படையாய்போற்றி, வலந்தருமதனைமாயோன்வழிபடக்கொடுத்தாய்போற்றி
அலர்ந்தசெங்கமலப்புத்தேணடுச்சிரமரிந்தாய்போற்றி, சிலந்தியைமகுடஞ்சூட்டவரசருள்செல்வம்போற்றி.

திரிபுரம்பொரியநக்கசேவகம்போற்றிமூவர்க், கருளியதலைமைபோற்றியனங்கனையாகந்திய
வெரியிடுநயனம்போற்றியிரதிலந்திரப்பமீளக், கரிய:வன்மகனுக்காவியுதவியகருணைபோற்றி.

நகைத்திடவந்தவந்தகுசிரந்திருகிவாங்கிச், சிகைத்திருமுடிமேல்வைத்ததிண்டிறல்போற்றிகோயி
லகத்தவிசுடரைத்தூண்டுமெலிக்கரசாளமூன்று, சகத்தையுமளித்ததேவர்தம்பிரான்சரணம்போற்றி.

[போற்றி
பொருப்பகழ்ந்தெடுத்தோன்சென்னி புயமிறமிதித்தாய்போற்றி, யிருக்கிசைத்தவனேபாட விரங்கிவாள்கொடுத்தாய்
தருக்கொடுமிருவர்தேடத்தழற்பிழம்பானாய்போற்றி, செருக்குவிட்டவரோபூசைசெய்யநேர்நின்றாய்போற்றி

பருங்கைமால்யானையேனம்பாய்புலியரிமான்மீன, மிருங்குறள்யாமைசொண்டவிசல்வலிகடந்தாய்போற்றி
குரங்குபாம்பெறும்புநாரைகோழியாணலவன்றேரை, கருங்குரீஇசுழுகினன்புக்கிரங்கியகருணைபோற்றி.

சாலநாளிழைத்ததீங்குக்கென்னையுந்தண்டஞ்செய்த, கோலமேபோற்றியஞ்சிக்கொடியனேனெடுத்தபுன்சொன்
மாலைகேட்டென்னையாண்டமலைமகண்மணாளபோற்றி, யாலவாயடிகள்போற்றியம்மைநின்னடிகள்போற்றி.

ஆ! துன்பப்பட்டேன் அடியேனுக்கருளருளென்றிப்படிக் கோபமும் பிரசாதமுந்தோன்ற கடவுளையும் தேவியையும் போற்றி போற்றியென்று பாடிப் பின்னும் தேவகானத்தோடுகூடிய ஏழிசையெழுகூற்றிருக்கையும்பாடிச் சொக்கநாதருடைய சேவடிகள் தன்சிரசின்மேலேபட விழுந்து பணிந்தெழுந்தான் மற்றப்புலவர்களுந் தனித்தனிபாடித் துதித்து வணங்கினார்கள் பின்பு கடவுள் தம்மைப்பாடித்துதித்த நக்கீரருக்கு இன்னருள் சுரந்து நீ முன்போலவே பாண்டியனாலே மெய்ச்சப்பட்ட புலவர் கூட்டத்திலே போயிருவென்றுசொல்லித் தமது திருவுருமறைந்தருளி இந்திரவிமானக்கோயிலுக்குள் அம்மையோடெழுந்தருளியிருந்தார் பின்பு நக்கீரரும்புலவர்களும் சங்கமண்டபத்திலே தொங்கக்கட்டின பொற்கிழியென்கிற பொன்முடிப்பை அந்தத் தருமியென்னுஞ் சைவப்பிராமணனுக்குக் கொடுத்து பாண்டியனாலும் வரிசைகள்கொடுக்கச்செய்து தளர்வில்லாத கல்விச்செல்வரா யமர்ந்திருந்தார்கள் பின்பு சண்பகபாண்டியன் மீனாக்ஷிசுந்தரேசரைவந்து வணங்கி நிறைந்தமெய்யன்புடனே பின்னும் கோயிலுக்கும் கடவுளுக்கும் வேண்டிய திருப்பணிகள் நடத்திக்கொண்டுவந்தான்.

கீரனைக்கரையேற்றியபடலம் - முற்றியது.



## ஐம்பத்துநான்காவது
# கீரனுக்கிலக்கணமுபதேசித்தபடலம்.

### அறுசீரடியாசிரியவிருத்தம்.

கொன்றையந்தெரியல்வேய்ந்தகூடலெம்பெருமான்செம்பொன்
மன்றலங்கமலத்தாழ்ந்துவழிபடுநாவலோனை
யன்றகன்கரையேறிட்டவருளுரைசெய்தேமிப்பாற்
றென்றமிழனையான்றேறத்தெருட்டியதிறனுஞ்சொல்வாம்.

கலிநிலைத்துறை.

மாதவன்றனக்காலவாய்மன்னவனருளாற், போதகஞ்செய்தநூலினைப்புலவரேனோர்க்கு
மாதரஞ்செயக்கொளுத்தியிட்டிருந்தனனமலன், பாதபங்கயமூழ்கியபத்திமைக்கீரன்.

முன்பு கடவுளருளாலேசென்று புலவர் கூட்டத்திற்கூடி வாழுகின்ற நக்கீரர் தமதுள்ளத்திருந்த கோணல்தீர்ந்து மதுரேசர் திருவடிகளிலே மிகுந்த அன்புகொண்ட மனத்துடனே ஆராய்ந்து பார்த்து முன்னேகடவுள் நெற்றிக்கண்ணாலே எரிந்த மன்மதன் பிரமா விஷ்ணுக்களாலும் உருவாகாமற்போனான் நம்மையும் அந்தக்கண்ணேசுட அந்த வெம்மையைத்தீர்த்து ரக்ஷித்ததல்லவோ இந்தப் பொற்றாமரைத்தீர்த்தம் ஆகையாலே இந்தத்தீர்த்தமே நம்மையெக்காலமும் ரக்ஷிக்கத்தக்கதென்று வேறுபாடில்லாத மனத்தையுடையவராய் மூன்று காலமும் போய்முழுகி முழுகி.

அப்பனையாலவாயெம்மடிகளையடியார்சேம
வைப்பினையிறைஞ்சிநித்தம்வழிபடுநியமம்பூண்டான்.

இப்படிக் களங்கமில்லாத மனத்துடனே வந்துவழிபடுகின்ற நக்கீரர் நியமத்தைக்கண்டு சோமசுந்தரக்கடவுள் கிட்டி மனமகிழ்ந்து இந்தக்கீரனுக்கிலக்கணமின்னந்தெளிவாக வரவில்லை ஆதலாலே இதுசெஞ்சொல் இது வழூஉச்சொல்லென்றுதெரிகிலன் இனிகுற்றந்தீர்ந்த கேள்வியறிஞர்கள் யாரைக்கொண்டு இவனுக்குப் போதிப்போமென் றெண்ணி ஆலோசிக்கும்போது அம்மையானவள் தன்னுடையதாமரைமலர்போன்ற கைகளைக்குவித்து வணங்கி ஸ்வாமி உள்ளங்கை நெல்லிக்கனிபோல எல்லாமொருங்குணர்ந்த உம்முடைய சங்கைக்கு விடைசொல்ல வல்லவர்களெங்கேயாரிருக்கிறார்கள் ஆனாலு மென்மனத்துக்குத் தோற்றியதொன்றுசொல்லுகிறேன் அதாவது முன்னொருகாலத்திலே வெள்ளிமலையினிடத்து இந்திரன் பிரமன்விஷ்ணு சனகாதி நால்வர் முதலான எல்லாருங்கூடினபோது அங்குப் பூமிதாங்காமல் வடகீழ்த்திசை அழுந்தித்தாழ்ந்தது தென்மேற்றிசை உயர்ந்தது அதுகண்டுதேவர்களெல்லாம் உம்மை வணங்கித்துதித்து சுவாமி உம்மையொப்பான ஒருவரை தென்மேற்றிசையிற்போயிருக்க விடைகொடுத்தால் இந்தப்பூமி சரியாக நேரே நிலைநிற்குமென்றார்கள் அப்படிச் சொல்லக்கேட்ட நீர் கடலைக்குடித்த அகத்தியனே நம்மையொப்பானவன் அவன் மனைவாழ்க்கைக்குரிய வுலோபாமுத்திரையே பார்வதியை யொப்பானவளென்று அங்கே போயிருக்கும்படி அந்த அகத்தியமுனியை யனுப்பும்போது அந்தமுனிவன் சுவாமி நான்போகும்படியான நாடோ தமிழ்வழங்குநாடு அந்தநாட்டிலுள்ளவர்களெல்லாம் தமிழாராய்ந்து கேட்டுத் தெளிந்தவர்கள் அவர்களுக் கெல்லாம் கேள்விக்குவிடைசொல்லவேண்டும் ஆதலால் அந்தச் செந்தமிழிலக்கணம் எனக்குத்தெரிய அருள்செய்யவேண்டுமென்றான் அதற்கு அவன்கேட்டுக் கொண்டபடியே இலக்கணமுதனூலைத் தெளியச்சொன்னீர் அப்படி இலக்கணந்தெளிந்துகொண்ட பின்னும் சுவாமி இனி எக்காலம் உம்முடைய திருவடியைக்கண்டு சேவிப்பேனென்ன அதற்கு நீகடம்பவனத்திலே நம்மைக் கண்டுசேவித்துக்கொள்ளென்று இன்னும் உனக்கு வேண்டியவைகளெல்லாம் அங்கே நம்மிடத்திலே பெற்றுக்கொள்ளக் கடவையென்று விடைகொடுத்து பொதியமலையிற்போயிருக்க அனுப்பினீர் அப்படியே இன்னம் உலோபாமுத்திரையுடனே கூடி அங்கேதானே யிருக்கின்றான் இதுசெய்தி உமக்குஞாபகமுண்டாகத்தெரிவித்தேன் உம்முடைய திருவுள்ளத்துக்குச் சம்மதமானால் இந்தக் கீரனுக்கு அந்த அகத்தியமுனியை அழைத்து இலக்கணம் தெளியப்படுத்துமென்று தேவிசொல்ல கடவுள்மகிழ்ந்து அக்காலத்தினடந்தவெல்லாம் இன்றளவும் மறவாமலிருந்து சொன்னையல்லவோவென்று கொண்டாடி அப்படியேசெய்கிறோமென்று அந்தக்குடம்பெற்ற முனியான அகத்தியனை நினைத்தார் அப்போது எல்லாமுடைய நாயகனை கடவுள் திருவுள்ளந்தெரிந்து தலைமேலே கைகளைக் குவித்துக்கொண்டு அரிய தவமான விமானத்தின்மேலே தன்பத்தினியோடேறி ஆகாசமார்க்கமாகவந்து அந்தத்தவத்தேரைவிட்டுப் பத்தினியுடனே தமிழ்முனிவனிறங்கிக் கடவுள் கோயிலுக்குள்ளே புகுந்து நான்குபுயங்களுடனே விளங்குகின்ற கடவுளாகிய செம்பவள மலையையும் அதனருகே விளங்குகின்ற தேவியாகிய இந்திரநீலமலையையும் வணங்கி பெருகுகின்ற அன்புமனத்திலே துளும்பிப்பொங்கவும் மெய்ஞ்ஞானானந்தம்பெருகவும் கடவுளருகே ஒருபுறத்திலிருக்க அப்போது அவ்விடத்தே நக்கீரரும் பொற்றாமரைக்குளத்திலே நீராடிக்கடவுளை முன்புபோலவே உருகுகின்ற அன்புடனே விரைவில் வணங்கவந்தார் அப்போது நக்கீரர்வரக்கண்ட கடவுள் அகத்தியரைப்பார்த்து ஓய் அகத்தியமுனிவரோ இந்தக்கீரனுக்கின்ன மிலக்கண நிரம்பவில்லை ஆதலால் நீரெம்மிடத்தேதெரிந்துகொ

ண்டபடி குற்றந்தீரத் தெளிவுபடுத்துமென்று செவ்வாய்மலர்ந்தருளினர் உடனே சந்திர சடாதரனை கடவுளனுக்கிரகித்ததை தலையினு மனத்திலுங்கொண்டு நக்கீரனையழைத்து வணங்குவித்து அகத்திய முனிவர் நக்கீரருக்கு வடநூலார் வியாகரணமென்கிற இலக்கணஞ்சொல்லத் தொடங்கினர் எப்படியென்றால் பொதுப்பாயிரஞ் சிறப்புப்பாயிரங்களைக் கொண்டு எழுவகைமதங்களுடனே நான்குபொருளுங்கூடிப் பத்துக்குற்றங்களையுந் தவிர்த்து பத்தழகும் முப்பத்திரண்டு யுத்திகளும் பொருந்திய முனைவன்கண்ட முதனூலைத் தொகைவகைவிரியாக கருத்துரை பதவுரைமுதலிய காண்டிகையுரையாலும்விருத்தியுரையாலும் நூலிலுள்ளபொருளைக் குற்றமில்லாமல் விளங்கத்தெரிவித்தார் அப்படித்தெரியப்படுத்தின வழிநூலாசிரியனை அவர்சொல்லியவகை கண்டு அந்தநூலின்பொருள்வடிவான முதனூலாசிரியன் களிப்பும் இன்பமும் கருணையுந்தழைக்கத் தம்முடைய திருக்கைகளாலே உள்ளேமகிழ்வுபொங்க ஆலிங்கனம்பண்ணி அவருக்குவேண்டியனவெல்லாம் அருள்செய்து பொதியமலையிலே போயிருக்க விடைகொடுத்தனுப்பிவிட்டார் உடனே உலோபாமுத்திரையோடு குறுமுனியான அகத்தியர் விடைபெற்றுப் போனபின்பு அங்கயற்கண்ணம்மை தன்கணவனைப்பார்த்து சுவாமி என்னகாரணத்தினலே நீரே சொல்லாமல் கீரனுக்கு அகத்தியராலே இலக்கணஞ் சொல்லுவித்ததென்று கேட்க அதற்கு மதுரேசர் பெண்ணேகேள் நூல்சொல்லவேண்டியது தனக்குவழிபாடுசெய்வோன் மிகவும்பொருள்கொடுப்பவன் மனமார்ச்சரியமில்லாதவன் சொன்னசொற்கடவாதவன் ஆகிய இப்படிப்பட்டவர்களுக்கே சொல்லுவது தருமம் இந்தக்கீரன் என்னேடுகொண்ட மனமார்ச்சரியத்தாலே நாமேசொல்லாமல் அகத்தியனலே சொல்லுவித்தோமென்ன அம்மைகேட்டுக் கவலைதீர்ந்து மகிழ்ந்திருந்தாள். பின்பு இலக்கணந்தெரிந்துகொண்ட நக்கீரர்தான் முன்னேபாடின கவிகளெல்லாம் ஆராய்ந்துபார்த்து அதிலுள்ள வழுவழாநிலைகளெல்லாந்தெரிந்து ஐயோ நான்யாதுகாரணத்தினலே முழுதொருங்குணர்ந்த கடவுள்பாடலிலே பொருள்வழுச்சொன்னேன் வேதாந்தங்களும் தொடப்படாதபாதங்கள் பூமிதொடும்படி வந்தருளின நிறைந்தபரஞ்சோதி நிராமயனை வெள்ளியம்பலக்கூத்தன் விஷயத்தில் அபராதியானேன் எப்படியென்றால் அல்பமதிகளே அதிக கெருவிகளென்கிற பழமொழி என்மட்டாகவன்றோ முடிந்தது இன்னும் அட்டமூர்த்திக்குச்செய்த குற்றத்தினலே அக்கடவுள் நெற்றிக்கண்ணே என்னுடம்பைச்சுட்டதேயன்றி என்னெஞ்சையுஞ் சுடுகின்றதேயென்று பலவிதமாக மனநடுங்கிப் பின்னும் பிள்ளையைப் பெற்றதாயானவள் கசக்குமருந்தை வாயிலூட்டிப்பிணியைத் தீர்த்தாற்போல் என்னுடனே பகைகொண்டுவலிந்து என்குற்றந்தீரத் தெளிவுசெய்தகடவுளுக்கு நான் செய்யக்கிடந்த தென்னவென்று அளவில்லாத பேரின்பக்கடலிலே முழுகி கடவுள் அகத்தியராலே தமக்குத்தெளிவுசெய்த நூலை எல்லாப் புலவர்களுக்கு மன்புடனேபோதித்து கடவுள் திருவடிக்கன்பு மிகுதியுமேன்மேலாக நக்கீரர் சங்கத்திலிருந்தார்.

கீரனுக்கிலக்கணமுபதேசித்தபடலம் – முற்றியது.



ஐம்பத்தைந்தாவது

## சங்கத்தார்கலகந்தீர்த்தபடலம்.

### அறுசீரடியாசிரியவிருத்தம்.

காமனைப்பொடியாக்கண்டகண்ணுதல்தென்னூல்கீர, நாமநற்புலவர்க்கிந்தநலமிதுபொலம்பூங்கொன்றைத்
தாமனச்சங்கத்துள்ளார்தலைதடுமாற்றந்தேற, வூமனைக்கொண்டுபாட்டுணர்த்தியவொழுக்கஞ்சொல்வாம்.

உலகினுட்பெருகியந்தவொண்டமிழ்மூன்றும்பாடற், நிலகமாய்ச்சிறந்தவாய்ந்ததெய்வநாவலருந்தங்கள்
கலகமாநவையிற்றீர்ந்துகாசறுபனுவலாய்ந்து, புலமிகுகோட்டிசெய்துபொலிந்தனரிருந்தார்போலும்.

அந்தச்சங்கப்புலவர்கள் நாற்பத்தெட்டுப்பேர்களும் தனித்தனி வெவ்வேறே செந்தமிழ்ச்செய்யுள்கள்பாடி அவரவர்களும் தங்கள் தங்களைமெய்ச்சிப்பெருமைகள்பேசி மாறுகொண்டு பின்பு அவரவர் தராதரந்தெரிந்து சொல்லவல்ல முதனூலாசிரியனைகடவுள் சந்நிதிமுன்னே வந்தார்கள் அப்படிவ

ந்தவர்கள் கடவுளை வணங்கி சுவாமி நாங்கள் பாடின இந்தப்பாடல்களின் நல்லதும் தீயதும் தெரிந்து வேறுபாடுகளை அளவிட்டுக்காட்டிஅவைகளின்குற்றங்களைப்போக்கிஎங்கள்சந்தேகந்தீர்த்தருளவேணுமென்று வேண்டிக்கொள்ள அதைக்கேட்டவேதமுதல்வனுனகடவுள் முன்னே பிரமாவிஷ்ணுக்கள்தேடவளர்ந்து நெருப்புமலையாகநின்று அதிலிருந்துவந்த வடிவுபோல சச்சிதானந்த சொரூபமாய் உலகுக்கெல்லாங் காரணமாகமுளைத்த மூலவிலிங்கத்திலிருந்தும் காணக்கூடாத ஒருபுலவராகிவந்து ஓப்புலவர்களே இந்தமதுரையிலே ஒருவர்த்தகன் குபேரன்போலும் பாக்கியவான் அவன்பேர் தனபதி அவன்மனையாள்பேர் குணசாலினி அவ்விருவருக்கும் அவர்கள்செய்த மகாதவத்தினுலே வெள்ளறிவாளருடைய அஞ்ஞானவிருள்நீங்க ஞானசூரியன்போல அவதரித்திருக்கிறுன் அவனே தெய்வத்தன்மையான மன்மதன் போலும் வடிவழகுள்ளவன் ஆனுல் வாய்பேசாத ஊமைப்பிள்ளை அவனிடத்தில் நீங்கள் எல்லோரும்போய் நீங்கள்பாடின பாடல்களையெல்லாம் சொல்லுங்கள் அவன் கேட்டு தன்புத்திக்கிசைந்து நன்றுனபாடல்களே எல்லாருமதிக்கும்படியான பாடல்கள் என்றுசொல்ல அதற்குப்புலவர்கள் சுவாமி அவன் ஊமையானுல் எங்கள்பாடல்களிலுள்ளநன்மைதீமைகளை எப்படித்தெரிந்துசொல்லமாட்டுவானென்றுகேட்க வெள்ளியம்பலவாணர் ஓய்புலவர்களே அவன் செட்டிப்பிள்ளையாய் ஊமையாயிருந்தாலும் உங்கள்பாடல்களிலுள்ள சொல்லாழமும் பொருளாழமுங்கண்டால் தலையையசைத்து உடம்பெல்லாம்புளகித்து மனங்களித் தானந்திப்பான் அப்போதுங்களுக்கெல்லாம் உண்டான கலகந்தீருமென்றுசொல்லி ஆலயத்துக்குள்ளேபுகுந்தருளினுர் பின்பு புலவர்களெல்லாருங் கூடிப்போய் அந்தச் செட்டிப்பிள்ளையைக்கண்டு அழைத்துக்கொண்டுபோய்த் தங்கள் சங்கத்திலே யிருக்கப்பண்ணி நல்லசந்தன களபக்கஸ்தூரி புஷ்பங்களாலே அலங்காரம்செய்து விசுவசித்து முன்னேயிருந்து தாங்கள்பாடின அருமையான தீந்தமிழ்களைச்சொன்னுர்கள்அப்போதந்த ஊமைப்பிள்ளை அப்பாடல்களைக்கேட்டு சிலர் சொல்லாழங்களைமகிழ்ந்தான் சிலர்பொருளாழங்களைமகிழ்ந்தான் சிலர் சொற்கூட்டுகளை இகழ்ந்தான் சிலர் பொருட்கூட்டுகளை இகழ்ந்தான் சிலர் சொல்லின்பங்களைப்புகழ்ந்தான் சிலர்பொருளின்பங்களைப்புகழ்ந்தான் சிலர்சொல்லுறுதிகளையும் பொருளுறுதிகளையுந் தேர்ந்துகொண்டாடினுன் இப்படிப் புலவர்கள்பாடின தமிழ்களை மனக்குறிப்பினுலே தெளியப்படுத்தின சிறியசெட்டிப்பிள்ளை மிகத்தெளிந்த நக்கீரர்தமிழையும் கபிலர்தமிழையும் பரணர்தமிழையும் அப்படியே கேட்கும்போதெல்லாம் கொண்டாடி அந்தமூவர்தமிழிலு நுழைந்து சொற்சுவையும் பொருட்சுவையு மிகச்சிறந்திருக்க அனுபவித்து உடல்பூரித்து மனமொருமித்துத் தலையையசைத்து மகிழ்ந்துருகி ஆனந்தக்கண்ணீர்விட்டு நவரத்தினங்களையும் தனித்தனியே விலைமதித்துச் சொல்லுந் தங்கள் குலச்செட்டிகள்போல புலவர்கள்பாடின தமிழ்ப்பாடல்களை தராசுமுனைபோலநிறுத்துப்பார்த்து இன்னதிப்படி இன்னதிப்படியென்று குறித்துக்காட்ட நல்வழிதெரிந்த புலவர்கள் ஒருவருக்கொருவருண்டான பகைதீர்ந்து உறவானுர்கள் பின்பு அப்புலவர்கள்பாடின பாடல்கள் உலகமெல்லாம் பரவிச்சிறந்து விளங்கின அந்தத்தெய்வப்புலவர்களும் தங்கள்கலகந்தீர்ந்து நூலாராய்ச்சிசெய்து பழையபடிசங்கங்கூடிப் பொலிந்து வாழ்ந்திருந்தார்கள்.

சங்கத்தார்கலகந்தீர்த்தபடலம் - முற்றியது.

ஐம்பத்தாருவது

## இடைக்காடன்பிணக்குத்தீர்த்தபடலம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

குடைக்காடன்பசிக்கன்னக்குழியருத்திவேட்கையறக்கொடுத்தகங்கைச்
சடைக்காடன்புலவரிகறணிவித்தமுறையிதுமேற்றன்னைப்பாடுந்
தொடைக்காடன்பகன்றிகழ்ந்ததென்னவனேமுனிந்துதன்னைத்தொழுதுபோன
விடைக்காடனுடன்போய்ப்பின்பெழுந்தருளிப்பிணக்கறுத்தவியல்புசொல்வாம்.

கலிநிலைத்துறை.

பரிசிலைப்புலவருக்கருள்குலேசன்பல்பகல்கழிஇத், திரிமருப்பிரலைவெம்மழுவெடுத்தவன்மதிச்சென்னிமேல்
வரிசிலைப்படைபொறித்தவனெனப்பெறுவரமைந்தனு, மரிமருத்தனனிடத்தவனிவைத்தரனடியெய்தினன்.

பின்பு சண்பகபாண்டியன் சண்பக சுந்தரர் பொன்னடிக்கு மிகுந்த அன்புகொண்டு சண்பகப்பூ மாலைகட்டிச்சாத்தி வணங்குகின்ற திருத்தொண்டுக்குத்தகுந்த அந்தரசூடாமணியாய் விளங்குகின்றசிவலோகத்தையடைந்தான் அவனுக்குப்பின்பு பிரதாபசூரியன் வங்கிசத்துவசன் இரிபுமருத்தனன் சோழவங்கிசாந்தகன் சேரவங்கிசாந்தகன் பாண்டிவங்கிசேகரன் வங்கிசேசசிரோமணி பாண்டீச்சுரன் குலத்துவசன் வங்கிசவிபூடணன் சோமசூடாமணி குலசூடாமணி இராசசூடாமணி பூபசூடாமணி குலேசபாண்டியன் என்றிப்படிப் பதினைந்து பாண்டியர்கள் மதுரையை யாண்டார்கள் அவர்களில் குலேசபாண்டியன் இலக்கண இலக்கியமுதலிய எப்படிப்பட்ட நூல்களின் முடிவுங்கண்டு தெளிந்தவனுதலினுலே முத்தமிழ்ச்சங்கம் அவனுக் கிடங்கொடுத்துக் கூடவிருந்தான் அப்படிக்கல்விகேள்விகளினுலே சிறந்தவனென்றுகேட்டு இடைக்காட்டுச் சித்தர் முழுதுந்தெரிந்தகபிலரை உறவுகொண்டு அவராலே அந்தப்பாண்டியனைக்கண்டு தமிழ்ச்சொல்லவேணுமென்று நினைத்து தாம்பாடின பாடல்களைப்பாண்டியன்முன்னே வந்து சொல்ல பாண்டியன் அப்பாடல்களின்சொற்சுவை பொருட்சுவைகளெல்லாந்தெரிந்தும் தன்மனத்திற்பொருமையாலே தலையசைத்தல் மனமகிழ்தல் முகமலர்தல்களி லொன்றுஞ்செய்யாமல் பேசாதிருந்தான் அப்போது சங்கத்தாரைவேண்டிவந்த இடைக்காட்டுச் சித்தர் மிகவு நாணி அங்கு நின்றும் கடவுள் கோயிலுக்குப்போய் சன்னிதியிலேவிழுந்து கும்பிட்டு தமிழறியும்பெருமானே தன்னைச் சேர்ந்தார் நன்னிதியே திருவாலவாயுடைய நாயகனே இந்தப்பாண்டியன் கல்வியிற்சிறந்தவனென்று சொல்லக்கேட்டு வந்து பாடல்கள் பாடினேன் அதற்கு அவன் எவ்வளவுந் தலையசையாமல் அவமதித்து அன்புகொண்டு புகழ்ந்தவர்களுக்கு ஒருபயனுமுதவாத உவர்க்கடல் உப்பங்கழி காட்டுமிருகம் பட்சி முள்ளுமரம் வெறுங்கல்லாணமலை வேம்பு பாலைநிலம் இவைகளிலொன்றுனஅசேதனம்போலிருந்தான் சுவாமி இப்படி அவன்என்னையோ அவமதித்தான் அன்று சொல்வடிவான இந்த அங்கயற்கண் ணம்மையையும் பொருள் வடிவான உம்மையுமே அவமதிப்புச்செய்தான் ஆகையாலே எனக்கொன்று மில்லையென்று சன்னிதிமுன்னே நின்றிப்படிச் சொல்லிப்போட்டு இடைக்காட்டுச்சித்தர் ஆருத கோபத்துடனே அங்குநின்றும் விரைந்துபோயினர் பின்பு அவர்சொன்னசொற்கள் கடவுள் திருச்செவிகளிலே மிகவுமுறைத்து விரைந்துசென்ற இடைக்காட்டுப்புலவருக்கும் அவரைத் தொடர்ந்துசென்ற கபிலருக்கும் மனமகிழ்வாக தாமும் ஞானமயமான தம்முடைய இலிங்கவடிவைத் தெரியாமல் மறைத்துவிட்டு தேவியுடனேசென்று வெளியேபோய்த் தமது கோயிலுக்கு வடபுறத்திலேவருகிற வையையாற்றுக்குத் தென்புறத்திலே ஓராலயந்தோற்றி அதிலே அமர்ந்திருந்தனர் பின்பு சங்கப்புலவர்களும் கடவுள்போன வழியேபோய் அங்குத்தோற்றின ஆலயத்தி னிடத்திலேதானேவாசஞ்செய்திருந்தார்கள் அன்றிராத்திரி விடிந்து விடியற்காலம் பள்ளி யெழுந்தபின்பு சேவிக்கவந்த அடியார்கள் ஞானமயமான இலிங்கத்தை அங்கேகாணுமல் இதென்ன மாயமென்று அதிசயித்து மனங்கள் கலங்கி இந்தச்செய்தியைப் பாண்டியராஜனுக்கோடிப் போய்த் தெரிவிப் போமென்று போகும் போது மதுராபுரி பிராணநாயகனைப்பிரிந்த பெண்கள்போலவும் லட்சுமி நீங்கியதாமரைமலர்போலவும் அழகுகுலைந்து களையில்லா திருப்பதைக் கண்டுகொண்டுபோய்ப் பாண்டியனைக்கண்டு நடுநடுங்கி நாக்குக்காய்ந்து ஐயா பாண்டியமகாராஜனே நாங்கள் சொல்லப்பயப்படுகிறோம் ஆனாலும் உங்கள்குலதெய்வத்தைத் திருப்பள்ளியெழுச்சிகண்டு இன்றுசேவிக்கப்போனோம் அங்கேகடவுள் வடிவான இலிங்கத்தைக்காணேம் வெளியே பட்டணங்களெல்லாம் அழகு குலைந்திருக்கின்றதென்று காய்ச்சினவேலை காதிலேசொருகினாற்போலச் சொன்னவுடனே பாண்டியன் சிங்காசனத்திலிருந்து அடியற்ற மரம்போல மண்மேல்விழுந்து உயிரும் அறிவும் ஒடுங்கி பண்பொம்மை கிடந்தாற்போலச் சிறிதுநேரங் கிடந்து கொஞ்சம் ஞாபகமுண்டாகி யெழுந்து இரண்டுகைகளையுங்குவித்து அழுதுகண்ணீர்வெள்ளத்திலே முழுகி தெய்வமே ஓஓ தெய்வமே அடியேன் என்னகுற்றஞ்செய்தேன் சுவாமி திரிபுரத்தையெரிக்க வில்லாகவளைத்த மேருமலைக்குப் போனீரோ அல்லது பழைய சிவபுரத்துக்குப்போனீரோ கயிலைமலைக்குப்போனீரோ தம்மைமறந்து உம்மையேதியானிக்கின்ற அடியாருள்ளத்துக் கெழுந்தருளினீரோ அல்லது எப்போதுந் துதித்துக்கொண்டேயிருக்கிற வேதமுடிக்கெழுந்தருளினீரோஇப்போதெங்கேபோயி

னீர் சுவாமி எங்கேபோனீர் என்று துன்பப்படும்போது சிலர் ஓடிவந்து ஓ ஐயா பாண்டியமகாராஜனே நாங்களொரு அதிசயங்கண்டோம் அதாவது வையையாற்றுக்குத் தென்புறத்திலே பிரமசிருஷ்டி உண்டான நாள் முதல் ஒருநாளுங் கண்டதில்லை இந்தத் திருவாலவாய்க்கடவுள் இங்கிருந்த சங்கப்புலவர்கள்கூட பார்வதிதேவியுடனே வந்து வாசஞ்செய்கிறு ரென்றுர்கள் அந்தவார்த்தை காதிலே புகுந்திமுக்க வெழுந்து பாண்டியன் பயத்திலே முழுகிக்காலாலேநடந்துபோய் வையையாறு தன்னுடைய அலையாகிய கையினலே புட்பங்களைக்கொண்டருச்சனைசெய்து வணங்க தென்கரையிலே பார்வதிதேவியுடனே வாசஞ்செய்கின்ற தங்கள்குலரத்தினமான கடவுளைக்கண்டு ஓடிவந்துவணங்கி அன்பினுலே உருகுகின்ற கண்ணீர்பெருகி ஆனந்தக்கடலிலே முழுகிக்கிடந்து பின்னுமெழுந்து நாக்குக்குழறித் தடுமாறிநின்று ஐயா சுவாமி வேதங்களுந் தேடிக்காணப்படாத திருவடிகள் செவக்கவும் பட்டணமெல்லாம் துன்பப்படவும் செகதீஸ்வரியான மாதாவுடனே இங்கேவருவதற்குக் காரணமென்ன அடியேனுலாகிய குற்றமுண்டோ அல்லது என்னைச் சேர்ந்தவர்களாற் குற்றமுண்டோ? அல்லது என்பகைவர் திருடர் காட்டுமிருகங்களாலே இடையூ றுண்டாயினவோ அல்லது வேதப்பிராமணர்கள் ஆசாரந்தப்பி நடந்தார்களோ அல்லது தருமங் குறைந்ததோ தவங்குறைந்ததோ இல்லறந் துறவறந் தவறினவோ எங்கள் குலதெய்வமே தெய்வமே எனக்கொன்றுந் தெரியவில்லை.

கள்ளேறுகடுக்கைநறுஞ்சடையானேபோற்றிபெருங்கருணைபோற்றி
வெள்ளேறுகொடியுயர்த்தவிடையானேபோற்றியருள்விகிர்தாபோற்றி
புள்ளேறுகொடியுயர்த்தபுனிதனயன்றேருதபுனிதாபோற்றி
வள்ளேறுசிறுகுழவிமதிநுதலங்கயற்கண்ணிமணுளபோற்றி.

பாதமலரிணைபோற்றிபன்னிரண்டுகையானைப்பயந்தாய்போற்றி
வேதமுடிகடந்தபரஞானத்திலானந்தவிளைவேபோற்றி
போதவடிவாய்நால்வர்க்கசைவிறந்துநிறைந்தபரம்பொருளேபோற்றி
மாதவளநீறணிந்தமன்னவங்கயற்கண்ணிமணுளபோற்றி.

பொக்கமுடையார்செய்யும்பூசைதவங்கண்டுநகும்புராணபோற்றி
தக்கன்மகம்பொடியாகத்திருப்புருவநெரித்தகொடுந்தழலேபோற்றி
செக்கமலக்கண்ணிடந்தகண்ணனுக்குத்திகிரியருள்செல்வாபோற்றி
மைக்குவளையனையமணிகண்டாவங்கயற்கண்ணிமணுளபோற்றி.

என்று பாண்டியன் இப்படித் தோத்திரங்கள் பண்ணக்கேட்டு மதுரேசர் ஆகாயவாக்காக பாண்டியா இப்போதுன்னுடைய தோத்திரத்தைக் கேட்டு நாம்மிகவுஞ்சந்தோஷித்தோம் மெத்தவு நன்றுயிருக்கின்றது ஆனுலும் இன்னமு மொன்றுண்டு அதேதென்றுல் உலகத்திலே உள்ள சிவஸ்தலங்களிலேதிருவாலவாய் மிகவு மதிகம் இங்கே சயம்புலிங்கங்கள் அநேகம் அல்லாமலும் அசுரர்இயக்கர்சித்தர் அரக்கர் தேவர் முனிவர் மனிதர் ஆகிய இவர்கள் தங்கள் பெயர்கள் விளங்கிப் பிரதிஷ்டையாகச் செய்த லிங்கங்கள் அநேகம் இந்தலிங்கங்களில் மேம்பாடுள்ளவைகள் அறுபத்துநான்கு இந்த அறுபத்துநான்கிலு மேம்பாடுள்ளவைகள் எட்டு இந்த எட்டும் திக்குப்பாலகர்களாலே பூசிக்கப்பட்டன இப்போது நாம்புகுந்திருக்கிற லிங்கம் நமது தோழனை குபேரனலே பூசிக்கப்பட்டது இந்த லிங்கங்களெல்லாம் ஒருழிக்காலத்திலே மறைந்துபோயினவானுலு மிங்கே இந்தலிங்கம் நமது தோழன் பூசைசெய்ததானதினலே இதிலே நாம் வாசஞ்செய்கிறேம் இனி இது வடமதுரை யென்று பெயராகக்கடவது ஆனுலும் நாம் கடம்பவனம் மதுரை நான்மாடக்கூடல் திருவாலவாயென்கிற அவ்விடத்தைவிட்டு ஒருநாளு நீங்கமாட்டோமென்ப துனக்கே தெரியும் நீயோ எனக்கபராதியானவனன்று இடைக்காட்டுப் புலவன் செய்த செய்யுளை நீ அலட்சியஞ்செய்தா யாகையாலே நாம் அந்தப்புலவனிடத்திலே கொண்டிருக்கிற தயவினலே அங்கேமறைந்து இங்கே வந்தோமென்று சொல்லக்கேட்டபாண்டியன் அப்படியோவென்று சுவாமி சிறியோர்செய்தகுற்றம்பொறுப்பது பெரியோர்களுக் கழகுதானே ஆகையாலே பொறுத்து ரக்ஷிக்கவேணுமென்று பின்னுந்துதித்துவணங்கின் அப்படிவணங்கின பாண்டியனுக்கு இரங்கி யருள்செய்து வடமதுரைக்கடவுள் அவனை அவன்கோயிலுக்குப்போகச்சொல்லித் தாமும் சங்கப்புலவர்களும் மதுரைவந்துசேர்ந்தார் பின்பு பாண்டியன் விதிப்படி வாழை கமுகு சாமரம் மேற்கட்டி விளக்கு

பூமாலை நிறைகுடம் துகிற்கொடி இவைகளாலே அலங்காரமாக ரத்தினகஜிதமான சங்கமண்டபத்திலே செம்பொன்னாசனத்தின்மேலே மாப்பிள்ளைக்கோலமாக இடைக்காட்டுச்சித்தனை அலங்கரித்துப் புலவர்கள்சூழ இருக்கச்செய்து தானும் சிங்காசனத்தின் மேலிருந்து மல்லிகைமுல்லைமுதலிய வெள்ளைமலர்களால்செய்த மாலையும் வெள்ளைவஸ்திரமும்வெண்முத்து மாலையும் அணிந்துகொண்டு மங்களவாத்தியங்கள் முழங்கவும் வேதப்பிராமணர்கள் ஆசீர்வதிக்கவும் மங்கிலியப் பெண்கள் பல்லாண்டுசொல்லவும் தமிழ்ப்பாடலைக்கேட்டு இடைக்காட்டுச்சித்தருக்கும் சங்கப்புலவர்களுக்கும் வரிசைப்படி வஸ்திரபூஷணுபரணங்கள் பணிப்பெண்கள் மிருந்ததிரவியங்கள் யானை குதிரை விளைநிலம் முதலானவைகள் நிரம்பக்கொடுத்து ஏழடிதூரம் பின்னே காலாலே நடந்து சென்று பரிசுத்தகவிகளான சங்கப்புலவர்களே நான்இப்போது இந்த இடைக்காட்டுச்சித்தருக்குச்செய்த குற்றமெல்லாம் பொறுத்துக்கொள்ள வேண்டுமென்று துதித்து வணங்கினன் அப்போது சங்கப்புலவர்கள் ஐயா பாண்டியமகாராஜனே உம்முடைய குளிர்ந்தசொல்லாகிய மழையினலே எங்கள்கோபாக்கினி அவிந்தது இன்னமும் இந்தத்திருவாலவாயிலில் விளங்குகிற எங்கள் கடவுள்கிருபாநோக்கத்தினலே உமக்கு மிருந்தபுகழும் குறையாத செல்வமும் உண்டாகக்கடவதென்று வாழ்த்தினர்கள் பின்பு பாண்டியன் செய்ததவமே ஒருவடிவுகொண்டாற்போல சோமசுந்தரக்கடவுள் அருளாலே அரிமருத்தன பாண்டியனென்கிற புத்திரனைப்பெற்று பலகாலஞ்சென்றபின்பு அந்தப் புத்திரனுக்குத் தன்னரசாக்ஷியைக்கொடுத்துக் கடவுள் திருவடியைச் சேர்ந்தான்.

இடைக்காடன்பிணக்குத்தீர்த்தபடலம் - முற்றியது.



ஐம்பத்தேழாவது

## வலைவீசினபடலம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

மின்பிரித்தன்னவேணிவேதியனிடைக்காடன்பின், சென்றுமீண்டனையான்கொண்டபிணக்கினைத்தீர்த்தவண்ணம்
இன்றுணாசெய்துமுந்நீரொறிவலைவீசினூழன், மன்றலங்குழலினளைமணந்துமீள்வண்ணஞ்சொல்வாம்.

அவ்வேலையன்புடையாரறுபதினுயிரவர்க்குமளித்துப்பாச
வெவ்வேலைகடப்பித்துவீடாதபரானந்தவீடுநல்கி
மைவ்வேலையனையவிழியங்கயற்கணங்கையொடுமதுரைசார்ந்தா
னிவ்வேலைநிலம்புரக்கமுடிகவித்துப்பாண்டியனென்றிருந்தமூர்த்தி.

பின்பு வில்விசயனுக்கொப்பான அரிமருத்தனபாண்டியன் அரசாளுங்காலத்தில் சோமசுந்தரக்கடவுள் வேறே தனியிடத்திலிருந்து அங்கயற்கண்ணம்மைக்கு ரகசியமான வேதார்த்தங்களைச்சொல்ல என்னகாரணத்தினலோதெரியாது கடவுள்சொல்லுகின்ற நான்குவேதப்பொருள்களையெல்லாம் அம்மை தீவினைசெய்தவள்போலக் கொஞ்சங்கவலையுண்டானவளாய் அன்பில்லாமற்கேட்க அதுதெரிந்து கடவுள் தேவியைப்பார்த்து அஞ்ஞானத்தையுடைய பெண்கள்போல நாம்சொல்லுகின்றவேதப்பயனை அசட்டையாய் மனவொருமையில்லாமற் கேட்டாய் ஆதலாலே இந்தக்குற்றம்போக தருமவிரதங்களில்லாமல் மீன்பிடித்து இழிதொழில் செய்கின்ற வலையர்மகளாகக் கடவை யென்று சாபங்கொடுத்தார் அப்போது தேவிபயந்து சுவாமி உம்மைப்பிரிந்திருக்க என்னலாகுமோ சொல்லுமென்றுவணங்கிக்கேட்க அதற்கு கடவுள் தம்மைப் பிரிந்துபோகப்போகிற தேவிதுன்பத்தைப்பார்த்து நீ கடற்கரையில் வாழ்கிற வலையர்களுக் கரசன்மகளாகி அங்கே வளருங்காலத்தில் நாம்வந்து உன்னைக் கலியாணஞ்செய்துகொள்ளுவோம் நீவருந்தவேண்டாவென்று சொல்லித் தேவியை விடைகொடுத்தனுப்பிவிட்டுத் தாம்தனியேயிருக்க அப்போது அந்தச்செய்திதெரிந்து விநாயகக்கடவுள் தந்தைமுன்னேவந்துஇந்தப் புத்தகங்களாலே யல்லவோ இப்படி நடக்கலாயிற்றென்று அங்கேயிருந்த புத்தகங்களை யெல்லாம் தம்முடைய ஐந்துகைகளாலும் வாரிச் சமுத்திரத்திலேபோய்விழவெறிந்தார் உடனே முருகக்கடவுளு

ம் அங்கேவந்து தந்தைகையிலிருந்த சிவஞானபோ
தநூலைப்பறித்து விரைவிலே அதுவும் கடலிலே
போய்விழ வெறிந்தார் அப்போது கடவுள் வாயில்
முன்னேகாத்திருக்கின்ற நந்தியை வெகுண்டுபார்த்
து நாம் தனியே தேவியோடு வார்த்தைசொல்லிக்
கொண்டிருக்கிற சமையமிதுவென்று நீயெண்ணம
ல் இந்தமிடுக்கரிருவரையும் ஏன் உள்ளேவரவிடுத்
திருந்தாய் இந்தக் குற்றம்போக நீயும் இப்போதே
போய் ஒருசுறுமீனாகிக் கடலிலே கிடந் தலையக்கட
வையென்று சாபங்கொடுத்துப் பின்பு யானைமுகவி
நாயகக்கடவுளுக்குச் சாபங்கொடுத்தால் அந்தச்சா
பம் தம்மையே தொடருமென்று சாபமிடாமல் மு
ருகக்கடவுளைமாத்திரம் மதுரையில் செட்டிகள்குல
த்தில் ஊமைப்பிள்ளையாய்ப்பிரக்கச் சாபமிட்டருளி
னார் இப்பால் கடவுள்ஏவலாலே தேவியானவள் வ
லைப்பெண்ணாகவும் நந்திதேவர் சுறுமீனாகவும் பிறந்
ததெங்கேயென்றால் வையையாறு சூழ்ந்த நாட்டி
லே உவர்க்கேணிகளும் உப்பங்கழிகளும் அகழாக
வளைந்து தாழைகளிருண்டு மதிலாகச்சூழ்ந்திருப்ப
து அதுவோதண்டுறைப்பாக்கமென்று சொல்லப்ப
டுவது அங்கே எவ்விடங்களிலும் கேடகத்துள்ளே
யடங்கி வாளாயுதத்தைக் கையிலேகொண்டு ஒருவ
ருக்கொருவர் சண்டைபண்ணுகிறதுபோல முள்ளு
களையுடைய மடல்களிலேமறைந்து பூக்கள் காற்று
லசைய தாழைகள்நெருங்கி நிற்கின்ற அவ்விடங்க
ளிலே புலவுமீன்களை உலரப்போட்டு அவைகளைப்
பலபட்சிகளும்வந்து தின்னமல் அதட்டியோட்டுகி
றவோசையும் அவைகளை விலைக்குவிற்கிறசத்தமும்
வாங்குகிறவர்கள் சத்தமும் மீன்பிடிக்க வலைவீசுகி
றசத்தமும் அந்தவலைகளையிழுக்கிறசத்தமும் கடலி
ன் அலையோசையையடக்க அங்கே நுளையருடைய
சிறுபெண்கள் களிமண்ணாலேசெய்த பொம்மைக்கு
தாழை தனதுபூவிலுள்ளசோறூட்ட கடல் முத்து
மாலைசூட்ட குங்குமமரங்கள் பூமாலைசூட்டுகின்றன
பின்னும் அங்கேவந்து சமுத்திரத்தில் ஸ்நானஞ்செ
ய்து போகிறவர்களுக்கு உபசாரஞ்செய்கிற தருமப்
பிரபுக்கள்போல தாழைகட்டுச்சோறாக பூமலர்ந்து
கொடுக்க முத்துமாலை பொன்மாலை பவளமாலைகளை
புன்னைமரங்கள் மலர்ந்துகொடுக்கின்றன காய்ந்தமீ
ன்விற்கிற வலையர்கள் குடிசைகள்மேலே கடலிலிரு
ந்துதாவிப் பவளக்கொடிகள்படர நுளைச்சிகள் அடி
க்கடி குப்பைகுப்பல்களாகக்கூட்டி யொதுக்கும்படி
வாசல்களெல்லாம் கடல்முத்துகளை அலைகளாலே
ஒதுக்கிக்கொண்டே யிருக்கின்றன பின்னும் அந்த
நுளைப்பெண்கள் விலைகூறிவிற்கிற கெண்டைமீனுக்
குநேராக அவர்கள்கண்களே பிறழ்ந்து விலையுயர்த்

தவும் பேசுகிறவாய்வாசமும் கூந்தலில் முடித்திருக்
கிற தாழம்பூவாசமு மீனினாற்றத்தைப்போக்கி நல்
லவாசம்வீசவும் உப்பங்கழியிலேமலர்ந்த குமுதப்பூ
விலே மொய்க்கிற வண்டுகள் பனங்கள்ளுக்குடித்த
வாயிலு மொய்க்கின்றனவாகிய பட்டினத்திலே ஒ
ருவன் முன்செய்த தவத்தினாலே தேவர்களிலும் ப
ரிசுத்தனாய் கொஞ்சம் பாபசம்பந்தத்தாலே மீன்வி
ற்றுப்பிழைக்கிற சாதியிற்பிறந்து மேம்பட்டுநுளைய
ர்கள் கடலிலேபிடிக்கிற மீன்களெல்லாங் கொண்டு
வந்து குவிக்கின்ற பெரியவாசலுடையவனாய் அவர்
களுக்கு ஆறிலொருபங்கு கொடுக்குங் காவலனாய்
விடைக்கொடிக் கடவுளுக்கு மெய்யன்பனாகிய நற்
குணனாய் வருங்காலத்தில் அவனுக்குப் பிள்ளையில்
லாமல் வெகுநாள் இம்மைமறுமைப்பயன் பெறாத
வன்போல வருந்தி ஒருநாள் கடல்பார்க்கப்போகும்
போது கரையோரத்திலே ஒருபுறத்திலே பருவதரா
ஜன்தவத்தினாலே ஓடையிலும் பாண்டியன்செய்தத
வத்தினாலே வேள்வியிலும் பிள்ளையாய்ப் பிறந்த
லோகமாதாவானவள் தனது நாயகனேவலாலே மீ
ன்விற்கிறவலையன்செய்த பூர்வ புண்ணியபலன் சித்
தியாகத் தன்னிச்சைப்படி அவன் அன்புக்கிரங்கின
வள்போலத் தனது செவ்வாய்மலரைத்திறந் தழுது
கொண்டு ஒருகுழந்தைவடிவாய் ஒருபுன்னைமரத்து
நிழலிலே கிடந்தாள் அப்படிக் கிடக்கின்றதை அந்
த வலையர்க்கரசன் கண்டு ஓ! ஓ! இந்தப்பிள்ளை ஜலக
ன்னியோ அல்லது கங்காதேவியோ அல்லது வன
கன்னியோ அன்று கண்களிமைக்கிறதினாலே இந்த
வுலகத்தில் யார்பெற்ற பெண்ணோ தெரியவில்லை ஆ
னாலும் பிள்ளையில்லாதவெனக்கிரங்கி மதுரேசர் அ
ருள்செய்தபிள்ளையே யிதுவென்று நினைத்து வலத்
தோள் துடிக்க அன்புமிகுந்து இரண்டுகைகளாலு
மெடுத்து மார்போடணைத்துக் கொண்டுவந்து தன
து கற்புடைமனைவி கையிலே கொடுத்தான் அவன்
கொடுத்தபோது பிறவிக்குருடனுக்குக் கண்கிடை
த்தாற்போலவும் நித்தியதரித்திரனுக்கு நிதிகிடைத்
தாற்போலவும் அவன்மனைவி மகிழ்ந்துவாங்கினாள்
அவள்வாங்கும்போது வலையர்களெல்லாம் கடல்
போல் முழங்க வலைச்சிகளெல்லாருங் கைகள்கொ
ட்டிக் கொம்மியடித்துக் குரவையாட மிகவுமகிழ்ந்
து பிள்ளைத்திருநாள்கொண்டாடி அந்தவலையர்க்கர
சன்மனைவியானவள் தான்பெறாமற் பெற்றெடுத்த
பிள்ளையைத் தன்கொங்கைகளுங் கண்களுங்குளிரத்
தழுவிமுத்தமிட்டு உச்சிமோந்து மனத்திலன்புபெ
ருக அழகிதாய் ரத்தினவிளக்குப்போல் வளர்த்து
வருகிறநாளிலே மீன்விற்றுத்தேடின பொருள்களா
லே பலவகையான பிள்ளைப்பணிகளும் முத்தும் பா

சிமணியும் ரத்தினங்களுங்கலந்துகோத்த கழுத்து மாலையும் கைகளுக்கு வளையல்களும் தங்கள் குலத்துக்கேற்க அழகுவடிவான பிள்ளைக்குப் பின்னும் அழகுபெற அலங்கரித்துப் பாராட்டவளர்ந்து உயிர்களையெல்லாம் தாய்போல்வளர்க்கு மீனாட்சியம்மை தானொரு வலைப்பெண்ணாகி அங்குள்ள வலைச்சிறுபெண்களோடுகூடிக் கடற்றுறைக்குப்போய் சேற்றாலே பொம்மைபண்ணி விளையாடியும் சிறுசுளகிலே முத்துகளைமுகந்து கொழித்தும் தாழம்பூ குங்குமப்பூப்பறித்தும் கூந்தல்பின்னே அவிழ்ந்துதொங்கக் கடனீராடியும் தன்னாயகன் தனக்குநியமித்த நாளும் தனது கொடிபோன்ற இடையுங் குறைவாக தன்னாயகன்மேல்வைத்த அன்பும் ஆசையுங்கொங்கைகளும் வளரச் சிலகாலத்திலே மிகவும் வளர்ந்து அந்தத்தண்டுறைப்பாக்கத்தில் வாசஞ்செய்திருந்தனள் அக்காலத்திலே திருவாலவாய்க்கடவுள் ஏவியபடியே கொன்றைமாலையும் இளம்பிறைச்சந்திரனும் விளங்குகின்ற சடாமகுடமும் நான்குகைகளுங்கொண்ட நந்திதேவர் தாமுமொரு சுறுமீனாகி முருகக்கடவுளும் யானைமுகக்கடவுளும் அக்காலத்தே யெறிந்துவிட்ட புத்தகங்களையெல்லாம் தமது தலைமேற்கொண்டு கடலிலேமுழுகி விளங்கனிக்குக் கன்றெறிந்த கண்ணனுங்காணப்படாத கடவுள்திருவடிகளை மனதிற்கொண்டு அக்கடலிலே முன்னேகலக்கின மந்தரமலைபோற்கிடந்து கலக்கி அங்குவருகிற தோணிபடவுகளை வேகங்கொண்டுமோதிஉடைத்து கப்பல்களைச் சரக்குடனே கவிழமுட்டிச்சீறி அங்குச்சஞ்சரிக்கின்ற பல சுறுமீன்களையுமுடுகத்துரத்தி மற்றமீன்களையெல்லாம் தன்கொம்பிலேகோத்துவீசி தரங்கவாரிநீரைக்கலக்கித் தந்திரங்கொண்டு புலவர்க்கமுதுதந்து மந்தரகிரியேயிகராய் அலையோடுகூடிச்சென்று வலைச்சேரிகளையழித்து மேலே துள்ளியெழுந்து மேகங்களைக்கிழித்து அந்தக்கடல் வழியே கப்பல்கள் செல்லவொட்டாமல் இப்படித் திரியும்போது அந்தக்கடற்றுறைச்செல்வனான வலையர்க்கரசன் சஞ்சலித்து இந்தச்சுறுமீனை எப்படி நாம் பிடிப்பதென்று தன்கிளையோடுகூடி ஆலோசித்துப் பெரியகயிற்றுவலையைக்கொண்டு அங்குள்ள கடலெல்லாம் பரவப் படவின்மேலிருந்து வீசினான் அப்படி வீசியெறியவே சுறுமீன் அவனேறிநின்றுவீசின படவைத் தன்கொம்பாலேகுத்தி உடைத்துவிட்டது அவனேறிவந்த படவுடையவே வேறேயொரு தோணிமேற்பாய்ந்தான் அந்தத்தோணிமேலும் பாய்ந்துடைக்க அதைவிட்டு வேறொரு சோங்கின்மேலேயேறிப் பின்னுமொரு பெரியவலையைவீசி இப்படி ஒருயிரே பலவுடல்களிலும் புகுதுமாப்போலே அந்த வலையர்க்கரசன் படவுதோணி சோங்குகளி லேறியேறி வலைவீசினாலும் அகப்படாமல் முன்னேவீசினால் பின்னேகிளம்பியும் பின்னேவீசினால் முன்னேயெழுந்தும் வலப்புறஞ்சென்றால் இடப்புறங்கிளம்பியும் இடப்புறஞ்சென்றால் வலப்புறமெழுந்தும் ஒருகால்வீசினபோதகப்பட்டு அவன் சந்தோஷித்திழுக்கும்போது அந்தவலையினின்றும் வழுவிப் பொதுமகளிருள்ளம்போல மெய்க்காட்டிப் பின்பு உணர்ந்தார்க்குணர்வரிய பரம்பொருள்போற் காணாமற்போய்மறைய வலையர்க்கரசன் தன்னேவலாளருடனே இப்படிப்பலகாலும் அந்த மீனைப்பிடிக்கத்தக்க தந்திரங்களெல்லாஞ்செய்தும் அகப்படாமற்போக அவன் இனி யார்தான் இந்தமீனைப்பிடிக்க வல்லவரென்று அந்தக்கடற்கரையிலுள்ளவர்க ளெல்லாருடனுங்கூடி ஆலோசித்து முடியாமல் மிகவுங்கலங்கித் துன்புற்று அந்தத் தண்டுறைப்பாக்கத்தான் இந்தக்கடலிலே மந்தரமலைபோலே கிடந்தலைகிற சுறுமீனைப் பிடிப்பவன்யாரோ அவனே என்மகளுக்கு மாப்பிள்ளையென்று மனத்திலே நிச்சயித்துக்கொண்டிருந்தான் அப்படி நந்திதேவரும் மீனாக்ஷியம்மையும் அவ்விடத்திருக்குநாளில் அஷ்டகெஜங்களுந் தாங்குகின்ற இந்திரவிமானத்துக்கடவுள் நினைந்து உயர்ந்தசாதிகளையும் தங்களிலும் இழிவான ஜாதிகளென்று கசந்திருக்கிற வலையர்குலப்பெண்ணை விவாகஞ்செய்யவேண்டிநாம்போய்ப் பெண்கேட்டால் அவன்வெறுத் திகழாதபடியான மீன்பிடிக்கும் வலையனாகிப்போவோமென்று திருவுள்ளங்கொண்டு இருண்ட கறுப்புக்கச்சையும் அதிலேசெருகின சிற்றரிவாளும் தோள்மேலணிந்த உடைவஸ்திரமும் குடுமியிலே முடித்த நெய்தற்பூமாலையும் பெரியதேவரிருவரும் வேதங்களுந்தேடிக்காணாமலிளைக்க ஒருவலையன்வடிவாய் தன் கணாதிபர்கள் ஏன் நம்முடையகடவுள் மீனாட்சிதேவியை வலைச்சியாகச் சபித்துத் தாமும் ஒருவலையனானென் றதிசயிக்க வேடங்கொண்டு மீன்பிடிக்க வீசுகின்றவலையைத் தோள்மேற்போட்டுக்கொண்டு அது முதுகின்புறத்திலே கனங்கொண்டுதொங்க மற்றொருதோளிலே சுமையாக மீன்போடுகிற கூட்டைமாட்டி அது பின்புற மிழுத்துக்கொண்டு போக அந்தத் தண்டுறைப்பாக்கத்தைநோக்கி உப்பங்கழிக்கரைகளெல்லாம் முள்ளிச்செடிகளும் தாழஞ்செடிகளும் நெய்தற்பூக்கள் நீர்ச்சுழிகளிலேமுழுகிச் சுழல்கின்ற பள்ளங்களும் சுஃறென்று சத்திக்கின்ற மடல்களையுடைய பனைமரங்கள் நடக்கும் வழிகளிலே மாட்டின தோண்டி கலயங்கள் நிரம்பிக் கள்ளைவார்க்கவும் அந்தக்கள்ளை வாயைத்திறந்து

குடிப்பதுபோல செவ்வல்லிகள் மலர்ந்துநிற்பனவுமான கடற்கரைச்சோலைகள்சூழ்ந்த வலைச்சேரிக்கு வந்து சேரும்போது அமுதம்போன்ற தேவியைப் பெறாமற் பெற்றுவளர்க்கத் தவஞ்செய்த வலையர்க்கரசன் தன்மனத்திலே அதிசயித்து அங்கேவருகிற யௌவனபருவத்தையுடைய வலையனைக்கண்டு ஓய் நல்ல அழகியநம்பி நீயார் சொல்லென்றுகேட்டான் அதற்கு நான்குவேதங்களுந் தெளியக்கூடாத வடிவுகொண்டுவந்த மீன்வேட்டையாடி ஓய்அரசனே மதுரையிலுள்ள வலையர்களுக்கெல்லாம் தந்தைபோற்சிறந்துள்ள ஒருவலையனுடைய மகன் நான் ஆனாலும் படைத்துக்காத்துத்துடைக்கவும் வல்லேனாவேன் அல்லாமலும் இங்குள்ள மீன்களையல்லாமல் ஆகாயத்துள்ள மீன்களையும் வலைவீசிப் பிடிக்கமாட்டுவேனென்று சொல்ல அதுகேட்ட வலையர்க்கரசன் இவன் வலையனென்பதுமெய்யோ முன்னேசொன்னதொன்று இப்போது சொல்வதொன்றாயிருக்கின்றது ஆனாலுமிந்த இரண்டையும் பரிசோதித்தறிவோமென்று சிவனுக்கடிமைத்தொழிலை உட்கொண்டிருக்குமவனான வலையர்க்கரசன் அப்படியானால் இந்தத்துறையிலே ஒரு பெரியமீன் நெருப்பைப்போலே கொதிக்குஞ் சீற்றத்தைக்கொண்டு கிடக்கின்றது ஐயா அதை நீ கண்டுபிடிக்கமாட்டுவையேயானால் என்னுடையமகளை உனக்குக் கலியாணஞ்செய்து தருகிறேனென்றுசொன்னான் அதுகேட்டு ஆண்சிங்கம்போல்வந்த வலையன் உடனே வாயுவேகமாகவிரைந்து செல்லுகின்ற ஒருபடவின்மேலே பாய்ந்தேறி சங்குகளைவீசுகிற அலைகளைத்தடுத்து அந்தப் பெரியகடலைக்கிழித்துக்கொண்டுசென்று மீன்பிடிக்கும் வேலையாளான யௌவனகுமாரன் தனது மலைபோன்ற தோள்மேலே கனத்ததொங்கல்களுடனேகிடந்து தொங்குகின்றவலையையெடுத்து நன்றாய்ப்பார்த்து மார்புபுரளவீசினார் அப்படிவீசவே பக்கமெல்லாங்கொண்டமணிகள் பிரகாசமாகச் சுற்றிலும் வேகங்கொண்டு ஒலித்துப் படர்ந்து விழுந்து பரவ அதற்குள்ளே நாகமானது படத்தைவிரித்து வாயைத்திறந்துவிழுங்க அகப்பட்ட ஒருமீனைப்போல குரூரமான செய்கையுடனே உழலுகின்ற அந்தச்சுறுமீன் அகப்பட்டுக்கொண்டது அது அகப்பட்டவுடனே அடியார் அன்பின்வலைக்குள்ளாகும் வலையன் தான்விசிறியெறிந்த வலைக்குள்ளானமீனைச் சுருக்கியிழுத்துக் கடற்கரைமேலேபோட அப்படிப்போடும்போது தேனைக்கண்டு மொய்க்கும்வண்டுகள்போல வலையர்களெல்லாம்வந்து நெருங்கிக்கண்டீர்களே நாமும் நமதரசனும் நம்முடையசாமர்த்தியமுழுதுங்கொண்டு பலகாலுமுயன்றுவீசினவலையிலகப்படாத இந்தமீன் இந்த இளங்குமரன்ஒருகால் வீசினவலைக்கு ளகப்பட்டதல்லவோ ஆகையாலே இந்தப்பிள்ளையாண்டான் நமதுகுலத்துக்கொருதெய்வமாகக் கொள்ளப்படுமென்று கொண்டாடினார்கள் அப்போது அந்தக்கடற்கரைச்செல்வன் மிகவும் ஆனந்தித்துப் பம்பைமுழங்கக் கள்ளொழுகும் வாயையுடைய நுண்ணிடைவலைச்சிகள் குரவையாட படங்கொண்ட பாம்புக்கச்சைகட்டின வலையனுக்கு குங்குமப்பூமாலையுந் தகரஞாழலுமணிந்த கூந்தலையுடைய பெண்ணைத் திருக்கலியாணஞ்செய்துகொடுத்தான் அப்போது கலியாணக்கோலங்கொண்ட மருமகனும் வேல்போலுங்கண்களையுடைய மகளும் ஆகாசத்திலே விடைமேலேறித் தங்கள்சுபாவவடிவுகொண்டு விளங்க கரைமேற்கிடந்தமீனும் தன் வடிவுகொண்டு நந்தியாய் முன்னேதோன்ற விடைமேலழகராய்க் காக்ஷிகொடுத்து அவர்கிருபாநோக்கம்பெற்றதினாலே பூருவகருமத்தால்வந்த அந்தப் பிறவியிலுண்டான சிற்றறிவுநீங்கிக் கடற்கரைச்செல்வனுக்கு நல்லறிவுதோன்றி மாணிக்கவல்லியோடு கூடின ஆணிப்பொன்வில்லியான கடவுள் திருவடி நிழலின்கீழேவிழுந்து வணங்கி.

இரக்கமிலிழிந்தயாக்கையெடுத்துழலேழையேனைப், புரக்கவின்றென்போல்வந்தபுண்ணியவடிவம்போற்றி
அரக்கெறிபவளச்செவ்வாயணங்கினைமணந்தென்பாசங், கரக்கவெள்விடைமேனின்றகருணையேபோற்றியென்றான்.

என்றுதுதிக்கின்ற அன்பனை மலர்மிசையேகுவானான கடவுள் ஓய்கடற்கரைச்செல்வனே நீ பலகாலமாகப் பிள்ளையில்லாமல் வருந்துகின்றதைக் கண்டு நாம் பார்வதியை உனக்கு மகளாகக்கொடுத்து தருந்தபடியேநாமும்வந்து விவாகஞ்செய்துகொண்டோம் இனிமேல் நீ இன்னமும் இந்தவுலகத்திலே குபேரன்போலக் குறையாதசெல்வங்கொண்டு சுகபோகத்திலேமுழுகிவாழ்ந்து பின்பு நமதுலகத்தையடைவாயென்று பெண்ணைக்கொடுத்தமாமனாருக்கு நல்லருள்செய்து அந்தத் தருமசொரூபமான மால்விடைமேலேறினபடியே நந்திதேவரும் அடியார்களுஞ்சூழ ஆகாசமார்க்கமாக உத்தரகோசமங்கைக்குப்போய் அங்கேயிருந்து அநாதிமூர்த்தியான கடவுள் நான்குவேதங்களுந்துதிக்கும் பாதங்களைத் தேவிவணங்கிக்கேட்க அவளுக்கு வேதப்பொருள்களெல்லாந்திரட்டித் தெய்வாமிர்தம்போலத் தேவிகாதுகள் நிரம்பப் புகட்டியருளினார் அப்போது அங்கே அறுபதினாயிரம் அடியார்களுக்கும் கிருபைசெய்து

பாசக்கடலைக் கடக்கப்பண்ணி அழியாத பரானந்த வீட்டைக்கொடுத்துப் பின்பு அங்கயற்கண்ணம்மையுடனேகூடி சுந்தரபாண்டியனாக வுலகாண்ட கடவுள் மதுரைக்கெழுந்தருளினார்.

வலைவீசினபடலம் – முற்றியது.

ஐம்பத்தெட்டாவது

## வாதவூரடிகளுக்குபதேசித்தபடலம்.

கொச்சகக்கலிப்பா.

கலைவீசுமதிச்சடையோன்கடற்றுறைவன்றலைச்சென்று, வலைவீசியவன்பாசவலைவிசும்பரிசிதுமே
லலைவீசும்புனல்வாதவூரரைவந்தவிச்சைவலி, நிலைவிசிப்பணிகொண்டநெறியறிந்தபடிமொழிவாம்.

எழுசீரடியாசிரியவிருத்தம்.

இறக்கினுமின்றேயிறக்குகவென்றுமிருக்கினுமிருக்குகவேந்த
னுறுக்கினுமொறுக்கவுவகையுமுடனேயூட்டினுமூட்டுகவானிற்
சிறக்கினுஞ்சிறக்ககொடியதீநரகஞ்சேரினுஞ்சேருகசிவனை
மறக்கிலம்பண்டைப்பழவினைவிளைந்தான்மாற்றுவார்யாரெனமறுத்தார்.

உலகத்திலே நல்லோர்கள் தங்களுக்கு வரும் பொருளும் செலவும் தெரிந்து குடும்பத்தைப் பாதுகாத்துப் பொருள்வேண்டிக் கொடாத செல்வரிடத்திலே போகாதிருத்தல்போலப் பாண்டிநாட்டிலுள்ள வயல்கள் குளங்களெல்லாம் நிரம்பப்பாய்ந்து தருமம்வளரச்செய்து கடலுவர்ப்பென்று பாயாத வையையாற்றங்கரையிலே யிருக்கின்றது திருவாதவூர் அவ்வூரில் எப்போதும் திருவிழாக்களும் வீடுகளெல்லாம் விருந்தோடுண்டலும் பிள்ளைப்பேறுகளின் மகிழ்ச்சியும் வேதமோதுதலும் மத்தளமுழங்குகின்ற நாடகசாலைகளும் மேகங்கள் நீங்காது சஞ்சரிக்கின்ற சோலைகளும் முப்போகம் விளைதலினாலே எப்போது முழுதுகொண்டிருக்கிற வயல்களும் உயிர்நிரம்பியவுடல்போல விளங்குகின்றன அப்படிப்பட்டவூரிலே அமாத்தியப்பிராமணர்குலத்தில்வேதநெறியும் சைவாகமநெறியும் விளங்கவும் மகாவிஷ்ணுவஞ்சனையாலேசெய்த புத்தமதமாகிய இருள் தோற்றோடவும் கடவுளருளாலே ஞானதைய சூரியன்போலே ஒருவர்வந்து பிறந்தார் அப்படிப்பிறந்தவர் திருவாதவூரரென்னும் பெயர்கொண்டு தங்கள்குலத்துக்குத் தக்கபடியே சடங்குகளெல்லாம் செய்யப்பெற்று இளஞ்சந்திரன்போல்வளர்ந்துவேதமுதலான அறுபத்துநான்குகலைஞானங்களும் பதினாறுவயதுக்குள்ளே கற்றுணர்ந்திருக்க இவர்செய்தியைத் தெரிந்தவர்கள்போய்ச்சொல்ல அரிமருத்தனபாண்டியன்கேட்டு வரவழைத்துக் கண்டுமகிழ்ந்து தகுந்தசிறப்புச்செய்து தன் அரசாட்சிக்குத் தகுதியான மதிமந்திரித்தனங் கொடுத்து மேம்படுத்திக்கொள்ள இவர் தனுவேதமும் மனுசாஸ்திரமும் நன்றாகத்தெரிந்தவ ராகையாலே அந்தப்பாண்டியனுக்குக்கண்போன்று முழுதுந்தெரிந்த மந்திரிகளெல்லாருக்கு முதல்மந்திரியாய் பகைவர்வலிகளை யடக்கி இறைப்பொருள்வாங்கியும் செல்லக்கூடாத பலவகைத்தீவுகளிலும் செங்கோல்செலுத்தவல்லரான அரசர்களெல்லாம் தங்களிடத்துள்ள அரும்பொருள்களைவரவிடுத்து நல்லவர்களாயொப்புரவான நட்புக்கொள்ள நடந்து கண்ணுங்கவசமும்போல் ராஜகாரியஞ்செய்து தமதுதயவினாலே தமதுறவினர்போல எல்லாரு மகிழ்ச்சிகொள்ளச் சந்திரன்போலுங்குடைநிழல்செய்வித்து நீதிசெலுத்திவாழுங்காலத்திலே நித்தியாநித்திய வஸ்துவிவேகந் தோன்றி இகபரபோகவிராகராய் சமாதிசட்கசம்பத்திகொண்ட முமுக்ஷுவாகி புத்தர்முதலான புறச்சமையமார்க்கங்களும் வேதசாஸ்திரங்களைத் தழுவின உட்சமையங்களும் மனமாசறுத்துச்சிவனருளைத்தெளிவிக்கமாட்டா அதனாலேமும்மலங்களும்போகா அதனாலேவீடுங்கிட்டாது ஆகையாலேபத்திசெய்து சிவனருளைப்பெற்றபத்தர்களுக்கேயல்லாமல் யார்க்கும்வீடுசேரக்கூடாதென்று பொதுவான வேதஞ்சொல்லுதலினாலே அந்த மெய்ப்பொருளுணர்ந்தோர்கள் அந்தமெய்ப்பொருளின் நெறியெல்லாம் சத்திநிபாதர்க்கு விளங்கச்சொன்னதே ஆகமம் அந்தவேதாக

மங்களின் முடிவிலே விளங்கின்றபொருளின் பேதாபேதங்களான பிணக்குகளைப் போக்கி அஞ்ஞானக்கட்டை யவிழ்த்து நாதனுகிய தன்னையுமென்னையும் தெரிவிக்கின்ற போதனுகியகுருபரன் வருவதெக்காலம் இன்னும் மெய்யன்புக் கெளிதாகவிளங்குகின்ற அருட்குருவான ஞானசாரியனது நிறைந்தஅருளையல்லாமல் இந்தக்கொடிதான சிதாபாசத்தை நல்ல கேள்விகளாலே போக்கிக்கொள்வோமென்பது தெப்பத்தைக் கொண்டு நீந்தாமல் வெறுங்கையாலே கருங்கடலைநீந்த வெண்ணுவதுபோலல்லவோ வென்று வாதவூரடிகள் இன்பவீட்டைச்சேரவேண்டிய ஆசைக்குள்ளே கட்டுண்டு வேதாகமநூல்களையுணர்ந்த பெரியோர்கள் கோயிலுக்கு வரும்போதெல்லாம் போய்க்கண்டு கண்டபோ தெல்லாம் விசாரித்தறிந்தும் இப்படி அநேசம் பெரியோர்களைக் கண்டு கண்டு விசாரித்துணர்ந்த பொருள்களெல்லாம் தாகவிடாய் கொண்டவர்கள் உவர் நீருண்டாற்போல மனதுக்குப் பொருந்தாமல் அரசனுக்கு உயிரும் கண்ணுமாய் மந்திரித்தனத்தையும் விடாமல் கள்ளப்புருஷனிடத்தே அன்புகொண்டு நடக்கின்ற பெண்பிள்ளையைப்போலே தேவரைக்காக்க நஞ்சுண்ட கடவுளிடத்தே உள்ளன்புகொண்டு ராஜகாரியமுங் கைக்கொண்டு இப்படி நடக்கின்றவரொருநாள் அரிமருத்தனபாண்டியன் சபைக்குப்போய் அவனெதிரேநிற்கும்போது குதிரைபரிபாலகர்கள்வந்து அரசனைக்கண்டு வணங்கி ஒருபுறத்தே நின்று ஐயா பாண்டியமஹாராஜனே நம்முடைய குதிரைக்கூட்டங்களிலே இறந்த குதிரைகள்போக மிஞ்சின குதிரைகளெல்லாம் முழுது நோய்கொண்டவைகளும் அதிகவயது சென்று கிழங்களுமாயிருக்கின்றனவே யல்லாமல் நல்லகுதிரைகள் ஒன்றுவதுகிடையாதென்று சொன்னார்கள் அதுகேட்ட பாண்டியன் வாதவூரடிகளைப்பார்த்து இன்றைத்தினமே நீர்போய் நம்முடைய கஜானாவைத் திறந்து வேண்டிய திரவியங்களெடுத்துக்கொண்டுபோய்க் கடற்கரையிலே குதிரைகள்வந்திறங்குவன தெரிந்து நல்ல சயங்கொண்டு தாவத்தக்க குதிரைகள் வாங்கிக்கொண்டு வருதற்குப்போமென்று விடைகொடுத்தனுப்பினன் அப்போது மனவேறுபாட்டுடனே மந்திரித்தனஞ் செய்துகொண்டுவருகின்ற வாதவூரடிகள் நிதியறையைத்திறந்து நல்லகுதிரைகளாக வாங்கத்தக்க திரவியங்களை வேண்டியமட்டும் கைக்கொண்டு தாழிறுக்கிப் பொக்கிஷத்தைப் பூட்டிக்கொண்டு சந்திரகுலத்துப் பாண்டியனலே உத்தரவு பெற்றுப் போகின்றவர் தாம்கொண்ட பணமூட்டைகளை ஒட்டகங்களின்மேலேற்றி முன்னே போகவிட்டுப் பின்பு ஆகாயத்தையளாவிய கடவுள்கோயிலுக்குப்போய்ப்பொற்றுமரைக்குளத்திலேமுழுகி அந்தக்குளக்கரையிலிருக்கிற சித்திவிநாயகக்கடவுளை வணங்கிக்கொண்டு கருணைநாயகியான அங்கயற்கண்ணி யெம்பிராட்டியினுடைய சிவந்த தாமரைபோலுந் திருவடிகளைவணங்கினபின்பு வருணனுடைய வயிற்று நோயைத்தீர்த்தாண்ட சந்திரசேகரக் கடவுளினுடைய பாதங்களை முன்னேநின்று வணங்கி சுவாமி எனக்கொருகுறை முடிக்கவேண்டும் அதாவது இப்போதுநான் கொண்டுசெல்கின்ற பொருள்களை யெல்லாம் உமக்கும் சிதேந்திரியர்களா யும்மைவேண்டுகின்ற அடியார்களுக்குமே ஆகச்செய்யவேண்டும் ஓவெள்ளியம்பலத்தி லாடுகின்ற கடவுளே இதுவே யெனக்குள்ள குறையென்று வேண்டிநின்று துதிக்கின்ற வாதவூரடிகளுக்கு கடவுள் இன்னருள்போலும் ஆதிசைவனுகிய ஒருகுருக்கள் முன்னேவந்து விபூதி கொடுத்தான் அப்படி விபூதிகொடுக்கப் பெற்ற வாதவூரடிகள் நமக்கு இதுபோலு நல்ல நிமித்தம் வேறில்லை இன்னமிதுவே நல்வழிக்குக் காரணமென்று இரண்டு கைகளையுமேந்தி வாங்கி அணிந்துகொண்டு வேதநாதனை கடவுளை வணங்கி விடைகொண்டு திரும்பிப் பலவாத்தியங்கள் முழங்கவும் பதாதிகள்சூழவும் இரட்டைவெண்சாமரைகள்வீசவும் பவளக்கால்கொண்ட சந்திரன்போலும் வெள்ளைக்குடைநிழலின்கீழே பொன்னலும் ரத்தினத்தாலுஞ் செய்த பல்லக்கின்மேலேறிக்கொண்டு நடந்தார் அப்படி அவர் வழிக்கொண்டு நடக்குமுன்னே வெள்ளியம்பலத்திலே கான்மாறிஆடின கடவுள் வாதவூரடிகளினுடைய இருவினையொப்பும் மலபரிபாகமும் கண்டு அவரை அடிமைகொண்டு பணிகொண்டருள நினைத்து வேதங்களுங்காணக்கூடாத தமது கிருபையினலே ஒரு பிராமணகுலக் குருவாகித் தமது பாதங்களைவிட்டுநீங்காத பலசீடர்களுடனே திருப்பெருந்துறைக்குவந்து ஒருகுருந்தமரத்தி னிழலடியிலே யெழுந்தருளியிருந்தனர் பின்பு கடல்போலுஞ்சேனைகளுடனே முல்லைநிலங்களும் பாலைநிலங்களும்கடந்து எழுபிறப்பாகிய கருங்கடலைக்கடக்க வருகிற வாதவூரடிகள் கருணைக்கடல் நிறைந்துவிளங்குகின்ற திருப்பெருந்துறையை அடுத்து வரவர மனத்திலே ஆனந்தக்கடல்பெருகிக் கைகளைத் தலைமேலேகுவித்துக்கொண்டு ஆனந்தக்கண்ணீரொழுக வினைகளைப்போக்குகின்ற கடவுளருளுங் கூடவந்து பித்து இதுவென்று பிறர்நகைக்கவருவதான நாலாஞ்சத்திபதியவும் தமது மெய்யறிவைமூடுகின்ற மும்மலங்களினின்றும் பயந்து சுமைதாங்குகின்றவனையும் பிணியாளனையுமொத்து நெருப்பிலிட்ட

வெண்ணெய்போலத் தமது மனமுருகக்கண்டு என்னகாரணத்தினாலோ தெரியவில்லை இங்கே என்மன முருகுகின்றதினாலே என்னை மறைத்திருக்கின்ற மலவலியைக் கருக்குகின்றவனாகி என்னையாளுங் கிருபைக்கடல் விளங்குவதான இடமேயிதுவென்று திருப்பெருந்துறைக்குவந்து மழுவை வலங்கொண்ட கடவுள் கோயிலுக்குள்ளேபுகுந்து அங்குள்ளதீர்த்தத்திலே முழுகிச் சன்னிதிமுன்னேவந்து தேகம் மண்ணிலேபட விழுந்துவணங்கிக் கடவுளுடைய மெய்யானபுகழைத்துதித்துக்கொண்டு ஆலயத்தினிடத்தே கோயிலைவலமாகவரும் வாதவூரடிகள் மூல மறையும் ஓதிமுடியாதபொருளை சீலமுனிவோர்தெளிய மோனவழிதேற்றுங்கோலமானது வாசஞ்செய்கின்றதான வொருகுருந்தமரத்தை தமக்குமுன்னேகண்டார் அங்கேவேதசாஸ்திரங்க ளொருபுறத்திலும் மெய்வழியான சிவஞானபோதநூ லொருபுறத்திலும் புராணங்களோடுகூடின இசைநூலொருபுறத்திலும் உட்சமையம் புறச்சமையமென்று வேறுபாடானநூல்க ளொருபுறத்திலும் வாய்விட்டுமுழங்கவும் வேதங்கள்சொன்ன அறம் பொருள் இன்பம் வீடாகிய நான்கையும் அந்த வேதங்களாலும் காணுதற்கரிதான வீட்டுக்குக் காரணமாமென்று சைவாகமங்களிலே சொல்லுகின்ற சரிதை கிரியை யோகம் ஞானமாகிய நான்கையு முடிவுகண்டுணர்ந்து பெரியரான மாணாக்கர் கூட்டங்களும் வினவிடைபேசிக்கொண்டிருக்கவும் சரியை தெரிந்த மெய்யடியார்களும் கடவுளுக்கின்பமாகிய கிரியைசெய்கின்ற நல்லோர்களும் விளங்குதலான சிவயோகந்தெரிகின்ற அப்பியாசிகளும் ஆசாரியத்தன்மைகொண்டு போதிக்கின்ற ஞானிகளுமாக அளவில்லாதவர்கள் நிறைந்திருக்கவும் விரதங்களைவிட்டு ஆடாமலும் பாடாமலும் சகம்பேயென்று தம்மைச்சிரிக்க அழுகையு முவகையுங்கொண்டு பாசம்நீங்கியகண்களாலே சிவவடிவைத்தெரிசித்துக்கொண்டு உலகந்தெரியாமல் உலவுகின்ற அநேகம் வைராக்கியர்கள் கூடியிருக்கவும் மறைப்பில்லாத உள்ளமாகிய ஆகாயத்திலே குற்றந்தீர்ந்து விளங்குகின்ற ஞானசூரியனுக்கு உதயாஸ்தமயங்க ளில்லாமையினாலே இராப்பகல் தெரியாமலிருந்து செய்கின்ற நித்தியகருமானுஷ்டான விரதங்களைவிட்டிருக்கின்ற வித்துவான்களுங் கூடியிருக்கவும் கோவணமே வஸ்திரமாகவும் கையிற் பிச்சைவாங்குதலே சோறாகவும் சிவனடியார்களே உறவாகவும் உருத்திராக்ஷங்களே ஆபரணங்களாகவும் வெறுநிலமேபடுக்குமிடமானாலும் பகல் இராத்திரி ஆதி அந்தம் நடு இல்லாத இடத்திலே தூங்குவதே அவர்களுக்குவாழ்வாகவும் இப்படியாகிய அநேகம் அடியார்கள் கூட்டங்களினடுவே கல்லாலவிருக்ஷத்தையொப்பான குருந்தமரத்தினிழலடியிலே ( சிவமும் ஞானமும் போதமும் ) ஒருகையிலே சிவஞானபோதமெழுதிய புத்தகமும் ஒருகையிலே சின்முத்திரையுங்கொண் டிருக்கின்ற கிருபாமூர்த்தியைக்கண்டு கண்டவுடனே அம்பலத்திலாடிய ஆனந்தவடிவமும் வடவாலவிருக்ஷத்தின் கீழிருந்து சனகாதிகளுக்கு அசைவறச்சொன்ன வடிவமும் ஆகிய இரண்டும் இப்போது நாயினேனுக்கு எளிதாக இங்கேதோன்றுகின்ற இந்தவடிவமேயென்று அப்போது கடவுள் திருவுள்ளக்குறிப்பு தமதுள்ளத்துக்குத் தோற்றுவிக்கத்தெரிந்து முன்னேவந்துவணங்கி இரண்டுகைகளையு முடிமேலேகுவித்து துன்பமான வெவ்விய பிறவிவலையை அறுத்துக்கொள்ள வந்ததிருத்தொண்டரான வாதவூரடிகள் தாம் காணுதற்கு நல்லவராய் எளிதாகவந்து தமது அன்பாகிய வலைக்குள்ளகப்பட்ட கடவுளாகிய ஞானதேசிகர் அருள்வலைக்குள் ளகப்பட்டு உடம்பெல்லாம் நெக்கிட மனமுருகிய சீலத்தையுடைய மாணாக்கர்கள் பக்குவந்தெரிந் துபதேசிக்கின்ற ஞானதேசிகனென்று சொல்லும்படி மூலவாகமத்தைச்சொன்ன கடவுள்திருவடிகளின்மேலேவிகசிதமான செங்கழுநீர்மாலையை வன்கழலாகச்சுற்றி சந்தனக்குழம்பாலே அலங்கிருதஞ்செய்து காலமுங்கணுக்காட்சியுநிமித்தமுங்கடிந்தவராய்நிற்கஅப்போது ஞானதேசிகரான கடவுள் வாதவூரடிகளுடைய ஒழுக்கத்தையும் அன்பையுங்கண்டு அவருடைய உடல்பொருளாவிமூன்றையும் தத்தமாகவாங்கிக்கொண்டு மனக்கண்ணினாலே மும்மலங்களையும்போக்கி பாதகமலத்தையுஞ்சூட்டிச் செந்தாமரைபோலுந்திருக்கையை அவர்தலைமேலேவைத்துசூட்சுமபஞ்சாக்ஷரத்தினாலே சூழ்ந்த பாசக்கட்டையறுத்து மெய்யானந்தம் விளைநிலத்துய்த்துப்போக்கு மீட்சியுட்புறம்பிலாப்பூரணவடிவமாக்கினர் அப்போது ஒப்பற்றஞானவிளக்காகிய கடவுள்பார்த்த பார்வையாலே இரும்புண்டநீர்போலே தம்மைப்பற்றிவாங்கிக்கொண்ட பரிசுத்தனையும் குருபதேசஞ்செய்ததையும் தம்மைமூடியிருந்த பாசத்தையும் தம்மையும் மறந்து மெய்ஞ்ஞான சொரூபமாய் ஒன்றுந்தெரியாதிருந்தார் வாதவூரடிகள் பின்பு தேனும், பாலும், கற்கண்டும், அமுதமுமாகத் தித்தித்து ஊனும், உள்ளமும் உருக்க உள்ளொளியைத்தெரிந்து ஆனந்தமான ஆறுநிரம்பிக் கரைப்புறத்தே கசிவதுபோல நீங்காத ஞானவாக்கு சரஸ்வதி நாவிலேவந்து குதிகொள்ள கும்பிட்ட கைகளும், நடுங்கிய தலையும், நீர்துளும்ப அழுகின்ற கண்களும், புளகாங்கிதமா

சிந்தைதனைத்தெளிவித்துச்சிவமாக்கியெனையாண்ட
வந்தமிலாவானந்தமணிகொடில்லைகண்டேனே.
பூதங்களைந்தாகிப்புலனாகிப்பொருளாகிப்
பேதங்களனைத்துமாய்ப்பேதமிலாப்பெருமையனைக்
கேதங்கள்கெடுத்தாண்டகிளரொளியை மரகதத்தை
வேதங்கடொழுதேத்தும்விளங்குதில்லைகண்டேனே

(கண்டேன் - தரிசித்தேன்.)

எனநிருத்ததரிசனஞ்செய்து.

குறைவில்லாத கிருபையையுடைய திருமூலஸ்தானத்திலிருக்கும் சிவலிங்கமாகிய சோதியும் பொற்சபையாகிய சிதாகாசத்திலேமகிழ்ந்து நிருத்தஞ்செய்கின்ற சோதியும் ஒன்றென்று சொல்லும்அனுபூதியிலிருந்து ஒருசெயலுமில்லாதவராய் அசைவற்ற ஒருசித்திரம்போலானார்.

அப்போது மெய்காவற்காரர்கள் கருமையை விரிக்கின்ற கூந்தலையுடைய உமாதேவிபாகராகிய சபாநாயகரை வழிபடுவதுமறந்து கையும்காலும் அசைவில்லாமலிருக்கின்றன கண்ணுங் கொஞ்சமாயினும் இமைக்கவில்லை செய்யுங்காரியம் என்னோஇது தெளியாத மயக்கமாயிருக்கிறதென்று மாணிக்கவாசகரை இனி அழகிய சபையைவிட்டுப் போமென்றார் மெய்காவற்காரர் சொன்னதுகேட்டுத் தாண்டவம்புரிகின்ற அறிவின்றன்மையினது பழமையை நாடிக்காணத்தக்க துரியாதீதமாகிய மிகுந்த பரத்தினுடைய ஒளியிலே மூழ்கிப் பரவசப்பட்டு நீண்ட ஒருஸ்தம்பமாகி நெடுநாழிகைநின்றார் அக்காலையில் மெய்காவற்காரர் இவர்போமென்றால்போகார் ஒன்றும்பேசார் பயித்தியங்கொண்டவராகுமென்று பயந்து நின்று இரங்கும்போது இறந்ததேகத்திற்கு உயிர்வந்தடைந்த தன்மையைப்போல் அஞ்சலிசெய்ததாமரைமலர்போன்ற கைகளை முடிமேற்கொண்டு சிவ சிவபோற்றியென்று ஆதியாகிய கடவுளுடைய பொன்னம்பலத்தை மூன்றுதரம் வலங்கொண்டு அங்கே தனக்குநிகரில்லாத திருமூலஸ்தானக்கடவுளை வணங்கிபின்புஉமாதேவி திருவடிகளை அன்புடனேவணங்கி அந்தப்பொன்னொளியையுடைய கோயிற்கு மேற்பக்கத்தில் திருப்புலீச்சரத்திலடைந்து அந்தக்கடவுளுடைய தாமரைமலர்போன்ற திருவடிகளைவணங்கி அதற்கருகே திருநாகிச்சரத்திலிருந்த பரமசிவனுடைய பாதங்களைவணங்கி நீங்கித் திருத்தமாகிய தில்லைமூவாயிரவர்வாழுகின்ற சிதம்பரத்தைச்சூழ்ந்த வீதியிற்போகும்போது அமிர்தமாகிய திருவாசகஞ் சொல்லத்தொடங்கி.

ஓடுங்கவந்தியுமேயுறவென்றிட்டுள்கசிந்து
தேடும்பொருளுஞ்சிவன்கழலேயெனத்தெளிந்து
கூடுமுயிருங்குமண்டையிடக்குனித்தடியே
னுடுங்குலாத்தில்லையாண்டானைக்கொண்டன்றே.
கொம்மைவரிமுலைக்கொம்பனையாள்கூறனுக்குச்
செம்மைமனத்தாற்றிருப்பணிகள்செய்வேனுக்
கிம்மைதரும்பயனித்தனையுமீங்கொழிக்கு
மம்மைகுலாத்தில்லையாண்டானைக்கொண்டன்றே.

(குலாத்தில்லை - கொண்டாடுந்தில்லை.)

என அனுபவமிடையீடுபடாமையாய்.

மாறிநின்றென்னைமயக்கிடும்வஞ்சப்புலனைந்தின்வழியடைத்தமுதே, யூறிநின்றென்னுளெழுபரஞ்சோதியுள்ளவாகாணவந்தருளாய், தேறலின்றெளிவேசிவபெருமானேதிருப்பெருந்துறையுறைசிவனே, யீறிலாப்பதங்களியாவையுங்கடந்த வின்பமே யென்னுடையன்பே.

தந்ததுன்றன்னைக்கொண்டதென்றன்னைச்சங்கராவார்கொலோசதுர்த்த, ரந்தமொன்றில்லாவானந்தம்பெற்றேனியாதுநீபெற்றதொன்றென்பாற், சிந்தையேகோயில் கொண்டவெம்பெருமான் திருப்பெருந்துறையுறைசிவனே,யெந்தையேயீசாவுடலிடங்கொண்டாயானிதற்கிலனோர்கைம்மாறே.

(கோயில் - சிதம்பரம்.)

என அனுபோகவிலக்கணஞ்சொல்லி.

உடையாளுன்றனடுவிருக்கு முடையாணடுவுணீயிருத்தி, யடியேனடுவுளிருவீருமிருப்பதானாலடியேனுன், னடியார்நடுவுளிருக்குமருளைப்புரியாய்பொன்னம்பலத்தெம், முடியாமுதலேயென்கருத்துமுடியும்வண்ணமுன்னின்றே.

நல்காதொழியானமக்கென்றுன்னுமம்பிதற்றிநயனநீர், மல்காவாழ்த்தாவாய்குழறாவணங்காமனத்தானினைந்துருகிப், பல்காலுன்னைப்பாவித்துப்பரவிப்பொன்னம்பலமென்றே, யொல்காநிற்குமுயிர்க்கிரங்கியருளாயென்னையுடையானே.

(மூத்ததிருப்பதிகம்-பெரியதிருப்பதிகம்.)

என அநாதியாகியசற்காரியங்கூறி.

தில்லைமூதூராடியதிருவடி
பல்லுயிரெல்லாம்பயின்றனனாகி

* * * * * *

பொலிதருபுலியூர்ப்புக்கினிதருளின
னொலிதருகயிலையுயர்கிழவோனே.

(கீர்த்தி-புகழ்.)

எனச்சிவனதுதிருவருட்புகழ்ச்சிமுறைமைகூறி.

அண்டப்பகுதியினுண்டைப்பிறக்க
மளப்பருந்தன்மைவளப்பெருங்காட்சி

* * * * * *

அருளொடுபெராவமுதாக்கினன்
பிரமன்மாலறியாப்பெற்றியோனே.
(அண்டப்பகுதி -ஆகாயமாகியமுதல்.)
எனச்சிவனது தூலசூக்குமத்தைவியந்து.

நான்முகன்முதலாவானவர்தொழுதெழ
வீரடியாலேமூவுலகளந்து
* * * * * *
போற்றிபோற்றிபுராணகாரண
போற்றிபோற்றிசயசயபோற்றி
(போற்றி-பல்லாண்டு.)
எனச்சகத்தினுற்பத்திகூறி.

இப்படிமூன்றகவலும் பாடினர் அவ்விடத்தில் மாதர்களெல்லாம் கைகளிலேயிருக்கின்ற சங்கவளையல்கள் சத்திக்கச் செம்பொன்னாற்செய்த கிங்கிணிகள் சத்திக்க மயிர்ச்சாந்து பூசிய கரியகூந்தலின்மேல் வண்டுகள்மயங்கி இசையைப்பாடத் தேகத்திலேவேர்வையுண்டாக வெவ்விய போர்செய்கின்ற கண்ணாகிய கயல்களைப்புரட்டிப் பக்கங்களிலே இந்தவகையாகநின்று திருப்பொற்சுண்ணம் இடித்தார்கள். மாணிக்கவாசகர் அந்தமாதர்களுடையபாடல்களைக்கேட்டு அவர்கள் சொல்லியதாக மெய்யாகிய தமிழினால் நன்மைமிகுந்த.

முத்துநற்றாமம்பூமாலைதூக்கி முளைக்குடந்தூபநற்றீபம்வைம்மின், சத்தியும்சோமியும்பார்மகளுநாமகளோடுபல்லாண்டிசைமின், சித்தியுங்கவுரியும்பார்ப்பதியுங்கங்கையும் வந்துகவரிகொண்மி, னத்தனையாறனம்மானைப்பாடி யாடப்பொற்சுண்ணமிடித்துநாமே.

வேதமும்வேள்வியுமாயினார்க்கு மெய்ம்மையும் பொய்ம்மையுமாயினார்க்குச், சோதியுமாயிருளாயினார்க்குத்துன்பமுமாயின்பமாயினார்க்குப், பாதியுமாய்முற்றுமாயினார்க்குப் பந்தமுமாய்வீடுமாயினாருக், காதியுமந்தமுமாயினாருக் காடப்பொற்சுண்ணமிடித்துநாமே.
(பொற்சுண்ணம்-பொன்னிறமானமஞ்சட்பொடி-இது-திருமஞ்சனப்பொடி.)
என ஆநந்தமனோலயங்கூறி.

மேகங்கள் பிரகாசிக்கின்ற திருச்சோலையிடத்தே வரும்ளவில் அங்கேதங்கள் தங்களுக்குள்ளே விளையாடுகின்ற பெண்பிள்ளைகளைப்பார்த்து வீண்பேச்சுச்சிறிதுமில்லாமல் எமதுகடவுளையே சொல்லுங்கள் நீங்களென்று அவரவர்கள் சொல்லியதாகத்.

திருமாலும்பன்றியாய்ச்சென்றுணராத்திருவடியை யுருநாமறியவோரந்தணனாயாண்டுகொண்டா
னொருநாமமோருருவமொன்றுமில்லார்க்காயிரந்
திருநாமம்பாடிநாந்தெள்ளேணங்கொட்டாமோ.
குலம்பாடிக்கொக்கிறகும்பாடிக்கோல்வளையா
ணலம்பாடிநஞ்சுண்டவாபாடிநாடோறு
மலம்பார்புனற்றில்லையம்பலத்தேயாடுகின்ற
சிலம்பாடல்பாடிநாந்தெள்ளேணங்கொட்டாமோ.
(தெள்ளேணம்-தெள்-துள்ளலாய், துள்ளல்-அதிர்தலாய், தெள்ளேணம்-அதிர்முரசு,ஏணம்-மான்றோல் அது கடமைத்தோலாற்கட்டியமுரசு, கடமை-எருமைபோல்வது.)
எனச்சிவனோடடைவாய்.

வளைந்ததுவில்லுவிளைந்ததுபூச
லுளைந்தனமுப்புரமுந்தீபற
வொருங்குடன்வெந்தவாருந்தீபற.
தேனைநிறுத்திமலையெடுத்தான்சிர
மீனைந்துமிற்றவாறுந்தீபற
விருபதுமிற்றதென்றுந்தீபற.
(உந்தீபற மீகிழிதழுற உந்திப்பறந்து விளையாடல் உந்தல்-வாய்க்காற்று வெளியேசெல்லவூதல் இது இக்காலத்தே தும்பிபறத்தல் எனமரீ இயிற்று.)
என ஞானவெற்றிகொண்டு.

பூத்தாரும்பொய்கைப்புனலிதுவேயெனக்கருதிப்
பேய்த்தேர்முகக்குறும்பேதைகுணமாகாமே
தீர்த்தாய்திகழ்தில்லையம்பலத்தேதிருநடஞ்செய்
கூத்தாவுன்சேவடிகூடும்வண்ணந்தோணோக்கம்.
உளைமாண்டவுள்ளொளியுத்தமன்வந்துளம்புகலுங்
களைமாண்டகாமப்பெருங்கடலைக்கடத்தலுமே
யிளைமாண்டவிந்திரியப்பறவையிரிந்தோடத்
துளைமாண்டவாபாடித்தோணோக்கமாடாமோ.
(சுனையாடல்-நீராடலென்றாற்போல் தோணோக்கமாடல் ஐவகைப்புணர்ச்சியுளொன்று.)
எனப்பிரபஞ்ச சுத்திசொல்லி.

இணையார்திருவடியென்றலைமேல்வைத்தலுமே
துணையானசுற்றங்களத்தனையுந்துறந்தொழிந்தே
னணையார்புனற்றில்லையம்பலத்தேயாடுகின்ற
புணையாளன்சீர்பாடிப்பூவல்லிகொய்யாமோ.
அத்தியுரித்ததுபோர்த்தருளும்பெருந்துறையான்
பித்தவடிவுகொண்டிவ்வுலகிற்பிள்ளையுமா
முத்திமுழுமுதலுத்தரகோசமங்கைவள்ளல்
புத்திபுகுந்தவாபூவல்லிகொய்யாமோ.
(பூவல்லிகொய்யாமோ-பூவை வல்லியிற்கொய்து விளையாடாமோ-வல்லி-கொடி, இது கொடிமுல்லை கொடிமல்லிகை-தாமரைக்கொடி, அல்லிக்கொடி என்றாலும் பத்திரபுஷ்பங்களுக்கெல்லாம் உபலக்ஷணம்.)
என மாயாவிசயநீக்கி.

சீரார்பவளங்கான் முத்தங்கயிறாக,வேராரும்பொற்பலகையேறியினிதமர்ந்து, நாராயணனறியாநாண்மலர்த்தாளுடையேற், கூராகத்தந்தருளுமுத்தரகோசமங்கை, யாராவமுதினருட்டாளிணைபாடிப், போரார்வேற்கண்மடவீர்பொன்னூசலாடாமோ.

தெங்குலவுசோலைத்திருவுத்தரகோசமங்கை, தங்குலவுசோதித்தனியுருவம்வந்தருளி, யெங்கள்பிறப்பறுத்திட்டெந்தரமு மாட்கொள்வான், பங்குலவுகோதையுந்தானும்பணிகொண்ட, கொங்குலவுகொன்றைச்சடையான்குணம்பரவிப், பொங்குலவுபூண்முலையீர்பொன்னூசலாடாமோ.

(பொன்னூசல்-பொன்னாற்செய்தஊசல்.)

என அருட்சுத்திசொல்லி.

அங்கேஒருபெண் சிறந்த தனது தாயைப்பார்த்துச்சொல்லியதாகத்தாங்கப்பெற்ற இசையையுடைய சொல்லெனத்தக்க

வேதமொழியர்வெண்ணீற்றர்செம்மேனியர்
நாதப்பறையினரன்னேயென்னும்
நாதப்பறையினர்நான்முகன்மாலுக்கு
நாதரிந்நாதனாரன்னேயென்னும்.
கொன்றைமதியமுங்கூவிளமத்தமுந்
துன்றியசென்னியரன்னேயென்னுந்
துன்றியசென்னியின்மத்தமுன்மத்தமே
யின்றெனக்கானவாறன்னேயென்னும்.

(அன்னே – தாய்.)

என ஆத்துமபூரணஞ்சொல்லி.

பக்கங்களிற்பாடுகின்றதும்பியை விரும்பிப்பார்த்துக்கடவுளுடைய திருவடியைத்துதிசெய்யென்று

பூவேறுகோனும்புரந்தரனும்பொற்பமைந்த
நாவேறுசெல்வியுநாரணனுநான்மறையு
மாவேறுசோதியும்வானவருந்தாமறியாச்
சேவேறுசேவடிக்கேசென்றூதாய்கோத்தும்பீ.
பூமேலயனோடுமாலும்புகலரிதென்
றேமாறிநிற்கவடியேனிறுமாக்க
நாய்மேற்றவிசிட்டுநன்றாப்பொருட்படுத்த
தீமேனியானுக்கேசென்றூதாய்கோத்தும்பீ.

(கோத்தும்பி-தெய்வலோகவண்டு.)

எனச் சிவனேடைக்கியமாய்.

சோலையின்மத்தியத்திலே வாழ்கின்ற குயிலைப் பார்த்து அழகிய இளங்குயிலே இங்கே எமது கடவுளைக் கூவியழையென்பதாகிய

கீதமினியகுயிலேகேட்டியேலெங்கள்பெருமான்
பாதமிரண்டும்வினவிற்பாதாளமேழினுக்கப்பாற்
சோதிமணிமுடிசொல்லிற்சொல்லிறந்து நின்றதொன்மை, யாதிகுணமொன்றுமில்லானந்தமிலான்வரக்கூவாய்.

கொந்தணவும்பொழிற்சோலைக்கூன்குயிலேயிதுகேணீ, யந்தணனாகிவந்திங்கேயழகியசேவடிகாட்டி, யெந்தமராமிவனென்றிங் கென்னையுமாட்கொண்டருளுஞ், செந்தழல்போற்றிருமேனித்தேவர்பிரான் வரக்கூவாய்.

(குயில்-கோகிலம்.)

என ஆத்துமவிரக்கஞ்சொல்லி.

கிளியைப்பார்த்துச் சந்திரனைத்தரித்தகடவுளைச் சொல்லென்று.

ஏராரிளங்கிளியேயெங்கள்பெருந்துறைக்கோன்
சீரார்திருநாமந்தேர்ந்துரையா – யாரூரன்
செம்பெருமான்வெண்மலரான்பாற்கடலான்செப்பு
லெம்பெருமான்றேவர்பிரானென்று. [வபோ
சோலைப்பசுங்கிளியேதூநீர்ப்பெருந்துறைக்கோன்
கோலம்பொலியுங்கொடிகூறாய் – சாலவு
மேதிலார்துண்ணெனமேல்விளங்கியேர்காட்டுங்
கோதிலாவேறுங்கொடி.

(தசாங்கம்-பத்துவகைஅங்கம்.)

என அடிமைகொண்டமுறைமைசொல்லி.

பூமியிலேதம்மை அடிமைகொண்டகடவுளையல்லாமல்வேறொருவரைத்தெய்வமென்பதற்கு அஞ்சுகின்றே துன்வினையையுடையேனென்னும் சிறந்தபண்ணையுடைய

புற்றில்வாளரவுமஞ்சேன்பொய்யர்தம் மெய்யுமஞ்சேன், கற்றைவார்சடையெம்மண்ணல்கண்ணுதல்பாதநண்ணி, மற்றுமோர்தெய்வந்தன்னையுண்டெனநினைந்தெம்பெம்மாற், கற்றிலாதவரைக்கண்டாலம்மநாமஞ்சுமாறே.

கோணிலாவாளியஞ்சேன்கூற்றுவன்சீற்றமஞ்சே
னீணிலாவணியினானைநினைந்துநைந்துருகிநெக்கு
வாணிலாங்கண்கள்சோரவாழ்த்தி நின்றேத்தமாட்
வாணலாதவரைக்கண்டாலம்மநாமஞ்சுமாறே. [டா

(அச்சம்–அஞ்சுகை.)

என ஆநந்தமுற்று.

பின்பு அந்நகர்ப்புறத்திலே ஒருபன்னசாலைசெய்து அங்கிருந்தார் வேதாந்தப்பொருளாகிய இந்த திருவாசகத் தமிழைச்சொல்லிய மாணிக்கவாசகருடைய செய்தியனைத்தும் அரியபுகழையுடைய தில்லையிலுள்ளவர்யாவரும் தங்கள் கூட்டங்கள்தோறுஞ்சொல்லி நல்லமகிழ்ச்சிபெற்று அதிசயித்தார். மாணிக்கவாசகர் முப்பத்தாறுதத்துவத்தின்முடிவிலே செய்கின்றசபாநாயகரது நிருத்தத்தை தமக்கு

ள்ளேகண்டு நித்தியம்போய் அந்தக்கடவுளைப்பத்தியினலே வணங்கி இந்தப்பிரகாரம் தில்லைமாநகரத்துஎல்லேயிற்செய்த பன்னசாலேயிலெழுந்தருளி யிருந்தார்.

தாழ்ந்து நீடிய சடாபாரத்தையுடையபரமசிவனுடைய இரண்டுபாதங்களையும் விடாத ஒரு தபசியானவர் சமுத்திரஞ்சூழ்ந்த பூமியிலுள்ள வளத்தை ஆயத்தக்க இச்சையுள்ள மனமுடையவராய்ச் சோழநாட்டைக்கண்டு தில்லைமாநகரைவணங்கிப்பின்பு குற்றமில்லாத ஈழதேசத்தைப்பார்க்கவேண்டுமென்று நினைத்து அங்கேபோயினர் அப்படிப்போன தபசியானவர் முதன்மைபெற்ற நன்மையைக்கொண்ட ஈழநாட்டரசனிருந்த ஊரைச்சேர்ந்துமிகுந்த வுள்ளன்பினலே தானிருக்குமிடந் தோறுஞ் சிதம்பரம் அளவில்லாதகாலம் வாழ்கவென்றுசொல்லத்தொடங்கினர் தான்போய் சேருமிடங்கடோறுஞ் சிறக்கப்பெற்ற பொன்னம்பலம் வாழ்கவென்றுசொல்லி இருக்குநாளில்அங்கேயிருக்கும்நன்மையில்லாத மூடராகிய புத்தர் ஈழதேசத்து ராஜாவுக்கெதிரேபோய் நயப்புடன்வணங்கி அரசனேஒன்றுகேள் குறைவில்லாத திறமை யுடையவனுகும் ஒருத்தன் இந்நகரிலேயிருக்கின்ருன் அவனுக் காபரணம் ருத்திராக்ஷமாலிகை அவன் நாள்தோறும் புசிப்பது பிக்ஷை நின்ருலும் இருந்தாலும் பிரகாசத்தையுடைய பொன்னம்பலமென்னுஞ் சொல்லைச்சொல்லுகிருனென்ருர் அவ்வார்த்தையைக்கேட்டவரசனைவன் அவனை இன்று இங்கே கொண்டுவாருங்களென்ருன் அவரும்போய் அன்புடையவரோ உம்மை அரசன் அழைக்கின்ருன் வாருமென்ருர்அதற்கவர்சொல்லுவார் நாள்தோறும் நன்மையுந் தீமையுமில்லாத பிக்ஷையெடுத்து உண்பதல்லாமல்வேறென்று நினையாதவர்களிடத்தும் அரசனுக்குக்காரியமுண்டோ வென்ருர் ஊரிலே பிக்ஷையெடுத்துண்டாலும் காரியம் ஒன்றுமில்லையானுலும் பூமியிலே யிருக்கின்றவர்களுடைய உயிரை இரட்சித்தல் அரசர்களுக்குப்பாரமாகும் ஆதலினுல் பரிமளிக்கின்ற மாலையினையுடைய எங்கள் அரசனிடத்திலேவரவேண்டுமென்றுசொல்ல தீங்கொன்றுமில்லாத தவசியானவர் நல்லதென்று சிறப்புவிளங்கிய வேலையுடைய தூதருடனேபோனர் அப்போது ஆதியாகிய பிடகநூல் மூன்றுமறிந்து நான்குகுற்றமும்நீங்கிச் சிலமைந்துந் தரித்துக் காமாதியாறும் பஞ்சேந்திரியங்களும் அடக்கப்பட்ட இயல்பையுடையவனுய்ப் பஞ்சகந்தமுங்கெடுவது முத்தியென்றுகாட்டுகின்ற பௌத்தாசாரியன் தன்னுடனே யிருக்கச்சேனைகள் புடைசூழ அழகுசிறந்த புயத்தையுடையபுத்தராசனும் சபையின்கண்ணிருந்தான் அங்கு தபசியானவர் உடுக்கப்பட்ட ஒருவெள்ளைக்கோவணமும் பிரகாசிக்கப்பட்டகபாலமும் சதங்கைகட்டிய நெடியபிரம்பும் திலதப்பொட்டணிந்த திருமுகமும் சிறியபுன்சிரிப்பும் அசைகின்ற சடையும்பார்த்து அரசன்திடுக்கிட வந்து திருவம்பலமென்றுசொல்லி அருகேயிருந்தார் இப்படியிருந்த தபோதனரைப்பார்த்துஇப்போது நீர்திருவம்பலமென்று இங்கேசொல்லுந்தன்மைஎன்னவென்றுவினவ அவ்வரசனுக்கு அவர்சொல்லுவார் செல்வத்தையதிகரிக்கச்செய்யுங்கீர்த்தியினலே பிரகாசிக்கின்றசோழராசாவானவன் பிரியாத தன்னுடைய கிருபாநோக்கங்களாலே இரட்சிக்கின்ற சோழநாட்டிலே சிதம்பரமென்றெரு ஸ்தலமுண்டு அந்தஸ்தலம் முன்னே தில்லைவனம் அதுவோ திரிபுவனத்துக்குமுன்னே உண்டாகிய தெய்வஸ்தலமாம் அதனுல் மூலஸ்தானமென்று சொல்லலாம் இந்தப்பூமிக்கு நடுவாகப்பிரகாசிக்கின்ற சிற்சபையிலே சந்தனம்பூசப்பட்ட ஸ்தனத்தையுடைய உமாதேவிகாணச் சபாநாயகர் நிருத்தஞ்செய்தார் நிலைபெற்ற திறலையுடைய மனுச்சக்ரவர்த்தி குமாரனுகிய இரணியவன்மனுடைய தேகத்திலிருந்த குட்டநோயை நீக்கி நெடிய மகமேருவைப்போலுந் திவ்விய தேகத்தைக்கொடுத்த பரிசுத்தமாகிய சிவகங்கையென்னும் ஒருதடாகமுண்டு முன்னே பூமியிலே ஒருதவமுஞ்செய்யாதவரும் அதிலே மூழ்கிப்பஞ்சகிருத்தியத்திற்குக்காரணமாகிய நிருத்தத்தை தெரிசித்தால் அவர்கள் உலகத்திலேவந்து பிறவார்கள்பொருந்திய பிறவியைநீக்கி ஆத்மகோடிகளுக்கு நன்மையான மோக்ஷத்தைக் கொடுப்பதற்கு நினைக்கின்ற அநேக சமயதெய்வங்களில் யானே வல்லவனென்று திருவடிமேல் அழகுவிளங்கிய பொன்னுற்செய்தவீரக்கழலையணிந்து வலியையுடைய கொடியுங்கட்டி அந்தக்கர்வத்தால் அருட்சத்தியாகிய உமாதேவிகாண நடனஞ்செய்தான் நிறையப்பெற்றசடாமுடியையுடைய பரமசிவனுடைய இரண்டுபாதத்தை வணங்காத தீயமனமும் வாக்கும் செய்கையுமுடைய கொடியவர்களும் ஒருதரம் நிலைபெற்ற பொன்னம்பலமென்றுசொன்னுல் செல்வத்தைத்தருகின்றபஞ்சாக்ஷரத்தை இருபத்தோராயிரத்தறுநூறுதரம் நாவைக்கொண்டு சொல்வதற்கு நிகரல்லவா வென்ருர் மலையென்றுசொல்லுங் குணத்தையுடைய தபசியானவர் விபூதிபஞ்சாக்ஷரமில்லாத அரசனே திருவம்பலமென்று நாம் சொன்னதற்குப்பொருள் இதுவாகுமென்ருர் அப்போது புத்தகுருவானவன் தேறுகி

ன்ற பிடகாகமமூன்றும்சொன்ன தலைவனல்லாமல் வேறேயொரு தெய்வமுண்டோவென்று கோபித்துச்சொல்லி அப்படியானல் தில்லைமாநகருக்குப்போய் வாதுசெய்து அவரிருந்து நிருத்தஞ்செய்கின்ற பாதத்திலிடுகின்ற வீரக்கழலையும் பிடிக்கின்றகொடியையும் அறுத்துப்போடுவேன் புத்தனொருவனேதவிர வேறுதெய்வ மில்லையென்று அந்தச் சபையை அரசமரநீழலிலிருக்கும் புத்தன்கோயிலென்றுசொல்லும்படிவைப்பேன் இந்தக் காரியத்தை மூன்றுதினத்தில் யானேமுடிப்பேனென்று அழகியசிவிகையின்மீதிலேறிக்கொண்டு தன்னுடையபாதத்தை வணங்குகின்ற பௌத்தகூட்டங்கள்சூழ மிகவும்பிரகாசிக்கின்ற அலையையுடைய கடலும் நாடும் காடும் நீங்கிப் புத்தியிலே வியசனங்கொண்டு சீக்கிரத்திலே சிதம்பரத்துக்குப் போயினன் புத்தராசனும் தன்னுடைய செல்வம்போன்ற புத்திரிக்கு முன்னமேயுண்டான ஊமைத்தன்மைநீங்கச் சிதம்பரத்திற்குப்போகவேண்டுமென்பதை நினைத்துத் தன்னுடைய சேனைகள்சூழ ஒப்பற்ற பெரியசிவிகையி லேறிக்கொண்டு புத்திரியோடு சோழநாட்டில்வந்து தில்லைமாநகரம்வந்துசேர்ந்தான்.

இந்தப் புத்தராஜன்வருவதற்குமுன்னே வந்த புத்தகுருவானவன் அக்கினியைத்தரித்த சிவந்தகையையுடைய பரமசிவனது தில்லைமாநகரத்து எல்லையின்முன் சிவிகையைவிட்டிறங்கி மிகுந்த குளிர்ச்சிபொருந்திய கங்கையைத்தரித்த சிரசையுடைய பரமசிவனது ஆலயத்திலே பொன்னினற்செய்த மண்டபத்தில்வந்துசேர்ந்தான் அங்கேயிருந்த புத்தகுருவை புத்தராஜன் வணங்கித்துதிசெய்து உயர்ந்த மகிழ்ச்சியடைந்திருந்தபோது சர்ப்பக்கூட்டத்தைமுடித்த சடையையுடைய பரமசிவனது கோயிலிலே பணிவிடைசெய்பவர்கள் இவர்கள் வருதலைக்கண்டு எல்லாரும் ஒன்றாய்ச்சேர்ந்து தங்கள் தங்கள் மனநொந்து அக்கினியைப்போற் கோபித்து அவர்களாயாசங் கொள்ளும்படி சில வார்த்தைகளைப்பேசிக் கடவுளிருக்கின்ற தில்லைமாநகரின் எல்லையைவிட்டுப் புத்தனே சீக்கிரத்திலோடிப்போ இது நாங்கள்பொறுக்கமாட்டோமென்று சொன்னார்கள் புத்தகுருவானவன் வெற்றிமாலையை யணிந்த சோழன்முன்னே உயர்ந்ததர்க்கம்பேசி நீங்கள் போற்றப்பட்ட சைவமார்க்கம் நிலையன்றென்றுசொல்லிச்சிறப்புப்பொருந்தியபுத்தனே யுயர்ந்ததெய்வமென்று இப்போது சொல்வதல்லாமல்போவதில்லையென்றான் புத்தகுரு இவ்வார்த்தையைச் சொன்னபின்பு அவர்கள் யாவர்க்கும் இதைச்சொல்லுவோமென்று சீக்கிரத்திலே உண்மையாகிய தபோதனர்களுக்கும் தில்லைமூவாயிரவர்களுக்கும் பரிகலத்தார்களுக்கும்,அவரவர்கள் வீடுகள்தோறும்போய்ச் சொன்னார்கள் அதைக்கேட்ட அவர்கள் புண்ணிலே வேல்நுழைந்ததுபோல வருத்தப்பட்டு சபாநாயக ரெழுந்தருளியிருக்கின்ற கோயிலிலே அழகிய ரத்தினம்பதித்த மண்டபத்திலிருக்கின்ற புத்தகுருவினுடைய நினைப்பென்னவென்று கேட்போமென்று சீக்கிரத்திற் போயினார்கள் தில்லைமூவாயிரவர்போக எதிர்கொண்டுவாராதஉண்மைஞானமில்லாத புத்தனைக் கோபித்துப் பலபேச்சுகள்பேசிப் பிழைக்கும்வகையறியாத நீ இங்கே அஞ்சுதலில்லாமல் மதியாமலிருந்ததன்மை யென்னென்றுகேட்டார்கள் அதற்குப் புத்தகுருவானவன் நான்குவேதமும் ஆறுசாஸ்திரமும் பதினெண்புராணமும் இருபத்தெட்டாகமமும் ஆகிய அவைகளாலே உங்களுடையதெய்வமே தெய்வமென்று சொல்வீர்களானல் எங்கள் தெய்வமே தெய்வமென்று யான் சொல்லுவேன் இங்கே என்னெதிரே சொல்லுமென்று சொன்னான் அதற்குத் தில்லைமூவாயிரவர் இன்று இழிவினையுடைய உன்னோடுபேசுகிறது நமக்குத்தகாதகாரியம் ஆனாலும் சிறப்பொன்றுமில்லாத வுன்னை ஒருசொல்லிலே செயிப்போம் ஆயினும் மிகுந்ததிறலையுடைய அரசர்களும் மெய்யுணர்வினையுடைய பெரியோர்களுங் கூடியிருக்கின்ற சபையெதிரே நம்முடைய் தர்க்கவார்த்தையைச் சொன்னால் இதுதக்கது இதுதகாததென்று அவர்கள் சொல்லுவார்களானல் எந்தக் கலகமுமில்லை இதுவே காரியமாகுமென்று சொல்லி சோழராஜாவையும் பிராமணர்களையும் பெரியதபோதனர்களையும் கலைக்கியானவல்லவரையும் நாளைச் சிதம்பரத்தைத் தரிசிக்கவரும்படி பலஓலையெழுதிவிட்டுப் புத்தகுருவைப்பார்த்து இன்றொருபொழுதுமாத்திரம் நீ யிங்கிருப்பாய் நாளை யுன்னுடையதாழ்வை உலகத்திற்குக்காட்டுவோமென்றுசொல்லித் தங்கள் வீட்டிற்குப்போய் நல்லவுணவையுண்டு அன்றிராத்திரி யாவரும் நித்திரைசெய்யும்போது அழகுபொருந்தியபொன்னம்பலத்தில் நிருத்தஞ்செய்கின்ற சபாநாயகரானவர்கையிற் பிரம்புகொண்டு தழைந்தசடைமுடியும் திருநீறணிந்த திருமேனியும் உடையவராய் எல்லாரும் விரும்புகின்ற திருவடிவங் கொண்டு சூரியனுதயமாகுமுன்னேவந்து கனவிலே எல்லார்க்கும் நீங்கள் வருந்துவதையொழியுங்கள் நம்முடைய தில்லைமாநகரத்தெல்லையில் திருவாதவூரனாகிய மாணிக்கவாசகனிருக்கின்றான் இந்தச்செய்தியைக்கேட்டால் தர்க்கசாஸ்திரத்தைக்கொண்டு புத்தனை வாதுசெய்து வெல்

லுவான் ஆதலால் இப்பொழுதே அரியதவத்தையுடைய நீங்கள்போய் அவனையழையுங்களென்றார்.

பின்பு விழித்து அவரவர்களும் தாங்கள்கண்டகனவைக்குறித்து உசாவி அதிசயித்து மனவருத்தநீங்கி மெய்த்தவத்தையுடைய மாணிக்கவாசகரிருக்கின்ற இடத்துக்குப் போவோமென்று உத்தமமாகிய அவரதுபன்னசாலையிற் சிக்கிரத்திற்போய் சிறந்தகிருபாலயாகிய மாணிக்கவாசகரைக்கண்டார்கள் அப்போது அவர்பதுமாசனத்தின்மேலிருந்த யோகம் நீங்கியிருப்பதைக் கண்டு சபாநாயகர் கனவிலே வந்து அநுக்கிரகஞ்செய்தவையெல்லாம் தில்லைமூவாயிரவர் அவருக்குச்சொன்னார்கள் அந்தத் திருவார்த்தையானது மாணிக்கவாசகர் செவியினிடத்திலே சேர்ந்தமாத்திரத்தில் முன்னமே கடவுள்சொல்லியிருப்பதை நினைத்து வந்த தில்லை மூவாயிரவருடனே சிக்கிரம்போய் அழகிய சபாநாயகரை வணங்கிக் கிருபையைப்பெற்றும் பௌத்தர்களிருந்த மண்டபத்திற்குப்போய் அவர்கள் தீமையுள்ள முகத்தைப்பார்த்தால் துன்பமுண்டாகுமென்று திரைபோட்டுக்கொண்டு ஆசனத்திலெழுந்தருளியிருந்தார் நிலைபெற்ற வேதப்பிராமணர்கள் பௌராணிகர் கலைஞானம்வல்லவர்கள் பெரியோர்களுடனே சோழராஜா சிக்கிரத்தில்வந்து அழகிய சபாநாயகரைத் தரிசனம் பண்ணிக்கொண்டு பிரகாசம்பொருந்திய ரத்தினமிட்டிழைத்த மண்டபத்திற்கு வந்து கிருபைமிகுந்த மாணிக்கவாசகர் திருவடியைவணங்கி அவருக்குப் பக்கத்திலே பூரணச்சந்திரன்போல் ஆசனத்திலிருந்தான் அப்போது மாணிக்கவாசகர் மகிழ்ச்சியடைந்து புத்தனைப் பார்த்துத் திருட்டுவார்த்தை சொல்லப்பட்டவனே நீ வந்தகாரணத்தைச் சொல்லென்றுகேட்க அவ்வுரைகேட்ட புத்தகுருவன் நிலைபெற்ற எங்கள் தெய்வமல்லாமல் வேறே தெய்வமில்லையென்று இந்தவூரில்வந்துசொல்லி இங்கே எல்லாருங்காணப் பொன்னம்பலத்திலே எங்கள் புத்தரைவைக்க விரும்பி நேற்றே வந்திருக்கின்றேன் இதல்லாமல் யானினைத்தது வேறொன்றுமில்லை என்றான் இப்படிச்சொல்லியவளவில் மாணிக்கவாசகர்புன்னகைகொண்டு முன்பிறப்பிலே தவமொன்றுமில்லாதவனே முயல் யானையாவதுண்டோ நல்லது அதுநிற்க உன்னுடைய நல்லபெரியதெய்வமும் ஆத்மாக்கள் அவனடியிற்சேருஞ்செய்தியும் சொல்லென்றுகேட்க புத்தகுருவானவன் கோபமடைந்து கண்ணில்லாதவனுக்குச் சூரியகிரணத்தினொளியைக் காட்டக்கூடுமோ அரிதாகிய எங்கள் புத்ததேவனுடைய நல்ல கீர்த்தியைச் சொல்லவேண்டுமோனால் நல்ல நாவான வைகள் பல்லாயிரம்வேண்டும் எமதுகடவுள் தருமம்விளங்குகின்ற நல்ல பிடகாகமஞ்சொல்லிஅன்பையுடையவனாய்ப் பிரகாசிக்கின்ற அநேகயோனிகள் தோறும் பிறந்து ஆத்மகோடிகளுக்கு உறுதிசெய்து பொல்லாங்கைத்தருகின்ற, கொலை, களவு, பொய், கள்ளுண்ணல் என்னும் நாலுகுற்றங்களையும் நீக்கி மேன்மை சிறந்திருக்கின்ற அரசமர நீழலிலே எமதுகடவுள் சேர்ந்திருப்பான். பொருந்திய கருப்பத்திற்சேருகின்ற உருவம் வேதனை குறிப்புபாவனை விஞ்ஞானம் ஆகிய பஞ்சகந்தங்களும்கூடி ஒழிவில்லாத அநேகவறிவுண்டாய் நீங்குவது பிறவித்துன்பமாம் அதுநீங்கக் கேடாயழிவது மோக்ஷமென்றான்.

அப்போது மாணிக்கவாசகரும் சோழராஜாவினது களங்கமற்ற முகத்தைப் பார்த்துக் கிருபாநோக்கஞ்செய்து அறியாமையினால் மயக்கங்கொண்டு பயித்தியவார்த்தை சொல்லும் புத்தனுக்கு இன்று யாமென்சொல்வதென்று பின்பு தருமமுண்டென்று புத்தனானவன் பிடகநூல் சொன்னானென்றான் பொருந்திய அறிவுதோன்றி க்ஷணநேரத்தில் மறைந்துபோமென்றாய் சொல்லும்பொருளும் நீ தேடிச்சொல்லுமுன்னே உணர்வுகெட்டால் அஞ்ஞானத்தைத்தருகின்ற உன்னால்சொல்வது எப்படிசொல் ஆகையினாலே தருமசாஸ்திர மென்பது உனக்கில்லை ஆத்துமாக்களுக்காக அநேகம் யோனிகள் தோறும் உன்கடவுள்போய்ப் பிறந்தானென்றாய் குற்றம்பொருந்திய ஒருவர்மயக்கத்தைத் தீர்க்கவந்தவர்களும் அதிகமயக்கத்தைக் கொண்டால் அந்தமயக்கம்போகுமோ அன்றியும் எங்கள்கடவுள் கொல்லநினையானென்று சொன்னாய் முன்னே அநேகயோனிகள் தோறும் பூமியின்மேல் பிறக்குங்காலத்தில் வெல்லுகின்ற புலிகளாயும் நரிகளாயும் பிறக்கும்போது வெவ்வியபசிவந்தால் அரசமரநீழலிலிருக்கும் உன்னுடையகடவுள் புல்லுந்தழையுந்தின்பானோ பொய்யாகிய வுன்னாகமத்தில் ஐந்து கந்தங்களுடனேகூடத் தேகமும் அழியுமென்றுசொன்னாய் அப்போதுன்கடவுளுக்கு உருவெங்கே அநேகயோனிகளில் ஆத்மாக்களுக்கு அருள்செய்யும்பொருட்டு ஒருவடிவங்கொண்டு வந்தானென்பதென்ன புத்தியில்லாதவனே காரணமாகிய ஆத்மாவோடே கூடுகின்ற காரியமாகிய வடிவில்லாதிருந்தால் உன்னுடைய சிறப்புப்பெற்ற தெய்வத்துக்கு வடிவில்லை நிறைந்த அறிவில்லாதவனே பஞ்சகந்தமுங் கெடுவது முத்தியென்று சொல்லும் பேறில்லாத உன்பிடகாகமத்தை யார்சொன்னார் இருபத்தொருவரென்றெண்ணப்பட்ட உன்னுடைய புத்தர்களெல்லாம் பிற

ப்பது சிறப்புப்பெற்ற தாயர்வயிற்றைப் பீறியென்று சொன்னாய் அன்புடனே சுமந்துபெற்ற தாய்மாருடைய உயிர் நாசத்தையடைய குற்றஞ்செய்துஅரியநரகத்திலே வீழ்வார்களோ தெய்வமாவார்கள் கரவினையுடைய நான்குபூதத்தையுடைய கலப்பிலே பேதமேயல்லாமல் தோன்றியவடிவுக்கு உயிரொன்று வேறில்லையென்பாய் நீசொல்லிய அபத்தசாஸ்திரத்தில் இராத்திரியிலே நித்திரைசெய்யும்போது உன்முகத்திலே ஏறிப்போகும் சர்ப்பத்தை இந்தப் பூதங்களறிந்ததோ அறிவில்லாதவரோ உருவும்உயிரும் ஒன்ருய்க்கூடும் அறிவு உனக்கில்லையென்ருய்இந்த உருவம் நீங்கினகாலத்தில் உயிரும் சீக்கிரத்தில் நீங்கிப்போகும் உருவமும் உயிரும் ஒன்ருய்க்கூடப் பிறக்குமானல் அதனல் உன்னுடைய உருவும் உயிரும் வேருகுமென்று உன்வாயாற்சொல்வாய் ஆகாசமில்லை அதனிடத்தே சத்தமுமில்லை அந்த ஆகாசம் இல்வழக்காமென்று சொன்னாய் உன்னாகமத்தில் பிருதுவி அப்பு தேயு வாயுநான்குபூதமும் இருப்பதற்கு இடம் ஆகாசமல்லவோ நீசொல்லப்பட்ட சொல்லினோசை ஆகாசத்தி லுண்டாகியதென்று சொல்லுவாய் இடமிருந்ததிசையென்றுசொல்வது இல்வழக்கென்று சொல்லுவாய் இப்படிச்சொல்லு நீயே நெடியவடதிசையிலே அரசமர மிருக்கின்றதென்று வணக்கஞ்செய்வாய் பூமியிலே அறிவிலாதவர்களும் பயித்தியங் கொண்டவர்களும் அபத்தம் பேசுகிறவர்களும் இருக்கின்றசபையிலே உன்சொல்லெல்லாம் பொருந்தும் மரங்கள் உயிரல்லவென்று சொல்வாய் நிலைபெற்ற பஞ்சபூதத்தினுலுண்டாகிய தேகத்தையுடையவர்கள்போல நல்லநீரை உன்கையினலே இலைகள் தளிர்த்துவளர்ந்திருக்கும்அஃதில்லாவிட்டால் சருகாகும் ஆகையினலே சென்ன பேதத்தில் கன்மங்களைப்புசிப்பிக்க எமதுகடவுள் உயிர்களுக்கு அமைத்தவடிவாகுமென்று சொல்வாய் ஒரு உயிரைக்கொல்வது பழுது பூமியிலேதானே செத்தமாமிசத்தைத்தின்பது நன்றென்றுசொல்லுவாய் உன்பொய்யாகமத்திலே தின்னென்று உனக்கு நல்லஉயிரைக்கொன்று மாமிசத்தைஉண்பித்து உன்பசியைத்தணிப்பார்க்குப் பாபமடைவது உனக்கு நல்லதோ காரணமிருக்க எப்போதுங் காரியங்கெடுவதே மோட்சமென்று வேதங்கள்பரவுகின்ற எங்களுடைய கோனாகிய சிவனுடைய ஆகமஞ்சொல்லப்பட்டவர்கள் சொல்லுவார்கள் போரால்வருந்தும் உயிருங்கூடக்கெடுவது முத்தியென்கிற பெரியவருத்தங்கொண்ட நீயே பிறிவையறியாமல்சொல்வாய் பஞ்சகந்தமும் அழிந்தால் முத்தியென்று சொன்னாய் பஞ்சகந்தமும் அழிந்தால் முத்திபெற்றவர் யாவரென்று வினவும்போதில் அழிந்த அஞ்சிலும் உண்டான அறிவென்றுசொன்னல் அப்போது பஞ்சகந்தமும் அழியவுமில்லை மோக்ஷமுமில்லையாமென்ருர்.

மிகுந்த கீர்த்தியானது மங்கியிருந்த புத்தனும்கோபித்து எங்களுக்குத் தெய்வமுமில்லை மோட்சமுமில்லையென்று சொன்னீர் உம்முடைய தெய்வமாவதெது நீங்களடையுமோக்ஷமெது என்றுகேட்கச் சிவஞானத்தையறிந்த சைவராகிய மாணிக்கவாசகர் அழகியகல்லாலி னீழலிலிருந்து தருமஞ்சொல்லுகின்ற வடிவைக்கண்டு அநேகம்பேர் தெரிசிக்க நிருத்தஞ்செய்வான் விபூதிதரித்த திருமேனியையுடையவன் உமாதேவியை ஒருபாகத்திலுடையவன் கிருபையையுடையவனான இப்படிப்பட்டகடவுளது பெருமைசொல்வதற்கு எளிதோ தில்லைமாநகரில் அழகிய பொன்னம்பலத்திலிருக்கின்ற சந்திரனையணிந்த எமது கடவுளானவர் ஒருமுடிவு உண்டானவரோ சொல்லுதற்கு என்றுசொன்னர் சொல்லுமளவில் பலபேச்சுகள்பேச முயலவேண்டுவ தில்லை நில்லும் நான்கேட்டதைச் சொல்லுமென்று நீசனாகியபுத்தன் முன்னே கல்லாலின்கீழிருந்து தருமஞ்சொன்னன் எங்களுடைய கடவுளென்று என்னெதிரேசொன்னீர் கையிலே நிலைபெற்றசெபமாலையைக்கொண்டிருப்பது வேருெரு நினைத்தற்கரிய நல்ல தெய்வமுண்டென்று நினைத்தோ வளம்பொருந்திய உலகத்தார் வணங்கும்படிக்குச் சிதம்பரத்திலே நிருத்தஞ்செய்வான் எமது கடவுளென்றுசொன்னீர் நினைந்துபோகப்பட்ட நல்லறிவையுடைய சிலர்பார்க்க ஆடுவதல்லது தமதிச்சையினலே ஆடுவாருமுண்டோ வென்ருன் உலகமெல்லாம்பிழைக்க அழகியபொன்னம்பலத்திலே நிருத்தஞ்செய்யும் எமது கடவுள் திருமேனியிலே விபூதிதரித்திருக்கின்ருனென்று மேன்மைகொண்டு சொன்னீர் சிவந்த பிரகாசந்தங்கிய திருமேனியிலே விபூதி பரிசுத்தமானதென்றே உமது கடவுள் தரித்தானென்ருல் உமாதேவியை ஒருபக்கத்திலே யுடையவனென்று பெருமைகொண்டு சொன்னீர் பாதிதேகம் பெண்வடிவாயிருப்பது பூமியிலேஉண்டோ அப்படிபாதிதேகம் பெண்ணுருவா யுமதுகடவுளிருந்தால் நீர் துறவிலிருக்குந் தவமென்ன என்ருன்.

இப்படியாக அந்தப்புத்தகுரு சொன்னதற்கு மாணிக்கவாசகர் இகழ்ந்து நகைசெய்து எமது கடவுளுடைய அடியார்கள் பெரிய வாழ்வைப்பெற வந்தவர்கள் நல்லவுபதேசமாகிய இதனை நல்ல

தவமொன்றில்லாத உன்னெதிரே சொல்வதல்லவென்று சொல்லி உயர்ந்த செபமாலிகையைக் கையிலே வைத்திருப்பது உலகத்தாரெல்லாம் இங்கேயுயர்ந்த தவங்கள் செய்தற்கென்று நினையாய் தாங்கப்பெற்ற ஆயுதத்தொழில்களைச் சார்புடனே பழக்குகின்ற பக்குவமுள்ள ஆசிரியருடைய கையிலே கொள்ளும் ஆயுதம்போலாகும் தவப்பயனைச் சம்பாதியாதவர்களைப்போல்ஊனக்கண்ணையுடையவராகிய உலகத்தார்காண எதிரே கூத்தாடுவானென்றாய் விறகிலேயிருக்குந் தீயைப்போலத் தேகத்திலே கலந்து உயிரையெல்லாம் ஆட்டுவிக்கும் நட்டுவன் எமதுகடவுளென்று எண்ணிக்கொள்ளுவாய் உம்முடையகடவுள் விபூதியையணிந்தது என்னவென்று கேட்டாய் அது ஆத்மாக்களுக்குத் துன்பத்தைத்தணிப்பதென் றெண்ணிக்கொள்வாய் பிறந்திருக்கின்ற தம்முடையபிள்ளைகள் அடைந்த நோயைநீக்கும்படி தாய்மார்சாப்பிட்ட மருந்தாகும் புல்லறிவைக்கொண்டு அநேகம் வீண்வார்த்தைகள் பேசுகின்றபுத்தனே நிற்பாய் அவனையல்லாமல்ஒருவர் நீற்றைத்தரிப்பதுண்டோ நல்ல திருநீற்றிலுள்ளசுகம் வேதஞ்சொல்லுவதல்லாமல் மற்றொருவராற் சொல்லுதற்கெளிதோ ஒருபாகத்திலே உமாதேவியைவைப்பது குற்றமென்றுசொன்னாய்உலகத்தாருக்குப்போகத்தைத் தரல்வேண்டுமென்று நினைத்து மேகத்தையொத்த கூந்தலையுடையபார்வதியை யொருபாகங்கொண்டிருந்தார் அல்லாமலும் உயிர்கட்கு யோகத்தைக்கொடுக்கும்பொருட்டு யோகவுருவங்கொண்டிருந்தார் குருடர்கையிலிருக்குந் தடியையல்லாமல் வேறொன்றுமறியாத விதம்போல் இந்தப்பேச்சுமாத்திரங் கற்றாயல்லாமல் வேறொன்று மறியமாட்டாய் வலிமைபெற்ற அழகியஇடபவாகனத்தையுடைய பரமசிவன் பூவிலிருக்கும் மணம்போல் ஆத்மாக்களிடத்தில் கலந்துநின்ற நிலைமையைப்பார்த்தாயில்லை கண்ணில்லாதவனே ஆதியாகியுஞ் சிவயோகியாயும் மிகுந்த போகியாகியும் அரூபியாகியும் சோதியாகியும் வெகுரூபியாகியும்இன்பக்கடலாகியும்இருக்கின்ற கடவுள் துன்பமில்லாத நீதிநிறைந்த பொற்சபையிலே நின்றநிலையையல்லாமல் எதுசிரசு எதுபாதம் யார் அவரையறிவார்கள் என்றுசொல்லி மாணிக்கவாசகர் மைந்தர்கள் மங்கையர்கள் ஆகியஇவர்கள் வாக்கிலிருக்கின்ற சரஸ்வதி நீயே பொய்வார்த்தைபேசுவ தென்னென்று ஆதியாகியகலைவாணியைக்கோபித்து நான்குவேதங்களையுஞ் சொல்லிய நீதானே இந்தப்பொய்யைச் சொல்லவேண்டியதென்ன சரஸ்வதி தக்கன்யாகத்தில் உன்மூக்கையறுத்ததை மறந்துவிடலாமா திரிநேத்திரத்தையுடைய பரமசிவனது அருளில்லையென்றுசொல்லும் மூடருடைய நாவைவிட்டு நீசிவனுடைய ஆக்கினைப்படி போவென்றுசொல்ல சரஸ்வதியும்பயந்து வஞ்சகருடைய நாவினின்றும் நீங்கினபின்பு அவர்களெல்லாம்விஷஞ்சாப்பிட்டவர்கள்போல் ஒடுங்கி நடுங்கி ஊமைகளானார்கள் ஈழதேசத்துராஜன்அதுகண்டு மனநொந்து சிவஞானநூல்களிற்குறைவில்லாதமாணிக்கவாசகர்பாதத்தைவணங்கிநின்று சுவாமி பேசத்தக்கவர்கள் ஊமையாயினார்கள் பேச்சில்லாத ஊமையாகிய என்புத்திரிக்கு ஊமைநீங்கி நல்லவார்த்தைபேசவந்தால் நானுமக்கு நல்லஅடியனாவேனென்று சொல்ல அதைக்கேட்ட மாணிக்கவாசகர் சீக்கிரத்திலழைத்துக்கொண்டுவாவென்றுசொல்ல அவளும் உண்மைபொருந்திய சபைக்குவந்தாள்.

சபையிலேவந்துநின்ற கன்னிகையை மாணிக்கவாசகர்பார்த்து கிருபாநோக்கஞ்செய்து பின்பு அழைத்து எதிரிலிருக்கவைத்து உள்ளம்நடுங்கிஅங்கிருந்தபுத்தன்சொல்லிய தர்க்கத்துக்கெல்லாம் குளிர்ந்தவாசனைபொருந்திய கூந்தலையுடையபெண்ணே நீ யுத்தரஞ் சொல்லென்றார். பத்தியை நன்றாயறியாத புத்தரானவர்சொல்லிய தர்க்கவார்த்தைக்கெல்லாம் படித்தறிந்தவர்கள்போல் இந்தப்பெண்ணானவள் உத்தரஞ்சொன்னாள்அதைமாணிக்கவாசகர்.

பூசுவதும்வெண்ணீறுபூண்பதுவும்பொங்கரவம்
பேசுவதும்திருவாயான்மறைபோலுங்காணேடி
பூசுவதும்பேசுவதும்பூண்பதுவுங்கொண்டென்னை
யீசனவனெவ்வுயிர்க்குமியல்பானான்சாழலோ.

அருந்தவருக்காலின்கீழறமுதலாநான்கினையு
மிருந்தவருக்கருளுமதுவெனக்கறியவியம்பேடி
யருந்தவருக்கறமுதனான் கன்றருளிச்செய்திலனேற்
றிருந்தவருக்குலகியற்கைதெரியாகாண்சாழலோ.

(சாழல்-ஓ, சூழல்—ஓ, விந்து–நாதம் - ஆக இயல்பானானென்பதை மகளிர்விளையாட்டென்ப.)

எனச்சிவனுடைய காருண்ணியத்தை.

விளையாட்டாக மகிழ்ச்சியினாலே அந்தப்பொருளையெடுத்துப் பாடலாகச்சொன்னார் ஈழராஜனும் அஞ்செழுத்துஞ்சொல்லிவிபூதிதரித்தபின்பு தாழநின்று அடிமைத்திறத்திலே தவறில்லாத அடியனாயினான் அதைக்கண்டசோழராஜனும் தில்லைமூவாயிரவரும் அம்பலம்வாழ்கவென்றுதுதித்து அழகியமாணிக்கவாசகரை ஏத்தினார்கள் தக்கதாகிய சிறப்புள்ள ஈழராஜனும் மாணிக்கவாசகரெதிரேநின்றுருத்திராக்ஷமணிந்து விபூதிதரித்து அடிமைத்திறமுடைய

வனுகவே துக்கத்தைத்தருகின்ற சிவந்த சீவரவஸ்திரத்தால் மூடும் உடம்பையுடைய புத்தர்மிகுந்த ஊமைத்தன்மை தங்களுக்கு நீங்கவேண்டுமென்று வணங்கினர்கள் சோழராஜனும் தில்லைமூவாயிரவரும் மற்றவரும்வணங்கி எமதுகடவுளே இந்தப்படி யருள்செய்வாயென்று சொல்ல மாணிக்கவாசகர் மகிழ்ந்து கிருபாநோக்கஞ்செய்ய உடனே அவர்களெல்லாம் ஊமைத்தன்மைநீங்கி நமஸ்கரித்து களங்கரகிதமான மனமுள்ள பெரியவரே-முன்பிறப்பிலேநிலை பெற்ற தீவினையைச் செய்தபடியால் குற்றமற்ற விபூதிதரித்து நல்லபஞ்சாட்சரத்தை உச்சரியாமலிருந்தோம் பூசுவதாகியதிருநீறுந் தரிக்கப்பட்ட உருத்திராட்சமும் காவிவஸ்திரமும்ஆகிய இவைகளெல்லாங்கொடுப்பீர் இந்தச்சிவப்புவஸ்திரத்தைச்சுடுவீர்என்று வணங்கினர்கள்.

அழுக்காறில்லாத மனமுள்ள மாணிக்கவாசகர் புன்சிரிப்புடைய முகத்தினராய்ப் பூர்வசன்மத்தி லிவர்கள் தவஞ்செய்தவர்களென்று மனதிலே நினைத்துக் கெடுதல் செய்யாத விபூதிதரித்துப் பிரகாசங்கொண்ட ருத்திராட்சமும் அணிவித்து அவர்களுடைய சீவரமாகிய வஸ்திரங்களைக் காந்தியையுடைய நெருப்புக்கு இரையாக்கினர். பின்புஇழிவானவேடங்கள்நீங்கி விபூதியைத்தரித்த புத்தர்களும் இராஜாவும் பழமையாயுள்ள திருவாதவூரராகியமாணிக்கவாசகர் இரண்டுபாதங்களையும்வணங்கி நன்மையாகிய அழகிய திருச்சிற்றம்பலத்தைவணங்கிநயப்புடனே நெஞ்சிலேயிருக்கும் வஞ்சகம்நீங்கிச் சிதம்பரமே தங்களுக்கு நிலைபெற்றபதியாகவிருந்தார்கள். மற்றவர்கள் தங்கள்தங்கள் பதிக்குப்போய்ச்சேர்ந்தார்கள் மாணிக்கவாசகசுவாமிகள்திருப்புலீச்சுரத்தையடைந்து.

பூவார்சென்னிமன்னனெம்புயங்கப்பெருமான்சிறியோமை, யோவாதுள்ளங்கலந்துணர்வாயுருக்கும் வெள்ளக்கருணையினு,லாவாவென்னப்பட்டன்பாயாட்பட்டீர்வந்தொருப்படுமின்,போவோங்காலம்வந்ததுகாண்பொய்விட்டுடையான்கழல்புகவே.

புரள்வார் தொழுவார் புகழ்வாராயின்றே வந்தாளாகாதீர்,மருள்வீர்பின்னைமதிப்பாரார்மதியுட்கலங்கிமயங்குவீர், தெருள்வீராகிலிதுசெய்மின்சிவலோகக்கோன்றிருப்புயங்க, னருளார்பெறுவா ரகலிடத்தேயந்தோவந்தோவந்தோவே.

(யாத்திரை-செய்கை.)

என அனுபவாதீதமுரைத்து.

ஞானவாளேந்துமையர்நாதப்பறையறைமின்
மானமாவேறுமையர்மதிவெண்குடைகவிமின்
ஞனநீற்றுக்கவசமடையப்புகுமின்கள்
வானவூர்கொள்வோநாமாயப்படைவாராமே.
தொண்டர்காடுசிசெல்லீர்பத்தர்காள்சூழப்போகி
றொண்டிறல்யோகிகளேபேரணியுந்தீர்க
டிண்டிறற்சித்தர்களேகடைக்கூழைசென்மின்க
ளண்டர்நாடாள்வோநாமல்லற்படைவாராமே.

(படையெழுச்சி - வாள் பறை குடைமுதலிய படைகளின் எழுகை,)

எனப்பிரபஞ்சப்போர்கூறி.

கண்களிரண்டு மவன்கழல்கண்டு களிப்பனவாகாதே, காரிகையார்கடம்வாழ்விலென்வாழ்வுகடைப்படுமாகாதே, மண்களில்வந்துபிறந்திடுமாறுமறந்திடுமாகாதே,மாலறியாமலர்ப்பாதமிரண்டும்வணங்குதுமாகாதே, பண்களிகூர்தருபாடலொடாடல்பயின்றிடுமாகாதே, பாண்டிநன்னடுடையான்படையாட்சிகள்பாடுதுமாகாதே, விண்களிகூர்வதோர்வேதகம்வந்துவெளிப்படுமாகாதே, மீன்வலைவீசியகானவன்வந்துவெளிப்படுமாயிடிலே.

சங்குதிரண்டுமுரன்றெழுமோசைதழைப்பனவாகாதே, சாதிவிடாதகுணங்கணம்மோடுசலித்திடுமாகாதே, யங்கிதுநன்றிதுநன்றெனுமாயையடங்கிடுமாகாதே,யாசையெலாமடியாரடியோமெனுமத்தனையாகாதே, செங்கயலொண்கண்மடந்தையர்சிந்தைதிளைப்பனவாகாதே,சிவடியார்கள்சிவானுபவங்கடெரிந்திடுமாகாதே, யெங்குநிறைந்தமுதூறு பரஞ்சுடரெய்துவதாகாதே,யீறறியாமறையோனெனையாளவெழுந்தருளப்பெறிலே.

(படையாட்சி-மீன்வலைவீசிய கானவன்வந்துவெளிப்பட்டாளுகை.)

எனச் சீவவுபாதியொழிந்து.

முத்திநெறியறியாதமூர்க்கரொடுமுயல்வேனைப்
பத்திநெறியறிவித்துப்பழவினைகள்பாறும்வண்ணஞ்
சித்தமலமறுவித்துச்சிவமாக்கியெனையாண்ட
வத்தனெனக்கருளியவாறார்பெறுவாரச்சோவே.
செம்மைநலமறியாதசிதடரொடுந்திரிவேனை
மும்மைமலமறுவித்துமுதலாயமுதல்வன்று
னம்மையுமோர்பொருளாக்கிநாய்சிவிகையேற்றுவித்த
வம்மையெனக்கருளியவாறார்பெறுவாரச்சோவே.

திருச்சிற்றம்பலம்.

(அச்சோ - ஐயோவெனும் அதிசயக்குறிப்பு.)

என அனுபவவழி அறியாமையாய் அங்குவசித்திருந்தார்.

அப்படிமாணிக்கவாசகர்அந்தச்சிதம்பரத்தில்வசிக்கின்றநாளிலே பொற்சபையில் நிருத்தஞ்செய்கின்ற சபாபதியானவர் தமதுகிருபையினலே பிராமணவடிவங்கொண்டு பரிசுத்தமாகிய முப்புரிநூலணி

ந்தமார்பும் விளங்குகின்ற புத்தகமும்தெரிய சிவந்த திருவடிகளும்நோவ எழுந்தருளி எதிராக நின்முர். எதிரேவந்துநின்ற வேதப்பிராமணரைப்பார்த்துஇன் பம்பொருந்த மாணிக்கவாசகர் இருமென்று சொல்ல அவரிருந்தபின்பு பெருமையையுடைய வேதத்தில்மிகுந்தவரே நீரெங்கேயிருக்கிறது சொல்லுமென்றுகேட்க விலைபெற்ற பெரியவளத்தை யுடைய பாண்டிதேசத்திலே நாமிருக்கிறதென்முர். பாண்டிய தேசமென்றுசொன்னபின்பு அன்புடனே உபசரித்து இங்கே நீர்வருதற்குக்காரணஞ்சொல்லுமென்ன கடவுளது ஆக்கினையாகிய காரியம் உம்மைக்காணு வதேயென்றுசொல்லி பூமியைப்பிளந்தும் ஆகாயத்திற்பறந்தும் முன்னே மகாவிஷ்ணுவும்பிரமதேவனும்தேடிக்காணுதற்கரியகடவுளாகியும்சிற்சபையிலே நிருத்தஞ்செய்பவருமாகிய பரமசிவனைக்குதிரையேறச்செய்த உம்முடையபெருமையினலேபாண்டிநாடெல்லாம் வாழ்ந்தது அழகியதிருப்பெருந்துறையிலெழுந்தருளியிருக்கின்ற கடவுளுடையதிருவடியை வணங்கித் துன்பமொன்றுமில்லாமல் தடாகஞ்சூழ்ந்த திருக்கழுக்குன்றத்துக்குப்போய்ப் பின்பு சிதம் பரத்திற்குவந்து புத்தரை வாதில்வென்றீர் என்பது கேள்விப்பட்டு யாவரும் மகிழ்ச்சியடைந்தார்.

ஆதியாகியும் சிற்சபையிலே ஆடுகின்றஐயனுகியும் இருக்கின்ற கடவுளைப் பத்தியினலே நீர்சொல்லிய தமிழ்ப்பாடல் முழுவதும் ஓதுதற்கு நினைத்துத் துன்பம்நீங்க இங்கேவந்தேன் அது எழுதல் வேண்டும் பிராமணரில் உத்தமரே விளக்கமாகஇன்றுசொல்லவேண்டுமென்முர். அதைக்கேட்டு மனத்திலே மிகுந்த அன்பையுடையவராய் ஜடாமுடியையுடைய பரமசிவனை எண்ணுதற்கரிய தமிழ்ப்பாடலாற்சொல்லிய மாணிக்கவாசகர் அப்போது அகமலர்ந்து உண்மைஞானத்தைத்தருகின்ற திருவாசகத்தை மகிழ்ச்சியுடனேசொன்னர். அவர்சொல்லிய பாடலெல்லாம் சிற்சபையிலாடுஞ் சபாபதியானவர் தம்முடைய திருக்கரத்தில் ஏட்டைப்பிடித்துக்கொண்டு தெளிவாக இக்காலத்தேவழங்குமுறையாக எழுதியபின்பு மிகுந்தஅருளையுடைய உமாதேவிபாகராகிய சபாநாயகரைப் பாட்டுடைத்தலைவனகவுடைய ஒருகோவை பாடல்வேண்டுமென்முர். நிலைபெற்றதவத்திலேமிகுந்த மாணிக்கவாசகர் அதற்கு மனமகிழ்ந்து.

திருவளர்தாமரைசீர்வளர்காவிகளீசர்தில்லைக், குருவளர்பூங்குமிழ் கோங்குபைங்காந்தள்கொண்டோங்குதெய்வ, மருவளர்மாலையொர்வல்லியினெல்கிய னநடைவாய்ந், துருவளர்காமன்றன்வென்றிக்கொடி போன்ருெளிர்கின்றதே.

* * * * * *

காரணிகற்பகங்கற்றவர்நற்றுணைபாணரொக்கல்
சீரணிசிந்தாமணியணிதில்லைச்சிவனடிக்குத்
தாரணிகொன்றையன்றக்கோர்தஞ்சங்கநிதிவிதிசே
ருருணியுற்றவர்க்கூரன்மற்றியாவர்க்குமூதியமே.

என நானூறுகோவையும் ஞானத்தாழிசையும் சொல்ல.

பொன்போலும் பிரகாசிக்கின்ற சடையையுடையவர் எதிரேயிருந்து திருக்கோவையாரெழுதி முடிந்தபின்பு தம்முடைய புத்தகத்தைக்கட்டிக்கொண்டு மின்னலைப்போல் மறைந்தார் அதுகண்டு மாணிக்க வாசகர் வருத்தங்கொண்டு எழுந்தார் எங்கும் ஓடித்தேடிப்பார்த்தார் இஃதென்ன ஆச்சரியமென்றுமனமகிழ்ந்தார் சிதம்பரத்திலே நிருத்தஞ் செய்கின்ற சபாபதியென்றறிந்து பின்பு கண்ணினலே ஆனந்த பாஷ்பம்பொழிந்தார்எங்கேபோயினுயென்று பூமியிலேவிழுந்தார் பரமானந்தசமுத்திரத்திலே அழுந்தினர்.

உயர்ந்ததமிழினிடத்திலேஅன்புமிகுந்துசபாநாயகர் புத்தகத்தையெடுத்துக்கொண்டுதமதுசபைக்கு எழுந்தருளி தேவர்களையும் மகாவிஷ்ணுவையும் பிரமதேவனையும்பார்த்து நமக்கடிமைசெய்து நயப்பினைப்பெற்ற மாணிக்கவாசகன்சொன்ன இந்த நல்லபாடல்களைக் கேளுங்களென்று அவர்களுக்கனுக்கிரகஞ்செய்து மெய்மையுள்ளதவத்தையுடைய மாணிக்கவாசகர்சொல்ல எழுதப்பட்ட இந்தத்திருவாசகம் கநகசபையிலேநிருத்தஞ்செய்கின்ற அழகிய திருச்சிற்றம்பலமுடையார் திருவெழுத்தாமென்று மோக்ஷத்தைத்தருகின்ற திருக்கோவையார் முடிந்தவிடத்திலே எழுதிப் பின்புஅழகியமலரையொத்த கையினலே மைக்காப்புஞ்செய்து வெள்ளியமூன்றும்பிறையைத்தரித்த ஜடாபாரத்தையுடையசபாநாயகர் உலகத்துக்கெல்லாம் சிநேகமுடைய மாணிக்கவாசகரது நல்லதவத்தையெல்லார்க்கும்அறிவிக்கநினைத்து எண்ணப்பெற்ற முநிவர்கள் தேவர்கள் வணங்குஞ் சபைவாசற்படியிலே திருவாசகமாகிய திருமுறையைவைத்தார் படியிலே வைத்தபின்பு பூசைசெய்யும் ஒருபிராமணன் பார்த்து இப்புத்தகம் இங்கேயிருக்கும் புதுமை தெய்வீகமாமென்று மநமுருகிநின்று தில்லைமாநகரத்தார்க்கு இதனைச் சொல்லவேண்டுமென்று சபையை விட்டுப்போய் பழமையாகிய சிதம்பரத்திலுள்ளவர்களிடத்து ஒருபுத்தகம் சபையின்படியிலே இருக்கின்றதென்றுசொல்ல பின்பு இது அதிசயமாமென்று ஓடிவந்து படியி

ன்மேல் சபாநாயகர்வைத்த புத்தகத்தை எல்லாருங் கண்டு எல்லாருந் தங்களுக்குள்ளே பார்த்து எமது கடவுளிருக்கின்ற சபையிலே தேவர்களும் அறிதற் குக்கூடாத தெய்வீகமிதுவென்று நினைத்துப் பொருந்துகின்ற அன்பினலே கடவுள்சொல்லிய சிவாகமமோ தமிழ்நூலோ வென்று பார்ப்பது தகுதியாமென்றார்கள்.

அருளும் அன்பும் நிறைந்த தில்லைமூவாயிரவர்கள் எல்லாருஞ்சொல்லுகின்ற வாக்கில்வல்லவராகிய ஒருவர்போய் மலரைக்கொண்டு அருச்சித்து நமஸ்கரித்துப் பரமசிவன்வைத்தபுத்தகத்தைஅவிழ்த்து ஏட்டைநீக்கிப்படித்தார் நீதியைக்கொண்டஅகவல்நான்கும் திருச்சதகம்முதலாகச் சிறக்கப்பெற்ற தமிழ்ப்பாடல் அறுநூறும் விரித்துச்சொல்லப்பட்ட அகப்பொருட்கோவை நானூறுபாடலும் விளங்கப்படித்தார்கள் பின்பு அதுமுடிந்தவிடத்திலே இதுமாணிக்கவாசகர்சொல்ல அழகிய திருச்சிற்றம்பலமுடையார் கையெழுத்தென்றுபடித்தார்கள். இந்தத்திருமுறையைப்படிக்கக் கேட்டவர்களெல்லாம் மெய்ப்புளகமும் குறுவேர்வு கொள்ளுதலும் ஆநந்தபாஷ்பமும் கசிந்துருகுமநமும் கொண்டவராய் மெய்த்தவத்தையுடைய மாணிக்கவாசகர் சொல்லிய இந்தத்தமிழல்லாமல் மோக்ஷவழிக்குச் சிவநூல் வேறுண்டோவென்றுசொல்லி இதன்பொருளாகிய தேனை இன்றறிவோமென்றுகருதி சபையைவிட்டுப் போய் தில்லைமூவாயிரவர் மாணிக்கவாசகர்முன்னே போய் அவரெதிரே திருமுறையைவைத்துத் தேவர்பிரானுகிய கடவுள் இன்றுசெய்தகாரியம் இதுவென்று சொன்னார்கள் மாணிக்கவாசகர் அதுகண்டு எல்லாரும் அற்பமாகியஎன்பாடலைமனமகிழ்ந்துகொண்டருளப் பூமியிலே அன்றுசெய்த என்தவத்தை அறியமாட்டேன் என்றுபுலம்பினர். மாணிக்கவாசகர் இங்கே இப்படி புலம்பியழுதபின்பு சிதம்பரத்திலிருக்கின்ற அளவற்ற அன்பையுடையவர்கள்இதத்துடனே அஞ்சலியஸ்தராய் பண்ணையுடைய ஞானப்பாடலைக்கொள்ளும்படி உம்மிடத்திலே கடவுள்வந்து செய்தகாரியமென்ன சொல்லுமென்று கேட்டார்கள் துன்பமென்னும் பிறப்பில்லாத மாணிக்கவாசகர் சபாநாயகர்செய்த செய்கையெல்லாஞ்சொன்னபின்பு தில்லைமூவாயிரவர்வணங்கி மநமகிழ்ச்சிகொண்டு எமதுகடவுளைச்சொல்லிய இத்தமிழ்ப்பிரபந்தத்திற்கு அருமையாகிய நல்லபொருள்சொல்லவேண்டுமென்று கேட்க மாணிக்கவாசகர் சிவஞாநநிறைந்த மனத்துடனே களிப்பையடைந்து அழகிய கனகசபையெதிரேபோய் இதற்குப்பொருள்சொல்வேனென்றுபோக அவர் முன்னேபோனவர்கள் அன்புடனே அவர்பின்னேபோனர்கள் தில்லைமூவாயிரவர் அன்புடனே புடைசூழ்ந்துவர மாணிக்கவாசகர் கனகசபையையடைந்து பொருந்திய இத்தமிழ்ப்பிரபந்தத்திற்குப் பொருள் இவர்தாமென்று சபாநாயகரைக்காட்டிச் சபையிலே தில்லைமூவாயிரவர்களகாணச் சீக்கிரத்திற்போய்மறைந்தார் அதைக்கண்ட தில்லைமாநகரிலுள்ளார் சபாபதியை மாணிக்கவாசகர் அடைந்தவிதத்தைக்கண்டு தேகம்புளகமடைந்து நடுக்கமுற்றுத் துதித்து மனமுருகிக் கண்ணீர்பொழிந்து திருமேனியெல்லாம் வேர்த்தார்கள் மனமகிழ்ந்தார்கள் சிவந்தகைகளைச் சிரசின்மேல்கூப்பிக்கொண்டார்கள் பூதங்களெல்லா நிருத்தஞ்செய்தன கணநாதர்கள் புகழ்ந்தனர் தும்புருநாரதர் இசைபாடினர்கள் வேதங்களும் அந்தரதுந்துமிகளும் ஆகாசத்தில்முழங்கி எழுந்தன முனிவரும் இந்திரரும் பஞ்சதருவினுடைய மலரைத்தூவி வணங்கினர்கள்.

மண்சுமந்தபடலம் - முற்றுப்பெற்றது.

அறுபத்திரண்டாவது

## பாண்டியன்சுரந்திர்த்தபடலம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

வானலமுதமதிமுடிமேன்மதுரைப்பெருமான்மண்சுமந்து
தேனலமுதவாசகனைக்கதியில்விடுத்ததிறமிதுமேற்
பானன்மணிவாய்க்கவுணியனைவிடுத்துச்சமணர்படிற்றெழுகுங்
கூனல்வழுதிசுரந்தணித்தாட்கொண்டகொள்கைகூறுவாம்.

அன்னதொருகாரணத்தாற்சவுந்தரியபாண்டியனென்றுகியன்ன
தென்னவர்கோன்கவுணியர்கோன்றிருநோக்காற்பரிசத்தாற்றெருட்டும்வாக்காற்
பொன்னடிதாழ்ந்தைந்தெழுத்துமுபதேசப்பேறடைந்துபொலிவால்வஞ்சந்
துன்னமணர்நெறியிகழ்ந்துதொல்வேதநெறியடைந்துதூயனானான்.

புஜபலபராக்கிரமனான சுகநாதபாண்டியன்மகன் வீரவாகு அவன்மகன் விக்கிரமவாகு அவன்மகன்பராக்கிரமவாகு அவன்மகன் சுரதபாண்டியன் அவன்மகன் வாகுலபாண்டியன் அவன்மகன் குங்குமபாண்டியன் அவன்மகன் கருப்புரபாண்டியன் அவன்மகன் காருணியபாண்டியன் அவன்மகன் புருஷோத்தமபாண்டியன் அவன்மகன் சத்துருசாதனபாண்டியன் அவன்மகன் கூன்பாண்டியன் இந்தப்பாண்டியன் புஜபலத்தாலுங் கீர்த்தியாலு மிகுந்தவன் ஆகையாலே தனதுதோள்வலியினாலே சேரனையும் சோழனையும் எதிர்த்து முதுகிடச்செய்து தன் ஒருகுடைநிழலின்கீழே மூன்றுலோகமும் ஒதுங்க அரசாண்டு செங்கோல்செலுத்தி இப்படிவீரலட்சுமிகொண்டாட வெற்றிமாலையணிந்த வேலையுடைய இந்தக் கூன்பாண்டியன் அரசாளுங்காலத்தில் பனைமாலையணிந்த சேரனானவன் ஆகாயத்தையளாவுகின்ற கையையுடையயானைகளும் அநேகதிரவியங்களும் அநேகரத்தினங்களும் தோழிகளும்வரிசையாகத் தன்மகளுக்குக்கூடக் கலியாணஞ்செய்து பாண்டியனுக்குக் கொடுத்து அவன்காலிலேவிழுந்து நல்லதனஞ்சொல்லித் தன்னுடையதாய்ப் பாண்டியன்வசமாயிருக்கிற நாட்டைமுன்போல் தனக்குச் சொந்தமாகப்பெற்றுக்கொண்டுபோனான் பின்புசோழனும், தான்பெற்றபெண்ணாகிய சைவமணிவிளக்குப்போலும் மங்கையர்க்கரசியாரைப் பாண்டியனுக்குக் கலியாணஞ்செய்து கொடுத்துத் தன்னுடையநாட்டையும் பெற்றுக்கொண்டு பின்பு கூன்பாண்டியனுக்குப் பாரியானமங்கையர்க்கரசியாருக்கு அளவற்றதிரவியங்களும் பொன்வஸ்திரங்களும் ரத்தினங்களும் தோழிக்கூட்டங்களும் இன்னம் இன்னம் வேண்டுமவைகளும் பாண்டியன்மனமகிழக்கொடுத்து குற்றமற்ற நற்குணங்களாலேசிறந்த குலச்சிறையென்கிறமந்திரியையுங்கூட அனுப்பிவிட்டான் பின்பு கூன்பாண்டியன் அவன்கொடுத்த வரிசைகளுடனே செந்தாமரைக்கோயின் மங்கையைக்கலியாணஞ்செய்துகொண்டுவருகிறவன்போல் மதுரைவந்து சேர்ந்து லட்சுமிவிளங்குமார்பனாய் சோழன்மகளுடனேவந்த மந்திரியானகுலச்சிறைநாயனாரை குணமும் சிறந்தகேள்வியும் மதிநுட்பமும் மேதகவும் ஆராய்ந்துபார்த்து தனக்குநன்மையிற்சிறந்த மந்திரியாகவே கொண்டு உலகாண்டுவருங்காலத்தில் முன்செய்தபலமான தீவினைப்பயனாக உடம்பிலே கூன்கொண்டாற் போலவே கொல்லாதவிரதிகளாய் வஞ்சங்கொண்டு அலைந்து சூழ்ந்தபாசத்தை வெல்லுஞ்செய்கை தெரியாமல் நிருவாணிவேடங்கொண்டவர்கள் சொற்குள் அகப்பட்டு நல்வினைப்பயனைப்பெறாமல் கூன்பாண்டியன் நான்குவேதங்களிலுஞ்சொன்ன நல்வழியைவிட்டு சமணர் புன்சமையமாகிய வழியைப்பற்றினவனாகவே பாண்டிநாடெல்லாம் சமண்மதமாகிய அஞ்ஞானக் கடலிலேமுழுகி பூதிசாதனநெறியாகிய சைவசமயமும் முத்திச்செல்வமானநெறியுங் குறைவாகவேதநீதிமறைந்துபோயிற்று பறிக்கப்படுகிறதலையும் பாயாகியஉடையும் உறிகட்டுக்கொள்ளும்பாத்திரமும் அத்திநாத்தியென்றுசொல்லுநாவும்புத்திகெட்டமனம்போலவே கயிறில்லாத வெறுமையான அரையுங்கொண்டு நிலைகெடுவதான பசாசுகள் சூழ்ந்தாற்போல எங்கும் சமணர்கூட்டங்களாகவே நிலைகொள்வதாயின அக்காலத்தில் அந்தக் கூன்பாண்டியனுக்கு நன்மையைச்செய்யும்மருந்திலும் சிறந்தகற்பினையுடையமங்கையர்க்கரசியாரும் பெருந்தகையமைச்சரான குலச்சிறைநாயனாரும் அனுஷ்டானகாலத்தில் விபூதியைக்குழைத்துப்பூசுகிறதே யல்லது மற்றைக்காலங்களில் பாண்டியன் தெரியவிபூதிபூசிக்கொள்ளாமல் சிவனடிச்சார்பிலேநிற்க அப்படிபொய்ந்நூலை மெய்ந்நூலாகப்பண்ணுகின்ற புல்லறிவாளரான சமணராகியகளையைத்தோண்டி மெய்ந்நூலாகிய வேதநீதியானபயிர் தலையெடுத்து வளரச்செய்யவல்லவர் யாரென்று மனத்திலேகவலைகொண்டு வருந்துகின்றவரான அவ்விருவரும் கூடற்கடவுளைவணங்க வேண்டிப்போய்நின்று தெரியாமல்மயங்கினமுனிவர்களுக்கு அக்காலத்திலே வேதப்பொருளைவிளங்கச்சொன்ன ஓ வேதப்பொருளே இந்தச்சமணர்மதமாகிய வலைக்குள் அகப்பட்டு மெய்ஞ்ஞானவழியைவிட்டு நீங்கின பாண்டியன் புத்தியைத்திருப்பி இந்தவேளையில் உம்முடையதிருவடிகளுக்கேஎப்போதும் அடிமையாகக்கொள்ள வேணுமென்று பாதம் வணங்கும்போது ஒருவேதியன் உருத்திராக்ஷமுந்தரித்து விபூதியும்பூசின் தேகத்தையுடையவனாய் புண்டரீகபுரத்திலிருந்துவந்து கூடற்கடவுளை வணங்குதற்குவர அவனை மங்கையர்க்கரசியாரும் குலச்சிறைநாயனாரும் கண்டு ஓய் வைதிகரே நீர்எங்கேயிருந்து இங்கேவந்தீரென்றுகேட்க அந்தவேதியன்சோழநாட்டிலிருந்துவந்தேனென்றான் அதுகேட்ட அவ்விருவரும் அந்தச்சோழநாட்டிலே என்ன புதுமையுண்டு அதைச்சொல்லுமென்ன அதற்குஅந்தச்சைவப்பிராமணன் புதுமையுண்டுகேளுங்கள் ஏழிசைமறைவலாளராகிச் சீகாழியிலே சிவபாதவிதையரென்றொருவருண்டு அவர் சீகாழிக்கடவுளைவேண்டிச் சமணராகிய இருளைப்போக்குஞ் சூரியன்போல எனக்கொருபிள்ளை அருளவேணுமென்று தியானித்துத் தவஞ்செய்தனர் அப்படித்தவஞ்செய்த சிவபாதவிதையரிடத்தில்சிவனருளாலே இந்தவுலகங்களை

ல்லாந் தெளிவுபெற இளஞ்சூரியன்போலும் ஒருபி
ள்ளைபிறந்தது அந்தப்பிள்ளைவளர்ந்து மூன்றுவரு
ஷமாகுங்காலத்தில் ஊழிகாலத்துக்கடலிலேமிதந்த
தோணிபுரத்துக்கடவுள் தேவியுடனே விடைமே
லெழுந்தருளிக் காட்சிகொடுத்தும் அந்தத்தேவிதா
னேதனதுதிருமுலைப்பாலுடனேஞானமுந்திரட்டிக்
கலந்து செம்பொன்மணிக்கிண்ணத்தையேந்திக்கொ
ண்டுவந்துகொடுக்க அந்தப்பாலன் வாங்கிக்குடித்து
அளவிறந்தவேதங்கள் ஆகமங்கள் இவற்றைச்சார்ந்த
கலைஞானங்களெல்லாம் ஓதாமலுணர்ந்துஞானமுந்
தோன்றலாயிற்று ஆதலால் நமதுபந்தத்தைப்போக்
குமவனாகிய ஞானநாயகன்ஞானத்தோடு சம்பந்தஞ்
செய்து ஞானசம்பந்தனாகிநாவிலேமெய்ஞ்ஞானவா
ணியும் குதிகொண்டுநிற்க அழகுதொடர்ந்த வேதங்
களையெல்லாம் தமிழாலேபாடத்தொடங்கி கரும்பி
லே சக்கையைப்போக்கி அதன்சாற்றைக்காய்ச்சின
கற்கண்டுபோல அளவில்லாத வேதங்களிலேசிறந்த
பொருள்களையெல்லாம் நன்றாகத் தெளிவுசெய்து
கொன்றைமாலையணிந்த கடவுள் தலங்களெல்லாம்
சென்றுசென்றுஎல்லாரும்விரும்பத்தக்கதென்மொ
ழியிலே சிவமணங்கமழ்ந்த தமிழ்மாலைதொடுத்துச்
சாத்தி பருத்தமுத்துமாலையணிந்த கொங்கைகளையு
டைய பார்வதிசமேதனுடைய திருவருளினாலே பசு
ம்பொன்னாலே தாளமும் முத்துப்பல்லக்கும் முத்
துக்காளமும் முத்துப்பந்தலும் ஆகிய இவைகளெ
ல்லாம் தக்கபடியேபெற்றும்பாலைநிலத்தை நெய்தநி
லமாகச்செய்து அலைகளாலே முத்துகளை வீசுகி
ன்ற நதிசூழ்ந்த திருவீழியிலே பொன்னாலானபடிக்
காசுபெற்றும் வேதங்களாலேபூசிக்கலானதிருமறை
க்காட்டுக்கோயிற் கதவை அடைக்கப்பாடியும் இன்
னும்சிவஸ்தலங்களெல்லாம்போய்ப்போய்ப் பதிகங்
கள்பாடியும்வருகின்ற அந்தத்திருஞானசம்பந்தர்இ
னிஉங்கள்நாட்டுக்கும் பதிகங்கள்பாடவருவரென்று
அந்தத் தெய்வப்பிராமணன் சொன்னவுடனே கற்ப
லர் கொடிபோன்ற மங்கையர்க்கரசியாரும் பாண்டி
யனுக்குக்கண்போன்றகுலச்சிறைநாயனாரும்இருளு
க்கொப்பான சமணராகிய பேய்களையோட்டி அன்
றே தங்கள் அரசன்மேனியிலே அழகாக விபூதிபூச
க்கண்டு பூதிசாதனத்திலே அடைவதான சிற்பரவீட்
டைக்கண்ட மகிழ்ச்சியிலே முழுகினவராய் தங்கள்
பெயரைக்கண்டெழுதி அந்தத் திருஞானசம்பந்தரு
க்குச்சொல்லுதற்காக அந்தப்பிராமணன் கையிலே
ஓலைவிண்ணப்பம் கொடுத்தனுப்பிவிட்டு அவ்விருவ
ரும் மீனாக்ஷிசுந்தரேசரை வணங்கிக்கொண்டுதங்கள்
வீட்டுக்குப்போயினார்கள். பின்பு அந்த வைதிகப்பி
ராமணன் விரைவிலேபோய்த் திருஞானசம்பந்தமூ
ர்த்திகளைக்கண்டு தலைகளெல்லாம் பறியுண்டுபுன்று
கத்திரிகின்ற வஞ்சகராகிய சமணருக்குடன்படாம
லிருக்கிற மங்கையர்க்கரசியாரும் குலச்சிறைநாயனா
ரும் கொடுத்த ஓலைவிண்ணப்பத்தைக்காட்டி அதிலு
ள்ளசெய்தியைவாசித்தான் அதாவது வெங்குருவே
ந்தராகிய திருஞானசம்பந்தமூர்த்திகளுடைய திரு
வடிகளைவணங்கி அடியேன் குலச்சிறைசொல்லிக்
கொள்ளும் விண்ணப்பம் தேவரீர் இங்கேயெழுந்த
ருளி சமணராகிய இருளை ஒதுக்கி எங்களரசனுக்கு
விபூதிகொடுத்து தமிழ்நாட்டையெல்லாம் பூதிசாத
னவழியே நிறுத்தி எங்களை ரக்ஷிக்கவேணுமென்றெ
ழுதியிருக்க அந்தப் பாசுரங்களைக்கேட்டு கவுணியர்
குலத்தலைவரான திருஞானசம்பந்தரெழுந்தருள அ
ப்போதங்கேகூடவிருக்கிற திருநாவுக்கரசர் ஆ இது
தகாது நீரோ மிகவுஞ்சிறியவர் அவர்களோ பழிபா
வங்களுக்கஞ்சாதவர்கள் நான் பலகாலமும் அவர்க
ளோடுபழகினவன்எனக்கு அவர்கள்செய்தவேதனை
களை அளந்துசொல்லிமுடியாதுஉமக்கு இப்போது
கிரகங்கள் பலப்படவில்லை நீர்போவதைவிடுகவென்
ன அதற்குத் திருஞானசம்பந்தர் எந்தையெம்பெரு
மானுடைய திருவருளைப்பெறாதவர்போல நீர் இப்
படிச்சொல்வதென்னகாரணம் அந்தச் சமணர்கள்
பண்ணினமகாவேதனையில்வெந்து பிழைத்தவர் நீர்
நாள்கோள் விலங்கு புள் அவுணர்பேய்பூதம் ஆகி
ய இவைகளெல்லாம் அம்மையோடப்பனான கடவு
ள் ஏவலின்படியே நடப்பவைகள் அந்தஅம்மையும்
அப்பனும் நம்முடைய மனமே கோயிலாகக்கொண்
டிருக்கிறதினாலே அவைகள் நமக்குயாதொருதீங்கு
ம் செய்யமாட்டாவென்றெழுந்தருளினார். பெரிய
முரசங்களொலிக்கவும் சங்கு காகளங்களூதவும் சா
மரங்கள் வீசவும் முத்துப்பந்தலின்கீழே முத்துப்ப
ல்லக்கின்மேற்கொண்டு சமணராகிய இருளைப்போ
க்குகின்ற சூரியன்போல வழிக்கொண்டு வழியிலுள்
ள சிவஸ்தலங்களெல்லாம்போய்ச்சேவித்துப் பதிக
ங்கள்பாடி இப்படியாகச்சோழநாடெல்லாங்கடந்து
பாண்டிநாட்டுக்குப்போய் கொடிய பாலைவனமும்மு
ல்லைவனமும் இந்திரவில்லை யானை கைநீட்டிவாங்கு
முயர்வுள்ள குறிஞ்சிநிலமும்கடந்து பாகத்திலேபா
ர்வதியையுடையகடவுள் மதுரைக்குப்புறம்பே போ
ய்ச்சேர்ந்து பரிசுத்தமாகிய விபூதிபூசிய அடியார்க
ள் கூட்டத்தினடுவே திருஞானசம்பந்தமூர்த்திகள்
திருப்பாற்கடலிலேபிறந்து மேலெழுந்து விளங்குகி
ன்ற பூரணசந்திரன்போல முத்துப்பந்தலின் கீழே
முத்துப்பல்லக்கின்மே லெழுந்தருளிவர முன்னே
செல்கின்ற பரிசனங்களில் முத்துச்சின்னம் ஊதுகி
றவர்கள் சமணராகிய இருளோட உதையமான சூரி

யனென்னும்படிபரசமையசிங்கம்வந்தானென்று ஊதிக்கொண்டுவருகிறசத்தத்தைக்கேட்டு நின்றுண்டிரியும் வஞ்சகரானசமணர்கள்எதிரோவந்து நீங்கள்கொன்றறஞ்சொன்ன உங்கள் தெய்வத்தைக்கும்பிடவந்தால் இந்தவென்றிச்சின்னமேதுக்குஇப்படிப்பட்ட கெருவமேதுக்கு நீங்கள் யாரைச் செயித்தீர்கள் என்று பரமசிவனடியாரைத் தடுத்தார்கள் அப்[illegible]து அதிகமாகமதமொழுகச் செல்லுகின்ற மிகுந்தபலத்தையுடைய மதயானையானது தாமரைநூலாலேகட்டினால் அதற்குத்தடைபட்டுநிற்குமோ அப்படியாகவெற்றிகொள்ளவந்த மன்மதனையெரித்த கடவுள்குமாரர் அந்தக்கயவர்கள் தடையைவிலக்கிக்கொண்டு பெரியமணிமாடங்களையுடைய மதுரைக்குள்ளேபுகுந்துபரமசிவன்கோயிலுக்குள்ளேபோய் வெள்ளையானையினுடைய சாபத்தைத்தீர்த்த கிருபைக்கடலான சுவாமியைவணங்கி மூன்றுதரம் பிரகாரஞ்செய்து முகிழ்முலைப்பாலைச் செம்மணிக்கிண்ணத்திலேகொண்டுவந்து கொடுத்த அங்கயற்கண்மையையும் வணங்கிக்கொண்டு வேதச்செல்வரான திருஞானசம்பந்தர் மெய்யான ஆனந்தமயமானவெள்ளத்திலே முழுகிநின்று சுவாமி உம்மை வேதவழியாகநின்று வந்தித்தீடேறமாட்டாத புத்திகெட்டவஞ்சநெஞ்சரான சமணரை அவர்கள்மார்க்கமெல்லாங்கெடும்படி வாதுசெய்துவெல்ல" அடியேனுக்குத் திருவுள்ளஞ்செய்தருளவேணும்.(கூற்றைக்குறைபடவுதைத்தோய்)என்று குறித்துரைபதிகம்பாடிவேண்டிக்கொண்டு அருளைப்பெற்றுமீளும் அப்போது சம்பந்தரைக்கண்டு மூண்டவைம்பொறியும்வென்றவாகீசமுனிகளென்ன ஆண்டு உள்ளவரொருவர் முன்வந்துவேண்ட அவர் திருமடத்துக்கு அன்புபூண்டெழுகாதலோடும்போயருளினார் புகலிவேந்தரான திருஞானசம்பந்தர் அப்படி அந்தமடத்திலே எழுந்தருளி அன்றிராத்திரி திருவமுது செய்தருளியிருக்க அன்றுராத்திரியிலேசெய்யப்போகிற எண்ணவுங்கூடாத செய்கையையும் தங்கள் நல்லகுலத்தில் வந்துபிறந்த மங்கையர்க்கரசியார் மனவருத்தத்தையும் பார்க்கப்பயந்து சூரியன்போய்மேலைக்கடல்வெள்ளத்திலே முழுகினான் அப்படி பகற்காலம் போகவே மாறுபாடுகொண்ட அமணர்கள்செய்யும்வஞ்சனைக்கு உதவியாக வேற்றுமையின்றிக் கலந்துறவாகவந்தாற்போல அந்த அமணர்கள் நிறம்போலிருண்டிருக்கிற ராத்திரியில் அந்தஅமணர்தலையிலே மயிர்கள்பறியுண்டு அந்தமயிர்க்காலெல்லாம் கிளம்பின சிறுகொப்புளங்கள்போல எங்கும் நக்ஷத்திரங்கள்பூத்தன இப்படி இங்கே வைதிகத்தனி யிளஞ்சிறுமடங்கலான சம்பந்தர்வந்திருக்கிற செய்தியைத்தெரிந்துவெவ்வேறே மலைகளிலேதிரண்டிருக்கிற வஞ்சகரான எண்ணாயிரஞ்சமணமுனிகளெல்லாம் ஒருமித்துக்கூடி முத்தமிழ்விரகரானசம்பந்தர்மேலேவ ஒருவகைவேள்விசெய்து முழுப்பொய்யரான அமணர்கள் அந்த அக்கினியைக்கூப்பிட்டு நீபோய்எங்களுக்குப் பகைவரானவர்களிருக்குமிடத்தை அழித்து உண்டுவரக்கடவையென்றேவிவிட அதற்குமுன்ஒருகாலத்திலே தக்கன் யாகஞ்செய்த இடத்தில் கைஅறுபட்ட அக்கினிகலங்கிப்போகப்பயந்துபோகாமல் நின்றனக.

அப்போதந்தஈனரான அமணர்கள் வீட்டில் எரிகிற ஒரு கொள்ளிக்கட்டையை யெடுத்துக்கொண்டுபோய் ஞானபோனகரானசம்பந்தப்பெருமாள் எழுந்தருளியிருக்கிற மடத்திலே செருகினார்கள்அந்தக்கொள்ளி அவியாமல் பத்திக்கொண்டு வெந்துபுகைவதை அங்குத்தை திருத்தொண்டர்கள்கண்டுவந்துவானநாயகன் மைந்தரான சம்பந்தருக்கு விளைந்துசொல்ல உடனே சிட்டரான அறிவாற்சிறந்தசம்பந்தர் அங்குமூள்கின்ற நெருப்பைப்பார்த்து தென்றமிழ்க்கூடல் அட்டமூர்த்தியைத்தியானித்து அங்கே இருந்தபடியே அருமறைப்பதிகமொன்று துட்டர்பொய்யுரைமேற்கொண்டு தொன்முறை துறந்துவிட்ட பாண்டியனைப்போய்ப் பற்றிக்கொள்ளென்று பாடியருளி அந்த நெருப்பையே பாண்டியன் மேலேவியருளினார்அந்தக்கணப்பொழுதிலே அந்த நெருப்புவந்து பாண்டியனைச் சுரநோயாகிப் பற்றிக்கொண்டது அந்தப்பாண்டியன் அணிந்திருந்தஆபரணங்களெல்லாம்நீறாகவெந்து அவன்பூசின கலவைச்சந்தனமும் மாலையும்வெந்து கருகவும் விரித்துப்பரப்பினபாயலும் புலர்ந்து சருகாகவும்பாண்டியன் பதைபதைத்தான் அப்போது மங்கையர்க்கரசியாரும் குலச்சிறைநாயனாரும்கண்டு தளர்ந்து நல்லவைத்தியர்களை அழைத்து யாதொருகுற்றமுமில்லாதபல அவிழ்தங்களுங்கொடுத்துப் பார்த்ததினாலும் அந்தவெஞ்சுரம்தணியாமல் அதிகமாகியதுகண்டு சவலையானவிரதங்களில் வருந்தி இகபரபோகத்தையும் அடையமாட்டாத புத்தியீனராகிய அமணரை அழைத்துக்காட்டி பார்க்கச்சொல்ல அவ்வமணர் தங்கள் தவபலத்தினாலும் பலவகை மருந்தினாலும் வெஞ்சுரம் தணிவுசெய்துபார்க்க அதுதணியாமல் அதிகரிக்கக்கண்டு என்னசெய்வோமென்று கவலைகொண்டிருக்கப் பொழுதும்விடிந்து வட்டவாழியொன்றுடைய தேர்ப்பரிதியானசூரியன்தன்குலத்துச்சோழராஜன் வேண்டினமருமகனாகிய கூன்பாண்டியனைப்பற்றிய வெஞ்சுரத்தைக்கேட்டு அவனை மறையவளைத்த திரைச்சிலையைக் கையாலேதொட்டு எடுத்து

மறைவுநீக்கிப் பார்க்கவந்தவன்போல சூரியன் கடல்முகட்டிலேதோன்றி விளங்கினன் அப்படி பகலானவுடனே பரிசுத்தமான சைவமாகியபயிரைவளர்க்கவேலிபோலமைந்த பாண்டிமாதேவியாரும் மந்திரியாரும் பாண்டியனைப்பார்த்து ஐயாமகாப்பிரபுவே இந்தவெஞ்சுரம்'யமனதுபாசத்தையும்சுடத்தக்கதாயிருக்கின்றது இதை சீகாழிக்கௌணியப்பிள்ளையாரான திருஞானசம்பந்தப்பெருமாள்வந்து பார்த்துத்தீர்த்தால தீரலாம் அல்லது வேறொருவகையாலும்தீர்க்கப்படாதென்ன அதற்கு பொய்ச்சமையரான அமணர்கொள்கையைவிடாத பாண்டியன் நீங்களிருவரும்சொன்ன அந்தச்சைவசமயத்தார் வந்து விபூதியிட்டுப் பார்க்கப்படுமோவென்ன அவ்விருவரும் சுவாமி நீரெந்தவிதத்திலேயானாலும் பிணிதீர்ந்து நன்மையாகவேண்டாவோ இந்தப் பிணிதீர்வதைவிடவேறே என்னவேண்டியிருக்கின்றது என்றுசொல்ல அதற்குப் பாண்டியன் சம்மதித்து அவரை சம்பந்தப்பெருமாளை இங்கேவர அழையுமென்ன குலச்சிறைநாயனாரான மந்திரித்தலைவர்பட்டணங்களெல்லாம் மகிழ்வாக அலங்கரித்து மழலையின்றமிழ்விரகரான சம்பந்தப்பெருமாள்எழுந்தருளியிருக்கிற திருமடத்துக்கு வந்து முன்ஒருநாள் வைதிகப்பிராமணன் சொல்லக்கேட் டுண்ட ஞானமிர்தத்தை இப்போதுகண்களாலே கண்டுண்டு கண்கள்பெற்றபயனைக்கொண்டு போய்வணங்க பூந்தராய்வேந்தரான சம்பந்தர் கெட்ட அமணர்நடக்கையைவென்று சென்றமனமுடையவரே எழுந்திருமென்றுசொல்லியருளி நன்று சுகமே இருந்தனீரேஎன்னபாண்டிமாதேவியையும்கேட்க அவ்விருவரும் எப்போதும்உம்முடைய திருவருளைப்பெறவிருக்கின்றஎங்களுக்குயாதொருகுறைவுமில்லையென்றுஉள்ளூறவுகொண்டு சுவாமி இனிஉம்முடையதிருவருளினாலே எங்களரசன் சுரம்தீரவேணும் அமணர்கூட்டம் மாளவேணும் ஆக இவ்விரண்டும் செய்தருளவேணுமென்று பாதத்திலேவிழுந்து வணங்கி எழுந்தருள்வீராகவென்றுவேண்ட அப்படிவேண்டுகின்ற அன்பரிருவருக்குமாக அப்படியேவருவோமென்று அனுக்கிரகித்து முத்துப்பல்லக்கின்மேல் சந்திரன்பாண்டியன் சுரந்தீர்க்கச்செல்வதுபோலச் சென்றருளிப் பாண்டியன் கோயிலுக்குப்போம்போது முன்னே மெய்வேதத்தை வாழச்செய்யவருகிறவரென்று வாசலெல்லாம் தூபதீபங்களும்நிறைநீர்க்குடமும் கொடிகளும் கந்தபொடிகளும்நெருங்கிப் பாண்டியன்காதுக்கின்பமாகமுத்துக்காளமூத அமணருக்குக்கோளரிபோல கோவிலுக்குள் எழுந்தருளி பாண்டியன் அருகிலிட்ட செம்பொன்மணியாசனத்தில் எழுந்தருளியாக பாண்டியன் கண்டுதெளிந்து செந்தாமரை மலர்போல முகமலர்ந்து சுவாமி பாவியேனுடைய சுரநோயைத்தீர்த்தருளி என்னையும்பணிகொண்டருளவேண்டுமென்று வேண்ட சிரபுரக்கோனாகிய சம்பந்தப்பெருமாள்முன்னே அந்தசுரநோய்வருவதற்குக்காரணமான அமணர்கேட்டு மனம்புழுங்கி ஓய்பாண்டியமஹாராஜனே கலைஞானங்களெல்லாங்கற்று வல்ல உம்முடையவலப்புறத்துவெம்மையை இங்கே இப்போதுவந்தவர் தீர்ப்பாராக நாங்கள் இடப்புறத்துநோயை முன்னே தீர்க்கிறோமென்றுபாண்டியனைச்சம்மதப்படுத்தி அமணர்தங்கள் அசோகின்கீழ் அருகக்கடவுளைநினைத்து கையிலிருக்கிற மயில்வால்களாலே தடவித்தடுத்துக் கண்ணீர்சிந்தி அழுதும் அந்த இடப்புறத்துவெம்மை நெய்வார்த்த நெருப்புப்போற்கொதித்து அதிகரித்துத்தணியாதிருக்க அமணர்மானங்கெட்டு கெருவங்குலைந்து பேசாதிருக்க சம்பந்தப்பெருமாள் தமதுவிபூதிப்பையில் விபூதியைஅள்ளி கையில்வைத்துக்கொண்டு அந்தச்சுரநோய்திரும்படி எண்ணினர் அப்போது மாயைசெய்தழியும் அமணர் இதுமாயநீறு தகாது என்று தடுத்தார்கள் அதற்குஎங்கள்கடவுள் கோயில்திருமடைப்பள்ளி சாம்பலை அள்ளிக்கொண்டுவாருங்கள் என்று அருமறைக்கௌணியர்சொல்ல பாண்டியன் ஏவலாளர்கேட்டு கோயிலுக்குப்போய் அள்ளிக்கொண்டுவந்தார்கள் அதை பாண்டியன் சுரந்தீர்க்க வந்தருளிய கௌணியர் தமதுகையில்வாங்கி மருந்து மந்திரம் வேதப்பொருள் இன்பவீடு போகம் பொருள்முதலான எல்லாம் திருவாலவாயான்திருநீறேயென்று திருப்பதிகம்பாடி பாண்டியனுடைய உடம்பிலே கோயிற்சாம்பலைப்பூசித்தடவினர் அப்படித்தடவினஉடனே வலப்புறத்தில்வெம்மை அமணர்கள் வெம்மைபோல அகன்றுபோயிற்று பாண்டியனுக்குவலப்புறம் வாசங்கலந்தகுளிர்ந்த பனிநீர்விட்டுக்குழைத்த சந்தனம்பூசின தண்மைபோலிருந்தது அப்படி ஒருபுறம்குளிர்ந்த பாண்டியனுக்கு இழிதொழிலையுடைய அமணர்கைதொட்ட இடப்புறம்கொதிக்கிறதும் கௌணியர்கைதொட்ட வலப்புறம்குளுந்திருக்கிறதும் தீவினை நல்வினைப்பயன்போலாகபாண்டியன் சுவாமி வலப்புறங்குளுந்தது இடப்புறம்கொதிக்கின்றது இனிஎன்னாலே பொறுத்துமுடியாது ஆனாலும் இந்தஅமணர்குற்றத்தைவிட்டு என்னை ஈடேற்ற வேண்டியருளினல் இந்தஇடப்புறத்துநோயையையும் தேவரீரே தீர்த்தருளவேணுமென்று பாண்டியன்மிகவும் வேண்ட அதற்குசிரபுரம் சம்பந்தப்பிள்ளையார் அவன் இடப்புறத்தையும் முன்போலவே விபூதியள்ளித்தடவுமுன்னே பாண்

டியனுக்கு முன்னுள்ளகூனுந்தீர்ந்து இப்போதுவந் தசுரமுந்தீர்ந்து பாண்டியன் சூரியன்போல்விளங்கி னன் அதனாலே அன்றுமுதல் சௌந்தரியபாண்டி யனென்று பெயர்கொண்டு சம்பந்தப்பிள்ளையார் க டாக்ஷத்தாலும் தொட்டதினாலும் அவர்தெளித்த வாக்கைக்கேட்டதினாலும் பாண்டியன்சம்பந்தப்பிள் ளையார்பொன்னடியைவணங்கி பஞ்சாட்சரோபதே சம்பெற்று அமணர்நெறியைவிட்டு பழையவேதநெ றியைக்கொண்டு தூயனானன்.

பாண்டியன்சுரந்தீர்த்தபடலம் - முற்றுப்பெற்றது.

அறுபத்துமூன்றாவது

## சமணரைக்கழுவேற்றியபடலம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

பஞ்சவனடைந்தநோயைப்பாலறுவாயர்தீர்த்து, நஞ்சணிகண்டனீறுநல்கியவண்ணஞ்சொன்னே
மஞ்சலராகிப்பின்னும்வாதுசெய்தடங்கத்தோற்ற, வஞ்சரைக்கழுவேறிட்டவண்ணமுஞ்சிறிதுசொல்வாம்.

கலிநிலைத்துறை.

ஆதியாலயத்தலைகொண்டாழிசூழ்காழிச், சோதிவேதியர்பாண்டியன்சுரந்தணித்துடலிற்
பேதியாதகூனிமிர்த்தலாற்பிறங்குகற்பாதிப், பூதியாவினுஞ்சிறந்ததவ்வட்டில்வாய்ப்பூதி.

பின்பு பாண்டிமாதேவியான மங்கையர்க்கர சியாரும் மந்திரிகளிலேசிறந்த குலச்சிறைநாயனா ரும் சீகாழிச்சம்பந்தப்பெருமாள்காலிலே விழுந்து சேவித்து எங்கள் அரசனுடைய சுரநோயும்கூனும் பாசவல்வினையுந்தீர்த்த நீயிர்தாமே இன்னமும்அடி யேங்கள் வேண்டுகின்ற குறைதீர்க்கவேணும் அதா வது இந்தகன்னிநாடுமுழுதும் கறுத்தஅமணராகிய காடுமூடிபட்டுக்கிடக்கின்றன ஆகலான்இந்தஅமண இருளை இப்போதே போக்கியருளவேண்டுகின்றோ மென்று வேண்டுதல்செய்ய அதற்குச்சம்பந்தப்பெ ருமாள் திருவாலவாய்க்கடவுள் திருவுள்ளத்தைத் தெரிந்துகொண்டுவருகிறேனென்று அவ்விருவரும் கூடவரவே கோயிலுக்குப்போய் பொன்னிறத்தாம ரைபூத்தகுளத்திலே ஸ்நானஞ்செய்துகொண்டு அங் கயற்கண்ணிபாகமாக மான்மழுவேந்திய திருக்கைக ளையுடைய நாதனைவணங்கிநின்று சுவாமி உடம்பை வெறுத்து நாள்களெல்லாம்வஞ்சனையே அதிகமாக த்தவஞ்செய்கின்றபேயராய் இம்மைமறுமைப்பயனை விட்டு நீர்சொன்ன வேதவேள்விகளை நிந்திக்கின்ற கொடியசமணரைத் தெண்டித்தருளவேணுமென்று வேண்டினர் அப்போது முன்னே யானையெய்தகட வுள் ஆகாசவாக்காக என்னடியார்களாகிய உங்களு க்குவேண்டுவதே எனக்கும் வேண்டுவது இப்படிஎ னக்குச் சம்மதமானதினாலே நீங்களேவெல்வீர்கள் அவ்வமணர்தோற்பார்கள் அதற்கு இப்போதுநாம் சொல்லுகிறபடியே நீங்கள் பாண்டியன்சபைக்குப் போய் அவ்வமணரோடுவாதுசெய்தால் அவர்களே தோற்றுப்போய்க் கழுவிலேறிச்சாவார்கள்இதற்கெ வ்வளவும் அஞ்சவேண்டாமென்றுசொல்ல சம்பந் தர்கேட்டுவணங்கிப்பின்பு தமது திருமடத்துக்கெழு ந்தருளினர் மற்றைஇருவரும் திரும்பிதங்கள் இடத் துக்குப்போனார்கள் அப்படிஅன்றைப்பொழுதுபோ க மறுநாள் பாண்டிமாதேவியும் மந்திரித்தலைவரு ம் சம்பந்தப்பிள்ளையார் மடத்துக்குப்போய் அந்தச் சமணரைவெல்லுதற்கு உபாயம் எப்படியென்றுஆ லோசித்துக்கொண்டு சம்பந்தப்பிள்ளையாருடனே மூவருமாக தங்கள்பாண்டியன் சமூகத்துக்குப்போ ய் ஓய்பாண்டியமகாராஜனே இங்கேயெங்கும் அம ணர்கூட்டமே அதிகமாய் நெருங்கியிருக்கிறதினாலே அவ்வமணரைவேரோடே களைந்தாலல்லவோ எங் குமுன்போலவே சைவப்பயிர் தலையெடுக்குமென் றுசொல்ல அதுகேட்டுப்பாண்டியனும் அப்படியே செய்யத்தக்கதென்று ஆக்கியாபிக்க மூவரும்நாடெ ல்லாம் மெய்வழியேசென்று ஈடேறுங்காலம் வந்த தென்று பாம்பலங்காரப்பரன்புகழையே எங்கும்ப் ரப்பவேண்டி மகிழ்ந்திருந்தார்கள் அந்தக்காலத்தி ல் அந்தஅமணரை அவர்கள்பெண்டுகளும் பிள்ளை களும் சீடர்களும்கூடிக் கண்களிலேநெருப்புப்பொ றிசிந்தப்பார்த்து நீங்கள் இவ்வளவுகாலமாகத் தவ வலியுள்ளவர்களென்னப் பெயர்கொண்டு இப்போ து பாண்டியனுக்குவந்த சுரநோயைத்தீர்க்கமாட்டா மல் ஒருசைவனாகிய சிறுபிள்ளை தீர்க்கும்படியாய்ந

ம்முடைய பகவன்பெருமைக்கு இழிவுண்டாக்கினீர்கள் இப்போது பாண்டியன்சாம்பல்பூசுகின்ற கடவுளாகிய பாம்பலங்காரனே பகவானென்றுநம்பி உங்கள் விரதமார்க்கங்களெல்லாம் பழிப்பாக இகழ்ந்துவிட்டான் இனி உங்களுக்கு நிலையேதிருக்கின்றதென்று வெறுத்து முதுகுகாட்டிநிற்க அமணர்களெல்லாம் இனியென்னசெய்யலாம் அவனுடன்வாதுசெய்துபார்ப்போமென்று கூடியெழுந்திருக்க அத்தனைபேர்களையும் அவனவன்பெண்டுகள்வந்து முன்னேநின்றுதடுத்து நீங்களொருவரும் போகவேண்டா உங்களுக்கிது நல்லகாலமாகவில்லை நாங்கள்கண்டகனவு வருந்தித் துன்பக்கடலில்முழுகுவதாயிற்று அதாவது நம்முடைய கோயில்கள் வீடுகளெல்லாம் சடைமுடிகளும் தருப்பைபிடித்தகைகளும் சாம்பல்பூசின உடம்பும் கையிலே சூலாயுதங்களும் புலித்தோலாடையுமாகச் சிற்சிலர்கள்வந்து உலாவவுங்கண்டோம் கலியாணமில்லாமல் துறந்தவர்களும் கணவனிருக்கும்போதே துறந்தவர்களும் புருடனிறந்தபின்பு துறந்தவர்களும் ஆக மூவகையான தவப்பெண்கள் பள்ளிகளெல்லாம் ஒருசிறிய கொம்பானைவந்து இடித்து அழிக்கவுங்கண்டோம்மொட்டைத்தலையராகவும் குண்டிகைவைத்த உறிதூக்குகின்ற கையராகவும் கோவணங்கட்டிக் காய்கிறதடியைச் சாத்திக்கொண்ட பிடரியையுடையராகவும் அந்தச் சடைமுடிச் சிவன்பெயரை நாவில் உச்சரித்துக்கொண்டு எங்கும் உலாவவுங்கண்டோம் இன்னம் கொதிக்கும்படியான கோபங்கொண்டதாகி ஒருயானைக்கன்றுவந்து நம்முடைய குருக்கண்மார்களைத்துரத்திவிட்டு பூ இலைகளுதிரவும் கிளைகள்முறியவும் அசோகமரத்தை வேரோடே பெயர்த்துத்தள்ளவும் கண்டோம் அப்படி அவர்கள்கொண்ட மூவிலைச்சூலத்திலுங்கூரிய கழுவிலே நீங்கள் எல்லாரும் ஏறவும் நாங்கள்கண்டுவருந்தி மார்புகள்சிவக்கக் கைகளாலடித்துக்கொண்டு கூந்தல்கள் அவிழ்ந்துவிரியும்படி அழவுங்கண்டோம் ஆனால் ஒருவராலும்வெல்லப்படாத உங்களுடைய இந்திரசாலமோகமுதலான வித்தைகள் இந்தச்சமையத்தி லுங்களுக்கெவ்வளவு முதவியாகவில்லை ஆனல் அந்தவித்தைகள் கள்ளராலே பறியுண்டுபோயினவோ நெருப்பிலே வெந்துபோயினவோ வெள்ளங்கொண்டு போயினவோ புதையலிலே கிடக்கின்றனவோ முன்னே வேள்வியில் நெருப்பைவளர்த்து யானை பாம்பு பசு இவைகளை ஏவி நம்முடைய பெரியோர்கள் பட்டபாடு தெரிந்திலீர் இப்போது இந்தப்பாண்டியனுக்குவந்தசுரநோயைத்தீர்க்கமாட்டாத நீங்கள் இனி அங்கேபோய்என்ன செய்து வெல்லுவீர்கள் அதையும் ஆலோசித்துக்கொண்டு நின்று போகாமலிருங்களென்று சொன்னார்கள் அதற்குத் தருமத்தைக்கெடுத்த பாபிகளான அமணர் வலிந்துசெல்ல அவரவர் பெண்டுகள் கையைப்பற்றி யிழுத்துத்தடுத்தாலும் பெண்டுவழிச்செல்லுதல் குற்றமென்று தீவினைவழிச்செல்லுகின்ற அமணர்கள் அந்தப் பெண்டுகளுக்குத் தெரியாமல் போகத்தொடங்கினார்கள். அப்படி ஆயுள்முடிந்த அமணர்கள் போகும்போது பெரியபெண்டுகள் எங்கள்பேச்சைக்கேளாமல் போகிற நீங்கள் துன்பப்பட்டு வருந்தக்கடவீர்கள் என்று சபித்தார்கள் அதற்கும் அஞ்சாமல் பட்சிகள் முதலிய அவசகுனங்கள் போகவேண்டாவென்று தடைசெய்தாலும் துணிந்துபோகின்றவர்கள் பெரியகெண்டைகள் உலாவ தேனைக்கவிழ்த்து தாமரைமுதலியன மலர்கின்ற அகழ்சூழ்ந்த மதுரைக்குவெளியே ஒருபுறத்திலே எல்லாச்சமணர்களும் கூடி நாணமும் பயமுங்கொண்டு ஆலோசனை எது செய்யலாமென்று துணிந்து இனிப் பாண்டியனைப்போய்க்கண்டு இப்படியென்று தெரிவித்து அவன் சம்மதியேல் வந்திருக்கிற வேறுபுறச்சமயத்தானை வாதினாலே வெல்லுவோமென்று ஒருமித்து மதுரைக்குள்ளே புகுந்து பாண்டியன்சபைக்கு வரும்போது உதையகாலத்தில் கவுணியர்குலப் பெருமாளான சம்பந்தப்பிள்ளையார் திருவாலவாய்க்கடவுள் சேவடிகளைவணங்கித் தமது திருமடத்துக்குச்செல்ல வந்த அமணர்கள் வழியிலேகண்டு சூரியனை இருள்வளைந்தாற்போல் வளைந்துதடுத்துப் பின்னேவர சம்பந்தப்பிள்ளையார் தடையுண்டு மடத்திற்குப்போகாமல் பாண்டியன் சபைக்குவந்து அங்கு நியமித்திருக்கிற சிங்காசனத்தின்மேலேறி இளஞ்சூரியன்போலெழுந்தருளியிருக்க பறித்த சித்தலைப்புலையர்களான அமணர்கள் பொருமற்பதைத்து நோக்கி நீயோ இன்னமு மழலைச்சொல் திருந்தாத சிறுபிள்ளை கண்மணி ஒன்றுதானே இருவிழிகளிலும் சுழல்வதான காக்கையிருக்க பனங்கனி உதிர்ந்தாற்போல நீ கற்றுவந்தமந்திரபலத்தாலே பாண்டியனைப்பற்றினசுரந் தீர்த்தோமென்று கெறுவங்கொள்ளலாகுமா நந்து நாகு நீர்வண்டு இவைகள் சென்றவழியும் ஓரெழுத்துவடிவாக அமைந்தாலும் அமையும் அப்படியாக உன்கையாலே சிந்தினசாம்பலும் சிறுசொல்லுமே மருந்தும் மந்திரமுமாகப் பாண்டியன்சுரம் தணியக்கண்டாய் ஆகையாலே உங்கள் மந்திரத்தையு மோரோட்டிலெழுதி எங்கள்மந்திரத்தையு மோரோட்டிலெழுதி இரண்டேட்டையும் நெருப்பிலிடுவோம் வெந்ததுதோற்றதாய் வேவாத ஏடு வென்றதாகக்கொள்ளுவோம் ஆனால் இது சிவன்கோயில்சார்ந்த இடங்களிலே செய்

யக்கூடாது செய்தால் அந்தச்சிவன் உங்களுக்குச் சார்வாய் எங்களுக்கு விக்கினஞ்செய்கிறான் ஆகையாலே வேறே பொதுவான ஒரு இடத்திலிருந்து வாதஞ்செய்வோம் வாவென்று எந்தவேளையும் பேரிகைகள் ஒலிக்கின்ற மதுரைக்கு வெளியேபோய் வேப்பமாலையணிந்த பாண்டியனுக்குமுன்னே நெருப்பைவளர்த்து அதிலிடுகிற ஏடு வேவாதிருக்கிறதும் வேவுகின்றதும் காண்போமென்று எழுந்து அமணர்களே மதுரைக்குவெளியே ஒருபுறத்தில்வந்து கிழ்த்திசையிலே சிவந்தநெருப்புக்குழி ஒன்று தோண்டி மரங்களை வெட்டிப்போட்டு அதிகமாக நெருப்பைமூட்டிவிட்டு தங்கள் பெண்டுகள்வயிற்றிலு நெருப்புமூளச்செய்த ஞானப்பாலுண்ட சம்பந்தப்பிள்ளையாரை ஏன் இங்குவராதிருக்கிறனென்றிகழ்ந்து அந்த வஞ்ச அமணர்கள் நெருப்பைக்கட்டிக்கொண்டிருக்க அப்போது பதினாறுயிரந் திருக்கூட்டத்துடனேயெழுந்து சம்பந்தப்பிள்ளையாரும் பாண்டியனும் பாண்டிமாதேவியும் மந்திரித்தலைவரும் அவர்கள் நெருப்புவளர்த்துக்கொண்டிருக்கிற இடத்துக்குவந்து சபைகூடியிருந்தார்கள் அங்கேமனங்கனிந்து முலைசுரந்து பாலொழுகுகின்றபோது குடிக்கின்றகன்று குடியாமல் துள்ளிக்கொண்டோடினால் அக்கன்றைத்தொடர்ந்து பின்னேவருகிற பசுவைப்போல வெள்ளியம்பலத்துளாடும் வேதகீதான்கடவுள் தேவியுடனே தம்பிள்ளைபோன வழியே தொடர்ந்துவந்திருந்தனர் அப்போது எண்ணாயிரஞ்சமணரும் வெவ்வேறே தாங்கள் முயன்றுகற்ற மந்திரங்களை ஓலையிலே தனித்தனி யெழுதிக்கொண்டுபோய் எல்லாரும் ஆகாயத்தை அளாவக்கொதித்து நிமிர்ந்து எரிகிறநெருப்பிலிட்டார்கள் அப்படி அவர்கள் நெருப்பிலிட்ட ஏடுகளெல்லாம் அந்தக்ஷணத்திலே கரும்பிலேகாய்ந்த கொழுந்தடைபோலத் தீந்து சாம்பலாய்ப்போனவற்றைக்கண்டு நீசரான அமணர்கள் மனங்கிடந்துகொதிக்க கண்டவர்களெல்லாம் சிரிக்கத்தொடங்கினர்கள் அந்தவேளையில் விரிந்த வேதநாவரான சம்பந்தப்பிள்ளையார் தாம் பாடின மெய்யானவேதப்பொருளை எழுதினபுத்தகத்தை அவிழ்த்து வகிர்ந்துபார்க்கும்போது தமக்கு ஞானப்பால்கொடுத்த அம்மைபெயரொழுதின ஏடகப்பட*அந்த ஏட்டையெடுத்து எரிகிற நெருப்பிலிட்டருளினர் அப்படிஇட்டபோது வேதப்பொருளை வெளியிட்ட நூலெழுதின ஏடு அனந்தங்காலம் நீரிலே ஊறிக்கிடந்த ஏடுபோலப் பச்சென்று பசந்து தோன்ற பாண்டியனு மாதேவியாரு மந்திரியாரு மற்றுமுள்ளவர்களுங்கண்டு பிராமணகுலோத்தமரான சம்பந்தப்பிள்ளையாரைக் கொண்டாடிப்புகழ்ந்து பேரின்பக்கடலிலே மூழுகினர்கள் அப்போது கொடுமையால்வெந்த சிந்தையையுடைய அமணர்கள் வாதுசெய்துவெல்ல வேறே பொதுவிடந்தேடி ஒப்புக்கொண்ட பொதுவிடம் அன்றுமுதல் ஞானசம்பந்தர் அமணரைவென்ற இடமாகையாலே இன்றும் அந்த இடம் ஞானசம்பந்தரென்றே பெயர்பெற்றுவிளங்குகின்றது அப்படிவேவாமல் பச்சென்று தோன்றின ஏட்டையெடுத்துப் புத்தகத்தோடுசேர்த்துக் கட்டிக்கொண்டு பின்பு சம்பந்தப்பிள்ளையார் பாண்டியனைப்பார்க்க அவ்வேளையிலே தீவினையையும் பாவையுமுடுத்தின அமணர்கள் தாங்கள்சொன்னபடி சபதமுடிக்கவேண்டியிருக்கவும் பாண்டியன் சபையாரெல்லாம் நகைக்கும்படிக்கத்திச் சம்பந்தப்பிள்ளையாரைநோக்கி ஏட நாங்களெழுதியிட்டபச்சையேடுகளெல்லாம் வெந்துபோக நீயெழுதியிட்டவேடு வேவாதிருப்பது நீ அக்கினியை எரிக்கவொட்டாமல் கட்டிக்கொண்டதனாலல்லவோ அதுநிற்க உன் ஏட்டையும் எங்களேட்டையும் இன்னம்பொங்கிப்பெருகிவருகிற இந்தவையையாற்றிலே போகடுவோம் போகட்டால் நீர்வழியேசெல்லுமேடு தோற்றதாக நீரினெதிரேசெல்லுமேடு வென்றதாகுக என்று பெருமைகொண்டுபேசிவென்றபேர்க்குத் தோற்றபேர் ஏவலடிமையாகிறதே சபதமென்று சமணர்கள்சொல்ல அப்படிச்சொல்லிக்கொண்டுமேலைபோனிற்கிற அவர்களைநோக்கி மன்றுளாடும் அடிகள் மைந்தரான சம்பந்தப்பிள்ளையார் திருவாய்மலர்ந்து இங்கே ஏவலடியார் பதினாறுயிரம்பேர்களுண்டு வேறே வேண்டியதில்லை சிவநிந்தைபண்ணின பாபிகளான உங்களுக்கு அடிமைகளென்று கொள்ளுந்தண்டம்போதுமோ போதாது இன்னமும் கொன்றைமதிமுடியாரருளாலே உங்களை யாம் வெல்லுவேமானால் மூவிலைவேல்வடிவாள் நிறைத்தகழுமுனையிலிடுவோ மதுவே வழக்கென்றுசொல்ல கேட்ட அமணர்கள் அவர்கள் விதிவலியினாலே கழுவேறச்சம்மதித்து நிற்க உடனே குலச்சிறைநாயனரான மந்திரித்தலைவர் தச்சர்களைக்கூட்டி வயிரங்கொண்டு நீண்ட ஆலமரங்களிலே சூலவடிவாகக் கழுமுள்கள்செய்து தனித்தனி ஊன்றி அந்த எண்ணாயிரம்பேருக்கும் வரிசையாக எண்ணாயிரம் கழுமரங்களைக்கொண்டுவந்து பாண்டியனுக்குமுன்னேபரப்ப அப்போது தெளிவில்லாத சமணர்களைப்பார்த்துச் சம்பந்தப்பிள்ளையார் ஓய்சமணர்களே இனிநான் சொல்வதைக்கேளுங்கள் என்னவென்றால் நீங்கள் விபூதி உருத்திராக்ஷங்களை அணிந்துகொண்டு கடவுளுடைய பஞ்சாக்ஷரோபதேசம்பெற்று உங்கள்பாசந்தீர்ந்தீடேறுங்களென்று நீதிநூலின்படி எண்ணிச்சொ

ல்ல அதற்கு சமணர்கள் நெருப்புப்போலே கொதித்து நீ முன்னே நெருப்பிலே வென்றேமே இனி நீரிலேஎப்படிமுடியுமோவென்றெண்ணி நயஞ்சொல்லிப் பயங்காட்டி எங்களை இணக்கி உடன்பாடாக நினைந்தாயேயல்லது வாதுசெய்துவெல்ல நினைத்தவனல்லை நீயோ எலும்புபூண்டவ னடிக்கீழடைந்த புத்தியில்லாதவன் உன்சொல்லுக்கு நாங்கள் உடன்படுவோமோ பேர்வென்றுமறுத்து உடனே குரங்குகள் சஞ்சரிக்கின்ற ஆலமரங்களைப்பிடுங்கிக் கரையாகவொதுங்க வொதுக்கி கமுகமரங்களைமுறித்து வேரைக்கிழித்து மலைகளைப்பறித்துப் பக்கங்களிலே பரப்பி ஆகாயத்தைத்துழாவி விரைந்துவருகின்ற வையையாற்றுநீரை முன்போலவேமந்திரத்தினலே அதன்வேகத்தையடக்கி தங்கள்மந்திரத்தை ஏட்டிலெழுதி நாணமல் விட்டார்கள் அதற்காக குளங்கள்சூழ்ந்த வேணுபுரத்துப்பிள்ளையார் எல்லாருந்தெளியும்படி வேதமே மெய்யாகி அந்தவேதங்கள் துணிந்து சொல்லுகிறபொருள் சந்திரசேகரக்கடவுளென்பதும் மெய்யானல் இந்த ஏடு நீரினெதிரே செல்லக்கடவதென்று முறையே பதிகமெடுத்தெழுதிவிட்டார் அங்கே முழங்கிவருகிற நீரிலே அப்படிக் கவுணியர்குலப்பெருமாள்விட்ட ஏடானது மதுரேசரருளாலே கயிறுகட்டியிழுக்க அந்தவையையாற்றினெதிரேறிச்செல்ல சமணர்க ளெண்ணாயிரவரும்விட்ட ஏடுகள் அழிவைச்செய்கின்ற ஐம்பொறி போனவழியே செல்லுமனம்போல அந்த ஆறுபோனவழியேபோயின இப்பால் சிங்கம்போலுஞ் சம்பந்தப்பிள்ளையார் எழுதிவிட்ட ஏடு ஆற்றுக்கெதிரே செல்லுதலைக்கண்டு தேவர்கள் பூமழைபொழிந்தார்கள் முனிவர்கள் வஸ்திரங்களை வீசியெறிந்து கொண்டாடினர்கள் சிவனடியார்கள் ஆனந்தக்கண்ணீர் வெள்ளத்திலே முழுகினர்கள் வெங்கண்ணரான சமணர்கள் நடுங்கி வெயர்வைக்கடலி லழுந்தினர்கள் இன்னம் வெந்துபோமென்றெண்ணமல் வெல்வோமென்றுசபதஞ்செய்து நாமே எழுதியிட்ட ஏடுகள் வெந்துபோகக்கண்டும் ஆற்றுக்கெதிரே ஏடுகள்செல்லவெல்லுவோமென்று இட்ட ஏடுகள் கடல்போய்ச்சேர்ந்தன என்று தங்கள்மானமே தங்களைச்சுட தலைநிமிர்ந்துநின்றுலும் நாணத்துடனேயே நின்றார்கள் அப்போது மலையே வில்லாகக்கொண்டு திரிபுரத்தை வென்ற கடவுளே எல்லாத் தெய்வங்களுக்கும் விரும்பத்தக்க போகமும் வீடும் தருதற்குத்தக்க மேம்பாடுள்ளகடவுளென்று நான்குகொம்புகொண்ட வெள்ளையானைமேலேறுகின்ற இந்திரன்முடிதகர்த்த பாண்டியர் குலத்தரசன் காண குருபதேசம்போல நெருப்பும்நீரும் தெளியச்செய்தன பொய்யில்லாத வேதநெறி செல்லாத அமணருக்கும் புத்தருக்கும் இன்னம் வேதசாஸ்திரங்கள் தெரிந்தும் சிவனே பரம்பொருளென்று தெரியாமல் கையில்விளக்கிருந்தும் கிணற்றில்விழுகின்றவர்போன்ற அறிவினர்களுக்கும் நெருப்பு நீருமல்லவோ சாக்ஷியாய் விளங்கச்செய்தன வென்றுகொண்டு மதுரைபாண்டியனும் மங்கையர்க்கரசியாரும் குலச்சிறைநாயனுரும் அடியார்கூட்டங்களும் சீகாழிச் சம்பந்தப்பிள்ளையாரைவணங்கித் துதித்து சொல்லிமுடியாத பேரானந்தக்கடலிலே முழுகி அதிசயித்தார்கள் பின்பு நன்றிதெரியாத சமணர்கள் மானமழிந்து வெட்கங்கெட்டு மலைபோலுந் தோணிபுரத்துச் சம்பந்தப்பிள்ளையாரை முன்னேநின்று இன்று நாங்கள் உமக்குத்தோற்றேம் நீரே வென்றீரென்றுசொல்ல கேட்ட சம்பந்தப்பிள்ளையார் அவர்கள் பிழைக்கும் வழியைக்கண்டு இன்னம் உங்களுக்குத்தருமவழியாகவே சொல்லுகின்றேம் நீங்களேன் வீணே யிறந்துபோகிறீர்கள் எல்லாருக்கும் தாய்போற் சிறந்த எங்களுக்கு அடிமையாய்ப் பிழையுங்கள் என்றுசொல்ல அதற்குச்சமணர்கள் ஏட சிறுபிள்ளாய் நீ ஏன் தகாத மொழி சொல்லுகிறுயென்று மானங்கொண்டு தாங்களே கழுக்களிலேறத்துணிந்து கோபத்தினலு மானத்தினலும்போய்க் கழுமரங்களிலேறி யிருந்தார்கள் அப்படிப்பேரேறாத சமணர்களையெல்லாம் சைவாசாரத்தைக்கொண்டவர்கள் ஒவ்வொருத்தராகப் பிடித்துப்பிடித்து அந்த முத்தலைக் கழுமரங்களிலே ஏற்றியிருத்திக்கொன்றார்கள் பின்பு அந்தச்சமணர்களுக்குப் பாரம்பரியமாக அடியார்களானவர்கள் சாவப்பயந்து மனங்குலைந்து விபூதி பூசிக்கொண்டார்கள் அந்தவிபூதிகிடையாமல் சிலர் பசுவின்கோமயத்தை யெடுத்திட்டுக்கொண்டார்கள் அதுவும் கிடையாதே சிலர் பசுவின்கன்றைத் தோள்மேலே தூக்கிப்போட்டுக்கொண்டார்கள் விபூதி-கோமயம்-பசுவின்கன்று இந்தமூன்றுங்கிடையாத சிலர் விபூதிபூசினநெற்றியுடனேநெற்றியைமோதிப்பூசிக்கொள்ளக்கோமயத்திலுமப்படியேமோதியிட்டுக்கொண்டும் இப்படியாகத் தங்கள்பாசங்களைவென்று பிழைக்க எண்ணினவர்களைக் கொல்லாமல் விட்டுவிட, கழுவிலேறி யிறந்தவர்களையெல்லாம் பருந்து-காகம்-கழுகு-நாய்-நரிகள் முதலான வெல்லாந்தொடர்ந்து கௌவிப் பிடித்திழுத்துத் தின்னக் கழுவிலே கிடந்தார்கள் அப்போது பாண்டியன் சம்பந்தப்பிள்ளையாரை வணங்கித் துதித்துக்கொண்டு சுவாமி இப்போது நீர் இட்ட ஏடு எல்லாருங்காண ஆற்றுக்கெதிரே சென்றதே அது எங்கேயென்றான் அதற்குச் சம்பந்தப்பிள்ளையார் பாண்டியனே பார்ப்பாயாக இ

ப்போதே நாம் மதுரை வெள்ளியம்பலவாணரருளாலே வருவிக்கிறோமென்று வாதுவென்ற சம்பந்தர் ஆற்றங்கரைமேலே மேற்றிசையைநோக்கிச் சென்றார் அப்படிச்செல்லுகின்ற சம்பந்தர்காண இட்டஏடு காதவழிசென்று அப்புறம் காணமல்மறையவே ஆச்சரியப்பட்டு அங்கே கும்புகூடிக் கொல்லைகளிலே மாடுகள்மேய்த்துநிற்கிற சிலரைக்கண்டு நீங்கள் இந்த எல்லைக்குள்ளே ஏதேனும் விசேடமுண்டானல் சொல்லுங்களென்று கேட்க அந்த இடைப்பிள்ளைகள் நாங்கள் ஒன்றுங் கண்டிலோமென்ன சம்பந்தப்பிள்ளையார் எப்படியானாலும் இங்கே விசேடமுண்டாயிருக்கவேணுமென்று சமணராகிய பகைவரோடு வாதுசெய்ய விடையருளின விடைக்கொடிக்கடவுளை வேதவாக்காலே பாடியருளினர் அப்போதந்தப்பாட்டுமேல் கருணைகொண்டவராய் அங்கே சயம்புலிங்கமாக பருத்த அரையையுடைய வில்வவனத்திலே எதிரேகண்டு வணங்கித்துதித்து சண்பைநாட்டுச்சம்பந்தர் வலங்கொண்டு பின்னுந்துதித்து எதிரே நிற்க வேப்பமாலைப்பாண்டியன் அந்தச்செய்திதெரிந்து அங்கே சேனைகளுடனே வந்து சேர்ந்தான் அப்போது அந்த மகாலிங்கத்திலிருந்து கடவுள் ஆயிரம்பிறைதொழுத ஒரு கிழப்பிராமணராகத்தோன்றி முத்தமிழ்க்கரசரைக்கண்டு நீ என்பிள்ளையே பிள்ளையிலும் என்னுடைய இளையபிள்ளை போல்வாய் வாவென்றுநீறுசாத்தி மனத்திலே மிகுந்த அன்புதோன்றத் திருவருள் சுரந்துநிற்கஅப்படி நிற்கின்ற பிராமணரை அக்காலத்தே தமக்கு ஞானந்தந்தகடவுளிவரோயென்றுகொண்டு வணங்கி ஐயரே இந்தஆற்றுநீரிலேயானிட்ட ஏடு எதிரேறிவந்ததை எடுத்தவர் நீரோஆகவேண்டும் ஆனல் அந்த ஏடு உம்முடைய மகனுக்குத் தக்கதென்று அதைக்கொடுத்தருளவேணுமென்று மிகவும் வேண்டுகொண்டார் அறுமுகக்கடவுள்போலுஞ்சம்பந்தர் அதற்கு மாயவேடங்கொண்டு நின்ற பிராமணர் சம்பந்தரைப்பார்த்து நீர் இன்னமும் நம்முடைய ஆலயங்களெல்லாம் சென்றுபாடி கெட்டவழியிலே செல்கிறவர்களை நல்வழிபோகச்செய்து பின்பு நமது பரிசுத்தமானவீட்டைப் பெறக்கடவீரென்று ஆசீர்வதித்து அந்த ஏட்டைக்கொடுத்துவிட்டு மின்னல்தோன்றிமறைவதுபோல மறைந்தருளினர் அப்படிதந்தையானகடவுள் பின்னும் தமக்குத்தந்த ஏட்டைவாங்கிககொண்டு ஞானப்பாலுண்ட சம்பந்தர் பாண்டியனுக்குக்காட்டி இந்த ஏட்டை மதுரேசர்தாமேகொண்டுபோய் நான்மிகவும் வேண்டிக்கேட்கக் கொடுத்தனரென்றுசொல்ல பாண்டியன் பாம்பைக்கச்சாகக்கட்டின கருணைக்கடலினிடத்திலேதோன்றியகாரணப்பொருளான ஞானப்பாலுண்ட உம்முடைய பெருமையாலுண்டாவதைத் தெரியாமல் ராஜனென்கிற பலங்கொண்டு உம்மை இவ்வளவு சோதிக்கலானேன் அடியேன் ஆகையால் இனிமேல் இந்தப் புல்லறிவாண்மையாற்செய்த குற்றத்தைப்பொறுத்தருளவேணுமென்று மிகவும்வணங்கி வேண்டிக்கொண்டான் அப்படிவேண்டிக்கொண்டு பின்பு மேருவைமலையாகக்கொண்ட ஏடுகொடுத்த கடவுளுக்கு பொன்னாலே நெடியசிகரத்தையுடையகோயிலும் மண்டபமும் மேகமண்டலத்தைக் கிழித்துச்சென்று கடவுள்போலவே சந்திரனைச்சூடுகின்ற கோபுரங்களும் கல்லாலேமதில்களும் பிரகாரங்களும் எல்லாம் கண்டு களிக்கச்செய்தான் அன்றுமுதல் அந்தத்தலத்துக்கு திருவேடகமென்று பெயருண்டாயிற்று பின்பு பாண்டியன் அந்தஏடகத்திலெழுந்தருளியகடவுளைச் சமணரோடுகூடியிருந்த பாவங்களெல்லாம் போகப்பூசைசெய்து தனதுபாசமுந் தீர்ந்துகொண்டான் கிரேதாயுகத்திலே விஷ்ணுவும், திரேதாயுகத்திலே கருடனும், துவாபரயுகத்திலே நாகர்வேந்தனும், பூசைசெய்து திருவருள் பெறலான நிராமயமான அந்த லிங்கத்தை கடையுகமான கலியுகத்திலே இந்தப் பாண்டியன் பூசைசெய்து அவ்விடத்திலே பெரியவூருமுண்டாக்கி அங்கேதானே சம்பந்தப்பிள்ளையாருடனே சிலகாலம் ஸ்தலவாசஞ்செய்து பின்பு மதுரைக்கு வந்து சேர்ந்திருக்குநாளிலே விபூதிசாதனமாகியசெல்வம் எங்கும்பிரபலமாகச்சிலகாலம் மதுரையிலேயேவாசஞ்செய்து பின்பு ஞானசம்பந்தர் வடதிசையிலுள்ள சிவஸ்தலங்களையும் கண்டு வணங்கிப் பாடவேணுமென்றெழுந்து மதுரேசரையும் அங்கயற்கண்ணம்மையையும் வணங்கி வேண்டிய வரங்களெல்லாம் பெற்று விடையுங்கொண்டுதமிழ்நாடெல்லாம்கண்டுவணங்கிச் செல்பவருடனே மங்கையர்க்கரசியரும் குலச்சிறைநாயனரும் பாண்டியனும் திருஞானசம்பந்தமூர்த்தியைப் பிரியமாட்டாதவர்களாய் அன்புசெய்து அவரிடத்திலே நேசமான அன்றுமுதலுண்டான இன்பமெல்லாம் இப்போதுதுன்பமாகி முன்னே இழுக்கச்செல்லசம்பந்தப்பிள்ளையாரும் அப்படியே அன்புசெய்து தமதுபின்னேவருகிற நண்பினருக்கெல்லாம் இனி நம்மிடத்திலே நீங்கள் அன்புமறவாமல் பூதிசாதனவாழ்வுநிலைபெறவும் கடவுள்கீர்த்திபுலப்படவும் வாழுங்கள் இதைவிடாமல் நில்லுங்களென்றுசொல்லி விடைகொடுத்துச் செல்ல அப்படியே தங்களை அடிமைகொண்ட சம்பந்தப்பிள்ளையார் அருள் வார்த்தையைத் தடுக்கப்பயந்து அவருடைய தாமரைமலர்போலுஞ் சேவடிகளைவணங்கி மீண்டு சேனைகளு

டனே பாண்டியன் மதுரைக்குவந்தான் தாமரைமாலையணிந்த சமணசிங்கமானவர் சோழநாட்டுக்குவந்தார் இப்படி ஞானமாகிய மதஜலமொழுக ஞானசம்பந்தரென்னு மானமர்யானைவந்து கடம்பவனத்திலேநெருங்கின இழிதொழிலரான சமணரென்னுமரங்களையெல்லாம் ஒடித் தெறிந்து வெண்ணீறான பெருமைகொண்ட தூளியை அள்ளி உலகமெல்லாநிரம்பத்தூற்றிவிட்டது இப்படி முதலிலேபாண்டியன் சுரந்தணிக்கவேண்டி மதுரை ஆலயத்துச்சாம்பலையள்ளிக்கொண்டு வரச்சொல்லிக் கூனுஞ்சுரமுந் தீர்த்தபடியினாலே விபூதிகளெல்லாவற்றிலும் அந்தக்கோயிலின் மடைப்பள்ளிப்பூதியேசிறந்ததாயிற்று.

சமணரைக்கழுவேற்றியபடலம் - முற்றுப்பெற்றது.

---

அறுபத்துநான்காவது

## வன்னியுங் கிணறும் இலிங்கமுமழைத்தபடலம்.

### எழுசீரடியாசிரியவிருத்தம்.

சென்னிவெண்டிங்கண்மிலைச்சியமதுரைச்சிவனருளடைந்தசம்பந்தர்
துன்னிருஞ்சமணைக்கழுமுனையேற்றித்துணித்தவாறிசைத்தனம்வணிகக்
கன்னிதன்மன்றற்கரியினைமாற்றாள்காணவக்கண்ணுதலருளால்
வன்னியுங்கிணறுமிலிங்கமுமாங்குவந்தவாறெடுத்தினியுரைப்பாம்.

பொன்னிறமான மலர்களையுடையதாழைகள் வேலியாகச்சூழ்ந்த கடற்கரையோரத்திலே ஒருபட்டினத்திலேயிருக்கிறவன் அவனோ மின்னுகின்ற ரத்தினாபரணங்களையுடைய ஒருகுலவர்த்தகன்அவன் பலவகையான செல்வங்களாலே சிறந்தவன் தனக்குப்பிள்ளையில்லாமல் தனது கற்புடைமனைவியுடனேகூடி பலவித தருமங்களையுஞ்செய்துபிரகாசிக்கின்ற சந்திரன்போலு முகத்தையுடைய ஒருபூங்கொம்புபோல ஒருபெண்பிள்ளையைப்பெற்று வளர்த்து தங்கள் தனவைசிய குலத்துக்குத்தக்க ஒருமருமகன் ஆனால் அவன்முன்னே ஒரு தாரம்கலியாணஞ்செய்துகொண்டவன் அவன் முத்தமிழும் வழங்குகின்ற மதுராபுரியிலிருக்கின்றவன் ஆனாலும் அவனுக்கேதன்னுடைய தவபுத்திரியான ஒருபெண்ணைக்கொடுப்பதாகத் தன்குலத்தாருக்கெல்லாம் விளங்கச்சொல்லிவைத்துப் பின் சிலநாள்கழியவூழ்வினைவலியால் ஆருயிர்தீர்ந்தான் அவனுக்கு உடம்புபோன்ற கற்புடைமனைவியானவள் தானும்தன்கணவனுடனேகூட இறந்துபோகிறதற்குத் துணிந்துமுடிந்தாள் பின்பு அவ்விருவருக்கும் கடல்போற்கிளர்ந்த சுற்றத்தார்கள் செய்யவேண்டிய கடன்களைச்செய்துமுடிந்தபின்பு அந்தச்செய்தி மதுரையிலிருக்கிற உரிமைமருமகனுக்குத் தெரியும்படியாக ஓலையெழுதியனுப்பினார்கள் அந்த ஓலைவந்துசேர வாங்கிவாசிக்க அதில்தன்னுடைய தயவின்மிகுந்தமாமனும் அவனது கற்புடைமனைவியும் இறந்தாராக அவனுக்கு அளவில்லாத செல்வங்களுண்டு இன்னம் அவனுக்கு வெகுநாள் பிள்ளையில்லாதிருந்து அநேகதருமதானங்களைச்செய்து பெற்ற ஒருபெண்ணும்வளர்ந்து பக்குவமாயிருக்கின்றது அந்தப்பெண்ணைத்தனக்கே கொடுப்பதாகப் பேசியிருந்தான் ஆகையாலே தானே இவிடம்வந்து அந்தப்பெண்ணைக் கலியாணஞ்செய்து கொண்டு அவனுக்குள்ள செல்வங்களையும் ஒப்புக்கொள்ளத்தக்கதென் றெழுதியிருந்த சமாசாரங்களெல்லாந் தெரிந்துகொண்டு கீழேவிழுந்து தரைமேற்புரண்டுபுரண்டழுது பெருமூச்சுவிட்டுக் கண்ணீர்வெள்ளத்திலே முழுகிவிம்மி அம்மவோவென்றுபிரலாபித்துச்சோகிக்க அப்போது அவன்பந்துக்கள் சிநேகர்கள்முதலான உறவின்முறையாரெல்லாரும் வந்து தழுவிக்கொள்ள இவனும்அவர்களைத்தழுவிக்கொண்டழுதான் கரைந்தானாக அங்கேவந்தவர்களெல்லாருந்தேற்றத்தெளிந்து தன்னைச்சூழ்ந்த துன்பத்தை ஒருவகையாகவிட்டுத் தன்னுடைய மாமனிருக்கும் ஊருக்குப்போகத்துணிந்து அங்குள்ள உறவினர் சிலருடனேகூடி அந்தமதுரையைவிட்டு இந்தப்பட்டினத்துக்குவந்து புகுதுகிறவன் வரவு தெரிந்துவந்து தன்னை விசாரிக்கிறவர்களைத் தழுவித்தழுவிக் கலந்துபேசி அவர்களை அனுப்பிவிட்டுவந்த முல்லைமாலை யணிந்த வர்த்தகன் தன்மாமன் வீட்டிலேபோயிருந்தானாகச் சிலநாள்சழிந்தபி

ன்பு வர்த்தகரில்சிங்கம்போன்ற அவன்தனக்கென்று குறித்திருக்கிறபெண்ணை மதுரைக்குக் கூட்டிப்போய்க் கலியாணஞ்செய்துகொள்ளுகிறேனென்று அங்குள்ள உறவினருக்கெல்லாந் தெரியச் சொல்லிக்கொண்டு தன்மாமன் சம்பாரித்துவைத்திருந்தபொருள்களையெல்லாம் தன்வசமாகப்பண்ணிக்கொண்டு மதுரையைநோக்கிப் புறப்படும்போது தன்கூட வழிவிட்டுவருகிறவர்களை நிற்கச்சொல்லிப் பின்பு மதுரைக்கு முன்னேபோகவேண்டியவர்களை முன்னேபோகும்படி அனுப்பிவிட்டுத் தானும் தன்னுடைய பரிஜனங்களும் தனக்குரியபெண்ணுமாக நாளொன்றுக்கு அரைக்காதவழியாக வருகிறவன் ஒருநாள்சூரியன் அஸ்தமிக்குமுன்னே இங்கேயிருந்து நாளைக்குப்போவோமென்று புறம்பிய மூதூருக்குப்போய் அங்கே கடவுள்கோயில் கிணற்றிலே நீராடி ஒரு வன்னிமரத்தடியிலே சமையல்செய்து போஜனமானபின்பு மேருமலையைவில்லாகவுடைய கடவுள்கோயிற்புறத்தில் ஒருபடியின்மேலே தலையைவைத்துக்கொண்டு தூங்கும்போது விதிவலிவந்துகூட அங்கேவந்துகொல்லும் விஷத்தைக்கொண்ட வாயையுடைய ஒருநாகமானதுகடித்தது அப்படிக்கடித்தவுடனே அதிகவிலைபெற்ற நல்ல ஆபரணங்களையுடைய அந்தமதுரைவர்த்தகன் நஞ்சுதலைக்கேறி இறந்துபோனான் அப்போது அங்கேகூடவிருந்தஅவன்வேலைக்காரர்கள் ஐயோவென்று கூச்சலிட்டு அழுதுசுற்றிக்கொள்ளவேலைக்காரிகள் மாரடித்துக்கொண்டு ஒப்பாரிவைத்தழும்போது அந்த ஆண்சிங்கம்போன்ற வர்த்தகன் உடம்பைத்தீண்டாமல் கூடவேவந்த தாமரைமலரைப்பூத்த கொடிபோன்ற பட்டினத்துவர்த்தகன் பெண்ணானவள் எழுதினசித்திரம்போல் அசையாமல் ஒருபுறத்திலே நின்று அந்தஆண்சிங்கம்போன்ற மதுரைவர்த்தகன் பாம்புகடிக்கப்பட்டு உடனே இறந்ததும் வெற்றிவேல்போலுங் கண்களையுடைய பெண்டுகளெல்லாம் கைகளைநெரித்துக்கொண்டழுகிறதும் கீழேவிழுகிறதும் சுற்றிலும் உறவினர்கள்சூழ்ந்து அழுகிறதும் சோர்கிறதும் எல்லாங்கண்டு இளங்கிளிபோன்றபேச்சுகள் தோன்ற வேடன்எய்த அம்புதைத்தமயில்போல் விழுந்து வருந்திமயங்கி கூரியகண்கள் உள்ளேசெருகி உயிருமோய்ந்து அக்கினியிலேவிழுந்த பூமாலைபோல் உடலுஞ்சோர்ந்து கைகளுஞ்சோர்ந்து கால்களுஞ்சோர்ந்து இளமைபொருந்திய பெட்டையன்னம்போன்ற அந்தப்பெண்ணானவள் இடிமுன்னேவிழக்கண்டாற்போற் கீழேகிடந்தாளல்லது வேறொன்றுமில்லை மூர்ச்சையாய்ப்போனாள் இறந்தவர்த்தகன்மேலே பூங்கொம்பு சாய்ந்தாற்போல் விழுந்தழுகின்ற வேலைக்காரிகள்பார்த்து ஐயோ செட்டி உயிருடனேகூட நமதுதங்கை உயிரும் போயிற்றேவென்று கைகளாலெடுத்து முதுகைத்தழுவி மடியிலே கிடத்திக்கொண்டு வஸ்திரத்தாலே முகத்திலே வீசி இளைப்பாற்றிக் கொஞ்சம் மூச்சுவரச்செய்தார்கள் அப்போது அந்தப்பெண் உடம்பைவிட்டுப்போன உயிரானதுதிரும்பித் தன்உடம்பிலேவந்து புகுந்தாற்போல மூக்கினிருபுறத்திலுஞ் சுவாசந்தோன்ற கண்களும் குளங்களிலே நீலம்பூத்தாற்போல் விழிக்க அவ்வேளையில் அந்தப்பெண்ணை நாண் மடம் அச்சம் பயிர்ப்பு ஆகியநான்கும் நான்குதிக்கிலும்வேலிபோல் வளைந்துகொள்ள கைகளால்மோதிக்கொண்டு கூந்தல் அவிழ்ந்துவிழ உருக்கின நெய்த்துளிபோல கொங்கைமுகட்டிலே கண்ணீர்சோர மெள்ளஅழுவாள் சுற்றிலும்பார்த்து வெட்கமாகிய கட்டுக்குளடங்கிப் பேய்பிடித்தபெண்போற் குலைகுலைந்துதேம்பிவிம்மி மேனிமழுங்கி குறையாதசெல்வத்திலேபிறந்து ஒருநாளாவதுதுன்பமென்பதைச்சொப்பனத்திலுந்தெரியாதவள் தனக்கு நாயகனாவான்மேலே அன்பென்பதாகிய தோருருவாகி நிறையாகிய வரம்பழிந்து ஒருபெண்தெய்வமிருந்து வாய்விட்டலறினாற்போலப் புலம்புகின்றாள் ஓ என்னாயகனே ஓ என்னிரண்டுகண்மணியே ஓ என்னைப்பெற்ற தந்தைக்கு உயிர்போலும் அருமை மருமகனே ஓ கட்டிளமையோனே ஓ முல்லைமாலையணிந்ததலைவனே ஓஓ வணிகர்கள்குலரத்தினமே இப்போது விடப்பாம்பால் கடிக்கப்பட்டாயோ ஆனால் உன்னுடைய உடம்புநிழல்போன்ற என்னை இங்கேவிட்டிட்டு மறைந்துபோகலாமோ ஆனால் நீர்போனது சுவர்க்கலோகத்திலுள்ள பெண்களைக் கலியாணஞ்செய்துகொள்ளவோ அல்லது நமதுகுலத்தானாகிய குபேரனுடைய அளகாபுரியிலுள்ள பெண்களைக்கலியாணஞ்செய்துகொள்ளவோ அல்லது உன்னைக்கடித்தநாகலோகத்திலுள்ள பெண்களைத்தழுவவோ ஓ என்பிராணநாயகா என்னை இந்தநாட்டிலேவிட்டிட்டு வஞ்சகமாக நீர்தனியே போகுதற்குக்காரணமென்ன அல்லது தென்னுலகமாகிய எமலோகத்துக்குப்போனீரோ அங்கே மாமன் மாமியைக்கண்டபோது உன்மாமன் தன்னிரண்டு கண்களுங்குளிரத்தழுவினானா நானும் உம்முடனேகூடவந்தால் அவ்விருவரையும் என் கண்கள்குளிரக்காணேனா அப்படிக்காகாமல் என்னையிங்கேவிட்டிட்டீர் என்னையல்லாமல் உம்முடைய பரிஜனங்களையுங் கைவிட்டீர் நீர் தனியேபோய் எவ்வளவுசுகங்கண்டீர் ஐயா ஐயோ உரிமைமருமகன் பாம்புகடித்திறக்கவும் நான்மயங்கினமனத்துடனே இங்கேயிருந்து இப்படித்துன்ப

ப்படவும் என்னைத் தவஞ்செய்துபெற்றவர்களுக்கு நல்லபலன் சித்தித்ததல்லவா இந்தக் கண்கலக்கத்தை அவர்கள் முழுதும்காணுமல் முன்னே இறந்தல்லவோ சோகநிவிர்த்தியானார்கள் கிடையாதபலன் அவர்கள் முன்னே இறந்துபோனதேஎன்தாய் தகப்பனைப்போல ஒருவரும் இப்படிப்பட்டபலனைப் பெறமாட்டார்கள் ஐயையோ உமக்குப் பிரியமான மாமன் என்னைப்பெற்று வளர்த்து அக்காலத்திலே தானே உறவினர்களறிய உமக்காகவே என்னைநிச்சயித்துப் பின்பு தன்பிரியநாயகியுடனே இறந்துபோனான் நானும் அப்படியே என்உயிர்போக வெறுஉடம்பு இங்கே கிடக்குமோ இதோ கூடவேமடிகிறேனென்று தன்பிரியமான சேவலையிழந்த அன்றிற்பேடுபோல ஒற்றைக்குரல்விட்டழுதாள் அப்படி அழுகிறசத்தங்கேட்டு அந்தப்புறம்பிய மூதூரரரெல்லாம் நித்திரைதெளிந்தெழுந்து துன்பங்கொண்டு வருந்த அந்தவேளையில் திருஞானசம்பந்தர் சிவஸ்தலங்களெல்லாம்போய்ப் பதிகங்கள் பாடிக்கொண்டு அன்றைத்தினம் அந்தப்புறம்பிய மூதூருக்குவந்து அங்கொருசைவமடத்திலிறங்கி யிருந்தவரும் இந்த அழுகைக்குரல்கேட்டு இதுஎன்னவென்று ஆள்விட்டு விசாரித்து உடனே தாமேகோயிலுக்குவந்துகூடி ஏடிபெண்ணே நீயார் நடந்தசங்கதிகளென்ன வென்ன அந்தச்செட்டிப்பெண்வணங்கி தன்குலமும் தன்னைப்பெற்றவன் மருமகனுக்கென்று தன்னைநிச்சயித்து வைத்திறந்துபோனதும் பின்பு தனக்குரியவனுன இவன்வந்து கூட்டிக்கொண்டுவந்து இங்கே இறங்கினபோது நடந்ததும் எல்லாம்தெரியவிண்ணப்பஞ்செய்துகொண்டாள் அதுகேட்டஉடனே சம்பந்தப்பிள்ளையார் தனியேஇருந்தழுது உயிர்விடஎண்ணுகின்ற அந்தச்செட்டிப்பெண்ணுக்குத் தாமே தாயுந்தந்தையுமாக பாம்புகடித்திறந்தவன் பக்கத்தில்வந்து அவன் உடம்பெல்லாம் அவிழ்தவடிவமாக நினைவுகொண்டு கிருபாநோக்கம்வைக்க அப்போதே தீவாய்ந்தநஞ்சு அந்தச்செட்டியை விட்டுப்பிறிந்துபோயிற்று உடனே செட்டிதூங்கிவிழித்தவன்போல் எழுந்தான் அவனை எல்லாருங்கண்டு சந்தோஷித்து எல்லாராலும் வணங்கும் பெருமைபெற்ற திருஞானசம்பந்தமூர்த்தியைத் தொழுது தோத்திரஞ்செய்தார்கள் அப்படி அவர்கள் ஆனந்தக்கடலிலே முழுகபெட்டையன்னம்போன்ற அந்தச்செட்டிப்பெண் தித்திப்பானதேனைப்பொழிந்துகொண்டு ஒருபுறத்திலே தாமரைமலரைப்பூத்ததாகிய ஒருகொம்புபோனின்றுள் ஆனாலும் தனதுநாயகனிறந்தபோதும் அவன் உயிர்பெற்றெழுந்தபோதும் தான் அந்தமதுரைவர்த்தகனுக்கு மாமன்மகளாயிருந்தும் அவனைத்தொடாமல் நிற்கிற அன்புநிலையும் கற்பின்குணமும் அதிசயமாகக்கண்டு பார்வதிஞானப்பாலுண்டபிள்ளையார் அந்தச்செட்டியைப்பார்த்து வாரும்செட்டியாரே நீரோ உம்முடைய குலத்துக்கெல்லாம் ரத்தினம்போல் விளங்குகின்றீர் ஆனல் உம்முடையமாமன்பெற்ற லட்சுமிபோல் வாளான இந்தப்பெண்இன்பமடையுங்காலத்தில் துன்பம்வந்துசேராமல் உம்முடைய உடம்பைத்தொடுவதெப்போது இனிக்காலம்வீண்போகாமல் நீர்இந்தப்பெண்ணை இங்கேதானே திருக்கல்யாணஞ்செய்துகொண்டு போகவேண்டுமென் றருளிச்செய்ய சிவந்தகண்களையுடைய ஆண்சிங்கம்போன்ற செட்டியானவன் பிள்ளையார் திருவார்த்தையைத்தலைமேற்கொண்டு பிரமாவினுலே சிருஷ்டிக்கலான நான்கு சாதிகளையும் வழுவாமல் ரட்சிக்கவல்ல சுவாமி இங்கே என்குலத்துச் செட்டிகளொருவருமில்லாமல் சாட்சிகளுமில்லாமல் எப்படிக்கலியாணஞ் செய்துகொள்வதென்று வணங்கிக்கேட்க பிள்ளையார் உன்னுடையமாமன் இந்தப் பெண்ணைப்பெற்றபோதே உனக்கே இந்தப்பெண் உரியவளென்று நிச்சயித்து வைத்தது உறவினரெல்லாருந்தெரிவார்களல்லவோ இதையல்லாமல் உமக்கு இந்தவன்னிமரமும் கிணறும் இலிங்கமுமே சாட்சியாக அமையும் ஆகையாலே ஓய்செட்டியாரே இங்கேதானே என்சொல்லைக் கடவாமல் கலியாணஞ்செய்துகொள்ளுமென் றருளிச்செய்ய மதுரைச்செட்டியான குற்றமற்ற மனத்தையுடையவன் சீகாழிப்பிள்ளையாரைவணங்கி சுவாமிதேவரீரே தாய்-தந்தை-குரு-உறவு-தெய்வம்-சிநேகர்-எல்லாமென்று பிள்ளையார்சொன்னபடியே அங்கே கலியாணவேள்வியை முறைப்படி செய்துகொண்டு அப்படித்தான் கலியாணஞ்செய்துகொண்டமாமன்மகளுடனே வணங்கிப்பிள்ளையார் அருளும் விடைபெற்றுக்கொண்டு ஏவல்செய்கிறபெண்கள் புருடர்கள் எல்லாருங்கூடிவரக்கூடித் தனதுசுதேசமான மதுரை மூதூருக்குப்போய்த் தன்மாமன்மகளைக் கலியாணஞ்செய்துகொண்டுவந்ததை அங்குள்ள உறவினரெல்லாருங்கேட்டுச் சந்தோஷிக்க தானும் சந்தோஷித்து வாழ்ந்திருந்தான் பின்பு தன்

னுடைய பெரிதான திரவியங்களும் மாமன் சம்பா
ரித்துவந்த திரவியங்களும் சேர்ந்துகூடிக் குறையா
த செல்வனான குபேரன்போல் பெரிதான வர்த்த
கங்கள் செய்து அந்தச்செட்டியானவன் தனக்கு
இன்பத்தைத்தருகிற பாரிகள் இருவரும்பெற்ற பி
ரியமுள்ளபிள்ளைகள் மகிழ்வுசெய்யச் சுகமேவாழு
ங் காலத்தில் மூத்தவளுடைய பிள்ளைகள் மிகவும்
மூர்க்கர்களாயிருக்க இளையவளுக்கொரோ பிள்ளையு
ண்டாகி இந்தப் பிள்ளையும் அந்த மூர்க்கப்பிள்ளை
களுடனேகூடி மிகுந்தசெல்வஞ் சிறந்த மதுரைவீ
தியிலேபோய் விளையாடும்போது மூத்தவள்பிள்ளை
கள் இளையவள்பிள்ளையைக் கோபித்தடித்தார்கள் அ
தற்கு அந்தப்பிள்ளையைப்பெற்ற இளையவள் மூத்த
வள்பிள்ளைகளைத் திட்டிவைதாள் அதற்கு மூத்தவ
ள் கோபங்கொண்டு இளையவளைப்பழித்து நீஎந்தவூ
ர் என்ன சாதியாருடையமகள் யாவர்பார்க்க அக்கி
னிசாட்சியாக எனதுநாயகன் கலியாணஞ்செய்து
கொள்ளவந்தவளோ நீயேவலிய என்புருஷனுக்கு
ஆசைப்பட்டுவந்த காமக்கிழத்தியாகிய வுனக்கு கற்
புடைமனைவியாகிய என்னோடுபேசும் பெருமையும்
வாயுமுண்டோ அப்படிஎன்போலாகஎனதுநாயகன்
அக்கினிசாட்சியாகக் கலியாணஞ்செய்துகொண்ட
தற்கு வேறேசாட்சிகளுண்டானால் எல்லாருக்குமு
ன்னே தெரியப்படுத்து பார்ப்போமென்ன இளைய
வள் நெருப்பிலே விழுந்தகொடிபோல வாடிச்சோ
ர்ந்து நாணமிகுந்துபாம்புகடித்த அந்தனாள்ஞானச
ம்பந்தர்அருளாலேஎனதுநாயகன் புறம்பியநாதனாகி
ய இலிங்கமும் வன்னிமரமும்கிணறுமேசாட்சிகளா
க என்னைக்கலியாணஞ்செய்துகொண்டது அந்தமூ
ன்றும் சாட்சிகளா யிருக்கின்றனவென்ன அதற்கு
மூத்தவள்சிரித்து நல்லதுநல்லது உன்னுடையகலி
யாணத்துக்கேற்றசாட்சிகளே சொல்லவந்தாய் அந்
தமூன்றுசாட்சிகளும் இங்கேவந்துருஜுச்சொல்லு
மாகில் அதுவும்மெய்தானென்றுசொல்ல அதற்கு
வேறுபடாத மயிற்சாயலையுடைய இளையவள் அதிக
துன்பங்கொண்டு பெருமூச்சுவிட்டு இல்லிற்குள்ளே
போய்க் கைவிரல்களை நெரித்துக்கொண்டுவயிற்றை
ப்பிசைந்துகண்ணீர்விட்டழுதுகொவ்வைக்கனிபோ
லும் வாய்துடித்து நாணம்விஞ்சிக்கூசி ஐயையோ
தெய்வமே சிறியவளானநான் இனியென்னசெய்வே
ன்தாயும்தந்தையும்இறந்துபோக ஒண்டியாய்இங்கே
வந்தசிறியேனுக்கு இங்கேயாரிருக்கிறார்கள் சுவாமி
முற்காலத்திலேதுன்புற்றஒருசெட்டிப்பிள்ளைக்கு அ
ப்போது மாமனாகிப்பங்காளிவழக்கைத்தீர்த்து அ
வன்உரிமையை அவனுக்கே ஆகச்செய்த கடவுளே
எனக்குமாற்றாளானவள்சொல்லுகின்ற குற்றங்களை
ப்போக்கி யருளவேணுமென்று அன்று இராத்திரிப்
போசனமில்லாமல் நித்திரையுமில்லாமல் வருந்தி ம
றுநாள் பொற்றாமரைக்குளத்திலேநீராடி ஆகாயத்தி
லிருந்து இறங்கினவிமானக்கோயிலிலே எழுந்தரு
ளியிருக்கிற சொக்கர் சந்நிதிமுன்னேபோய்ப் பாத
ங்களிலேசேவித்துத் தன்குறைகளெல்லாம் சொல்
லிவேண்டுகிறதாவதுசுவாமி அக்காலத்தேஎன்னை எ
னதுநாயகன் கலியாணஞ்செய்துகொண்ட இடத்தி
லே அந்தக்கலியாணத்துக்குச்சாட்சியாக நின்றவன்
னிமரமும் கிணறும் இலிங்கவடிவானநீயும் அப்படி
யேஇங்கும் இன்றுவந்துஎனதுமாற்றாள் சிரித்திகழ்
வதைப்போக்கி என்னைரட்சியாமல்விட்டால் இறந்
துபோவேனென்று பிரதிக்கினைபண்ணினாள் அவ
ளோ கற்பினது நிலையானபுகழை நிலைநிறுத்தவந்த
வள் ஆகையாலே அவள் அப்படித்துன்புற்றுவருந்
திநிற்க அவள்துன்பத்தைக்கண்ட மதுரேசரான கி
ருபாமூர்த்தி தமது அளவில்லாத அருளினாலேஎல்
லாருங்காண கோயிலுக்கு வடகீழ்த்திசையில் முன்
னேசாட்சியாயிருந்தவன்னிகிணறுஇலிங்கம் ஆகிய
மூன்றும் விரைவில் அங்கேவந்திருந்தனஅப்போது
அந்தமூன்றையும் இளையவள்கண்டு மூத்தவளைக்கூ
ட்டிக்கொண்டுபோய் திருவாலவாய்க்கடவுள் முன்
னேவந்து வணங்கிகண்டுகொள் இதுதான் ஆகாசத்
தைஅளாவினவன்னிமரம் இதுவேகிணறு இதுவே
இலிங்கம் இந்தமூன்றுந்தான் என்கலியாணத்துக்கு
ச் சாட்சியாயிருந்தவையென்ன கண்டமூத்தவளும்
குனித்ததலையைத் தூக்கிநிற்கஅந்த இடத்திலுள்ள
மூன்றும் அன்றுபோலவே இன்றும் சாட்சியாக இ
ங்கேதோன்றின இதுஎன்னஅதிசயம் ஒருவராலுந்
தெளியக்கூடாததெய்வமும்எளிதாகவந்து உள்ளங்
கைநெல்லிக்கனிபோல இளையவள் கைவசமானால்
கற்புடைய பெண்களுக்கு அரிதாயபொருளொன்று
மில்லையென்று இளையவள்கற்புநிலையும் சிவனிடத்தி
லே அவள்வைத்தஅன்பும் அந்தச்சிவன்அவளுக்கு
ச்செய்த அருளையும் அதிசயித்துப்பார்த்து அந்தம
துரையிலுள்ளயாவரும் ஆனந்தித்து முல்லைமாலைய
ணிந்தவர்த்தகன் கொண்டமூத்தவள் ஒருத்தியுந்து
ன்பங்கொள்ள உள்ளசெட்டிகளெல்லாம் மூத்தவ

ளை நீபொல்லாதகொடியபாதகியென்று பழிக்க நீ பொய்சொல்லிக்குற்றமற்ற குணத்தையுடைய இளையவளைக் குடிப்பழுதுசொன்னாய் ஆகையால் நீஎனக்குப்பெண்டாட்டி ஆகாயென்று கொண்டகணவனும் அவளைநீக்கிவிட்டான் அப்போது இளையவள் புருஷன்காலிலேவிழுந்து ஐயாஎன்னுடையகற்பை நிலைநிறுத்தி வெளியிட்டவள் எனக்குமூத்தவளல்லவோ பின்னும் தாயில்லாத எனக்குத்தாயாகநானும் இவளும் ஒருமித்துவாழக்கடவோம் நீர்கோபஞ்செய்ய வேண்டாவென்றுவேண்டி அவளோடுறவுகொண்டு உடம்பிரண்டாகவும் உயிரும்பொருளும் ஒன்றாகி மனத்துள்ள பொறாமையை விட்டுப்பிள்ளைகளும் ஒருமைப்பாடாக ஐந்தலைநாகம்விழுங்கும் இணைபோலத்தம்மில் நன்றாக அன்பும் இன்புங்கொண்டு இருவருஞ்சுகித்திருந்தார்கள் பின்பு அருந்ததிபோலும்கற்புள்ள இளையவள்நாயகனுக்கு ஆயுளும் நீங்காதசெல்வமும் பொருள்மிகுதியும்கனமும் ஒழுக்கமும் பெருமையும்லாபமும் தவநெறியும் குறையாததருமமும் புகழும்பெருக இந்தஇளையவளும் லக்ஷ்மிபோலவாழ்ந்து கூடி இருந்தாள்.

ஆகையாலே பொற்றாமரைத்தீர்த்தத்தோடு கூடிய திருவாலவாய்க்கடவுள் திருவிளையாடல்களை முடிவுகண்டு யாராலேசொல்லிமுடியும் ஆனாலும்இன்னம் அளவில்லாததிருவிளையாடல்களுண்டு என்றுஎன்னுடைய குருநாதசாமிசொன்னபடியே அறுபத்துநாலுகதைகளையும் உங்களுக்குச்சொன்னேன்.

என்றுதென்மலைமேலிருந்தமாதவத்தோனின்னருட்குருபரன்றனையு
மன்றவன்றிருவாய்மலர்ந்தவாசகமுமருள்கனிந்தொழுகவுள்ளடக்கித்
தென்றமிழாலவாய்த்தனிப்பதியைச்சென்னிமேற்பன்னிரண்டும்ப
ரொன்றவத்திமையாவங்கயற்கண்ணியுடனுறையொருவனைநினைந்தான்.

பரவசமடைந்துவழிகவர்ந்துண்ணும்பழிப்புலவேடர்போயொளிப்ப
விருள்வெளிகடந்துதிருவருள்வழிச்சென்றெண்ணிலாச்சராசரமனைத்தும்
புணர்வறநினைந்துகாட்சிகண்காண்பான்புதைபடத்தனித்தபூரணமா
யுணர்வுணர்விறந்தவுண்மையானந்தவுணர்வினையுணர்வறவுணர்ந்தான்.

வன்னியுங்கிணறு மிலிங்கமுமழைத்தபடலம் - முற்றுப்பெற்றது.

---

அறுபத்தைந்தாவது

## அருச்சனைப்படலம்.

### எழுசீரடியாசிரியவிருத்தம்.

கன்னிதன்வதுவைக்கரிகளாயிலிங்கக்கடவுளுங்கவைக்கருங்கோட்டு
வன்னியும்படுநீர்க்கூவலும்வந்தவழியிதுமதுரைநாயகனைச்
சென்னியில்வைத்தமுனிவனைப்பூசைசெய்துமாதவரொருங்கெய்திப்
பன்னிறமலர்தூஉயாலவாயானைப்பரவியபரிசதுபகர்வாம்.

### அறுசீரடியாசிரியவிருத்தம்.

ஏத்தியருச்சனைசெய்துநினைவிலரிதாயன்பிலெளியவட்ட
மூர்த்தியையங்கயற்கண்ணியன்பனைமுப்போதும்போய்முடிதாழ்ந்தின்பம்
பூத்தமனத்தினராகிக்கருவித்தேன்பொதிந்தசிறுபுட்போலந்த
மாத்தலனில்வசிட்டாதிமுனிவர்தபோவனஞ்செய்துவதிந்தார்மன்னோ.

ஒப்பில்லாத சச்சிதானந்தக்கடலைக்குடிக்கும் மேகத்தை ஒப்பான அகஸ்தியமகாமுனிவரைஉலோபாமுத்திரையுடனே வசிஷ்டர்முதலாகிய ரிஷிகளெல்லாரும்வணங்கி புஷ்பம்-சந்தனம்-கஸ்தூரி-தூபம் தீபம் முதலான பொருள்களைக்கொண்டு மேலானசிறப்புடனே அருச்சனைபண்ணி பின்னும் ஒருகேள்விகேழ்க்கிறார்கள் எப்படியென்றால் ஸ்வாமி அகஸ்தியமகாமுனிவரே உம்முடையகிருபையினாலே மேருமலையைவில்லாகவளைத்த மதுரேசருடைய திருவிளையாடல்களைக்கேட்டு நாங்கள்செவிகளைக்கொண்ட பலனை அடைந்தோம் இனி நாங்கள் கேட்டபடியே கண்கள்களிக்க அந்த மதுரேசரைக்கண்டு புஷ்பங்களால் அருச்சனைசெய்து வணங்க விரும்புகின்றோம் என்றுசொன்னார்கள் அப்படிச்சொன்னமுனிவர்கள் முன்னேமுகமலர்ந்து விந்தகிரியைஅடக்கின அகஸ்திய மகாமுனிவர் நன்று சொன்னீர்கள் முனிவர்களே நான் என்மனத்தி லெண்ணியபடியே நீங்கள் எல்லாரும் சம்மதியாகச்சொன்னீர்களென்று பின்னும் அதிசயித்து பிருதிவி முதலான தத்துவங்கள் முப்பத்தாறும் கடந்த ஒப்பில்லாத மஹாரிஷிகளே பண்ணோடு கூடிய நான்குவேதாந்தங்களாலும் தெளியப்படாத பரமசிவனை சகலகலைஞானங்களாலும் கண்டாலும் மனக்கண்ணால் காணாதவர்கள் வீட்டின்பத்தைக்காண்பார்களோ ஆகையால் உங்கள்காதுகளில் சுவையூறக் கேட்டபடியே திருவாலவாயிலில் விளங்குகிற ஐந்து முகங்களையுடைய பரஞ்சோதியினிடத்திலேபோய் அருச்சனைபண்ணி மனமுருகத் தெரிசித்து நினையாதபடிநினைந்து வஞ்சனையைச்செய்கின்ற வினைகளின் வேரைக் களைகிறதற்குப் போவோம் வாருங்களென்று நல்லசுபதினத்தில் அங்கே ஆகாயத்திலிருந் திறங்கின கங்காநதியிலே ஸ்நாநஞ் செய்து காசிவிசுவநாதரைத் தெரிசித்து அங்குள்ள பெரியோர்கள்முன்னே சங்கற்பங்கள் செய்து அவர்கள் அநுஜ்ஞைப்படியே ஆசீர்வதிக்கப் பெற்று மனமகிழ்ந்து தங்கள் ஐம்பொறிகளும் மதுரேசருடையதிருவடிகளிலேசெலுத்தி அந்தமதுரேசருடைய வடிவமாகிய ஐந்தெழுத்தையும் நாவாலே ஜெபித்துக்கொண்டு கைகள் குவித்துத் தங்கள் பரிசுத்தமான சைவதவமாகிய தெய்வத்தன்மை பொருந்திய தேரின்மேலேறிக்கொண்டு ஆகாசமார்க்கமாக செவந்தசடைகளும் திருநீறுபூசிய தேகங்களும் தவவிரதங்களை அநுஷ்டித்து இளைத்தமேனிகளும் உள்ளும்புறம்பும் பரிசுத்தமாய் உருத்திராக்ஷங்கள் அணிந்துகொண்டு புலித்தோல் உடுத்தின இடைகளுடனே முனிவர்களெல்லாரும் தவத்துக்கணிந்த ஆபரணங்கள்போலப்போகும்போது வழியிலுள்ள மிகுந்த புண்ணியங்களைத்தருகின்ற தெய்வஸ்தலங்களையும்இந்திரியநிக்கிரகம்பண்ணின முனிவர்கள் வாசஞ்செய்கிறவனங்களையும் தீர்த்தங்களையும்ஆறுகளையும் அங்கங்கே தவஞ்செய்கிறவிதங்களையும் கண்டுகண்டு அகஸ்தியமுனிவர்காட்டத்தங்களிரண்டுகண்களும்களிப்பக்கண்டு கைகள்குவித்து வணங்கிக்கொண்டுபோகிறபோது அகஸ்தியமாமுனிவர் அடங்காதவனான இராவணனைக் கொன்றதற்காக இராமன் பூசைபண்ணி அந்த கங்கையைமுடித்த விரூபாக்ஷனுடையதிருவருள்பெற்ற தலம் இதுபாருங்கள் உயர ஏறிவிழுந்து இறந்தவர்கள்முன்னே நினைத்தது நினைத்தபடியே மறுபிறப்பில் தருவதாகிய மலை இது பாருங்கள் பசுவினுடைய நீண்டகாதுபோல நீண்டசோதிமயமான இலிங்கவடிவானவனுடைய சிவனிராத்திரியில் திருத்தேர் உற்சவம் நடப்பதான கோகர்னம் இந்தவூர் பாருங்கள் மேலைக் கடற்கரையில் கார்த்திகைமாதத்தில் திருத்தேர்உற்சவம் நடந்து திருக்கல்யாணமும் நடப்பதான கங்காதரனுடையதலம் அந்தவூர்பாருங்கள் வில்லைக்கொண்ட நீண்ட கையையுடைய வேடனாகிய கண்ணப்பநாயனார் மென்றுதின்றுபார்த்துக்கொடுத்த வூனை உண்டுமகிழ்ந்தகடவுளினுடைய அழகுபொருந்திய காளத்திமலை யிதுபாருங்கள் ஆகாசம்பொத்தலாக இடக்காலைநீட்டி ஞானவடிவான கடவுள் காளிதோற்க ஆடினதலம்இது பாருங்கள் மாமரத்தினிழலிலே மகாபதிவிரதையான உமாதேவி இருந்து தவஞ்செய்கிற பிலத்துவாரம் இதுபாருங்கள் திருவையும் மறுவையும் மார்பிலேஉடையகடவுள் தனது காக்குந்தொழிலைப் பெறுவதற்காகப் பரமசிவனைப் பூசைபண்ணி இரண்டு கைகளையுங்குவித்துக்கொண்டு முன்னேநிற்பதாகிய தலம் இதுபாருங்கள் வேதவாக்கியங்களின் வரம்பைக்கடந்த திரிநேத்திரதாரியானகடவுள் அரியவேதங்களை முனிவர்களுக்குச் சந்தைகூட்டிச் சொல்லிவைத்த இடம் இதுபாருங்கள் பன்றியாலும் அன்னத்தாலும் அடியுமுடியுங் காணப்படாமல் ஆகாசத்தைக் கிழித்துக்கொண்டு நீண்ட நெருப்புமலையான அண்ணாமலை இதுபாருங்கள் முள்ளைப்போலும் வாயையுடைய பட்சிவடிவாக இரண்டுமுனிவர்கள்

தவஞ்செய்கின்றமலை இதுபாருங்கள் அநேகமாகவூழிகாலங்கள்கழிய அந்தவூழிகாலங்களுக்கு முன்னும்பின்னும் இருப்பதான இந்தமலையைப் பாருங்கள் அசுரர்களிலே திருடனான அந்தகனைக் கொன்று திரிலோகத்துக்கும் கவலைதீர்த்த பரிசுத்தனான கடவுள்தலம் இதுபாருங்கள் ஆகாயத்திலேபறப்பதானபுரங்கள் மூன்றின்மேலும் அக்கினிவடிவான நெற்றிக்கண்ணைச்சாத்திப் பிறப்பு அறுகின்ற மூவருடைய அன்பிற்குள்ளானவன் ஊர் இதுபாருங்கள் சத்தியஞானனந்த தத்துவமானகடவுள் அசைவற்று ஆடுகின்ற நித்தியபரமானந்த நிறைஅருள்மன்றமானஊர் இதுபாருங்கள் பிறந்தவர்களுக்கு மோக்ஷத்தைத் தருவதான திருவாரூர் அதுபாருங்கள் நான்குவேதங்களும் பத்தியுடனே பூசைபண்ணித் துதிப்பதானவூர் இதுபாருங்கள் பிரமன் விஷ்ணு முதலான தேவர்கள் பிரளயகாலத்தில் இரவாதபடி கடவுளானவர் தோணியிலே ஏற்றிப் பன்னிரண்டுபேர்களைக் கொண்டவூர் இதுபாருங்கள் சடாயுசம்பாதிகள்பெரிதானபூசைசெய்ய வரங்களைக்கொடுத்து அவர்களுடைய இருண்டநோயைத்தீர்க்கும் மருந்துபோலும் கடவுள் இருக்கின்ற வூர் இதுபாருங்கள் பார்வதிதேவி மயில்வடிவாய் பூசைபண்ணித் துதிக்கும்படியான இந்தஇடம் காவேரியில் துலாஸ்நானம் பண்ணி நம்மையொத்தமூன்றுகோடி ஞானமுனிவர்கள் வந்து பூசைபண்ணுகின்ற மாயூரம்பாருங்கள் தருமதேவதைபூசைபண்ணின தருமபுரம் இதுபாருங்கள் நான்குகொம்புகளை யுடைய ஐராவதம் தாருகாசுரன் அறுத்துவிட்ட கொம்பைப் பழையபடி குற்றமில்லாமல் தவஞ்செய்துபெற்ற தலம் இதுபாருங்கள் மாலைசாத்துகின்ற தாடகையினுடைய மானங்காப்பதற்கு வளைந்து அழகியகச்சுக்கொண்டுகட்டி இழுக்கின்ற பெருமைபெற்ற கலயநாயனர் அன்புக்கு நிமிர்ந்தருளின நமதுகடவுள்ஊர் இதுபாருங்கள் யானைமுகாசுரனைக் கொன்றபின்பு யானைமுகக்கடவுள் பூசைபண்ணின சிவபுரம் இதுபாருங்கள் தாருகாசுரனைக்கொன்று முருகக்கடவுள் சிவனைப் பூசைபண்ணின இடம் இதுபாருங்கள் ஆத்திமரத்தின்கிழே மணலாலே இலிங்கங்கண்டு பசுவின்பாலால் அபிஷேகஞ்செய்து சிவனணிகின்ற மாலையைப் பெற்றுச் சூட்டிக்கொள்ளுமவரான பிள்ளையாராகிய தண்டியடிகள் ஊர் இதுபாருங்கள் சினந்து விழுகின்ற யமனுடையமார்பிலே சேவடிக்கமலத்தைச் சாத்தி அந்த மார்க்கண்டேயருக்கு ஆயுள்கொடுத்த கடவுள்வாசஞ்செய்கின்ற வூர் அதுபாருங்கள் ஆனைத்தோலைப் போர்வையாகப் போர்த்துக்கொண்ட கடவுள் கோயில் இது பாருங்கள் பிரமன்தலையைப் பலிபாத்திரமாகக்கொண்ட கடவுளிடம் இதுபாருங்கள் ஆடலனங்களை யமுதுசெய்த செங்கணுனிடம் இதுபாருங்கள் ஆட்டுத்தலையை மாமனுக்குக்கொடுத்த மருமகனுகிய கடவுள்கோயில் இதுபாருங்கள் சலந்தராசுரனைக் காற்பெருவிரலாலேகோலிப்படைத்த சக்கரத்தாலேகொன்ற கடவுள் இடம் இதுபாருங்கள் ஒருசெட்டிப்பெண்கலியாணத்துக்காக உலகமெல்லாம் அறிய சாட்சியான வன்னிமரம் கிணறு இலிங்கம் இவைகளுள்ளஇடம் இதுபாருங்கள் நீலகண்டக் கடவுளை அருச்சனைபண்ணி பாண்டியன் பிரமகத்திதீர்ந்துகொண்ட தலம் இதுபாருங்கள் மாமகம்வரும்போதெல்லாம் கங்கைவந்து தோன்றுதலாலே முழுகினவர்கள் பாபங்கள்தீர்ந்து போகங்களை அனுபவிக்கின்ற பரிசுத்த தீர்த்தத்தையுடைய ஊர் இது பாருங்கள் தகப்பனுக்குக்குருவாக உபதேசஞ்செய்து எங்கள்குருவான முருகக்கடவுள் தலம் இதுபாருங்கள் விஷ்ணு கண்ணிடந்து பூவாகச்சாத்த அவனுக்குச் சக்கரங்கொடுத்ததலம் இதுபாருங்கள் நந்திதேவர் தவஞ்செய்ததலம் இதுபாருங்கள் சிலந்தியானை பார்வதி தாமரைக்கண்ணனுகிய விஷ்ணு இவர்கள் தவஞ்செய்தஊர் இதுபாருங்கள் திரிசிரன்பூசைபண்ணின மலையிதுபாருங்கள் முழுகினவர்கள் பாபங்களையெல்லாம் போக்குகின்ற காவிரிநதியிது பாருங்கள் இந்தக்காவேரியே வெண்முத்துமாலைபோலே விளங்குகின்ற சோழநாடு இதுபாருங்கள் அந்தஆறு தமிழ்நிலைதெரிந்ததானவையைநதி சுவர்க்கலோகமே ஆகாயத்திலிருந்து வழுவிவிழுந்து கிடக்கிறதுபோறறேன்றுகின்றது தூரத்திலே அது தான்பாண்டியனுடுபாருங்களென்று அகத்தியமஹாமுனிவர் சொல்ல புதல்கள்போலேசோலைகளும் சிறு வாய்க்கால்கள்போலே நதிகளும் குளங்கள்சிறிதே நீரூறுகின்றகுழிகள்போலவும் வயல்கள்கீரைப்பாத்திபோலவும் தாழைகள் சிறுபுற்கள்போலவும் வாழைத்தோட்டங்கள் மஞ்சட்பாத்திகள்போலவும்

தோன்ற முனிவர்கள்கண்டு பின்பு பலநிறங்களையுடைய மாடவரிசைகளும் உபரிகைநிரைகளும் செய்குன்றுகளும் அன்னம் வெண்குருகு செம்போத்து கிளி மயில் இப்படிப்பட்டபட்சிகள் வெவ்வேறே கும்புகூடி யிருப்பதுபோலவும் கொடியாடைகள் அந்தப்பட்சிகள் இறகுகள்விரிப்பதுபோலவும் கண்டார்கள் அப்படிநாடுநகரங்களின் வளங்களைக்கண்டு கொண்டு நடந்துநடந்துகண்களுக்கு அதிசயந்தோன்ற ஆகாசத்திலே உலகத்தைவலமாகவருகிறமுனிவர்கள் ஆகாயத்தையளாவுகின்ற கொடுங்குன்றும் தளிப்புத்தூரும் சோலைகளிலே வண்டுகள்பாட மயில்களாடுகின்ற ஆடானைவளநகரும் மெய்யானவேதங்கள் துதிக்கின்ற புனவாயினகரும் தவசித்தர் இரதவாதஞ்செய்து சிவனுருவங்கண்ட அழகியநகரும் எல்லாவரத்தையுந்தருகின்றவனுகிச் சிவன்விளங்குகின்ற கானப்பேரும் விரதயோகநெறியிலே நின்று பார்வதியைத்திருமணஞ்செய்துகொண்டவர் விளங்குகின்ற திருச்சுழியனகரும் இராவணனைக்கொன்ற பழியினாலேமயங்கி விஷ்ணு தனக்குச்சக்கரங்கொடுத்த கடவுளை அருச்சனை பண்ணிக்கொண்டுபோன பெரியநகரும் முத்தும் வயிடூரியமும் பொன்னும்விளைகின்ற தாமிரபர்ணிக்கரையிலே பிறவாதகடவுள் மூங்கில்வயிற்றிலே பிறந்ததான பழையநகரும் துளசிமாலையணிந்தகடவுளை கொன்றைமாலையணிந்த கடவுளாகச்செய்த பழையநகரும் கோழிக்கொடிக் கடவுள் தெய்வயானையைக் கலியாணஞ்செய்துகொண்டிருந்த மலையும் அருச்சுனன்விற்கழியாலே அடிக்கவடுவானமுடியையுடைய கடவுளிருக்கிறவளநகரும் மேகங்கள்படிகின்ற திருவாப்பனூரும் கண்டுவணங்கிக் குளிர்ந்த அலையாகிய கைகளுடனே வண்டுகள் படிகின்ற தாமரைமலரே முகமாகவுடைய வையையாகிய தேவியை முன்னேவணங்கிக்கண்டு கொண்டு எட்டுத் திக்குகளையும் அண்டத்தையுங் கடந்து உலகத்தையுண்ட நெடியமால்போல் உயர்ந்துநிற்கிற கோபுரத்தைமுன்னேவணங்கி உள்ளே புகுந்து வீதிகளெல்லாம்பணிந்தெழுந்து பிரகாரங்களெல்லாஞ் சுற்றிக்கொண்டுபோய்ப் பொன்மயமான கோயிலுக்குள்ளேவந்து பொற்றாமரைத் தீர்த்தத்திலே ஸ்நானஞ்செய்து அனுஷ்டானம்பண்ணிக் கொண்டு நிலையாகஐந்தெழுத்தையும் எண்ணி மதம்பொழிந்துகொண்டு நான்குதோள்களும் சிறியகண்களும் ஐந்துகைகளையுமுடைய சித்திவிநாயகக்கடவுளைப்பாதம்வணங்கி மூன்றுலோகங்களும் நான்குவேதங்களும் முறையேதோன்றச்செய்த அங்கயற்கண்ணம்மைபாதங்களைத்தலைகளால்வணங்கிக்கொண்டுபோய் அன்புகொடுத்து இனிதான அருளைக்கொண்டு வெயில்வீசுகின்ற மாணிக்கங்களாலும் சொர்ணத்தாலும் அமைந்த இந்திரவிமானத்திலே அமர்ந்திருக்கின்ற ஒப்பற்ற சோதியினுடையசெவந்தபாததாமரைகள் சடையையுடைய தங்கள் தலைகள்மேன்மலர' வணங்கித்துதித்து அன்று இரண்டுகாலமும் உணவில்லாமலிருந்து சூரியன் இராத்திரியை அறுப்பதான ஒளிவாளென்னும்படி உதையமாகுமுன்னே பொற்றாமரைத்தீர்த்தமாடி காலைநியதிகளைச் செய்துகொண்டு இந்திரியங்களைந்தையும் வென்று உள்ளத்திலே அன்புநீர்பாய அதனால் விளைகின்றமுழுதுக்குமுதலாகிய கடவுளை உலகத்திலே கடம்பமரத்தடியிலே மின்னலெல்லாங் கூடிநிற்பதுபோலான இந்திரவிமானத்தின்மேலே தோன்றக்கண்டுவாசங்கலந்ததிருமஞ்சனம் தேன் கரும்பு வாழைக்கனி குற்றமில்லாத பசுவின்பஞ்சகௌவியம் தோஷரகிதமானபஞ்சாமிர்தம் பொதியச்சந்தனம்வாசம்வீசுகின்ற குளிர்ந்தபனிநீர்வெள்ளம் கஸ்தூரிபுழுகு சவ்வாது திவ்வியபரிமளமான மிருதுவுபொருந்திய புஷ்பங்கள் வஸ்திரம்அலங்கிருதமான ரத்தினாபரணங்கள்நல்ல சுவையான திருவமுதுஆகிய இவைகளெல்லாங் கொண்டு சதவுருத்திர மந்திரத்தைச்சொல்லி அபிஷேகஞ்செய்துசந்தனம்அப்பிமாலைசாத்திஆபரணங்கள்பூட்டி பாகமாகமந்திரம்சொல்லிச்சமைத்தபாலமுதுநிவேதனஞ்செய்து ஐந்துவகைவாசங்கலந்தபாக்குவெற்றிலைநிவேதித்து சுகம்தோன்றுவதாக தூபதீபாதிகளெல்லாம் கொடுத்து சிவமயமானபஞ்சாக்கினியிலே துடுவைநிரம்ப நெய்யைமொண்டு வார்த்துப் பூசைமுடித்து நான்குவேதங்களுஞ்சொன்ன மெய்யானமந்திரமாகிய சகஸ்திரநாமத்தைச்சொல்லி மூவிலைவில்வமும் நீலமலரும்கொண்டுசாத்திக் கடவுளைமகிழச்செய்து வாசங்கலந்த திருமஞ்சனநீருடனே மந்திரபுஷ்பங்களைக்கைக்கொண்டு அந்தச்

சிவபூசைப்பலனை மூன்றுகண்களையுடைய பரிசுத்தன்கையிற்கொடுத்து மனத்திலே அன்புபெருகக் கண்கள்நிரம்ப நீர்பெருகியொழுகக் கடவுளை எல்லாமுனிவரும்வணங்கி.

பழியொடுபாசமாறுகெடவாசவன்செய்பணிகொண்டவண்டசரணம்
வழிபடுதொண்டர்கொண்டநிலைகண்டுவெள்ளிமணிமன்றுளாடிசரணஞ்
செழியன்விளிந்திடாதபடிமாறியாடறெளிவித்தசோதிசரண
மெழுகடல்கூவிமாமியுடன்மாமனுடவிசைவித்தவாதிசரணம்.

வெங்கரியாவிசோரநரசிங்கவாளிவிடுவேடரேறுசரணம்
புங்கவர்தேறவாதிமறையுட்கிடந்தபொருளோதுபோதசரணம்
வங்கமதேறிவேலைமகரம்பிடித்தவலையாண்மணாளசரணம்
கங்கணநாகம்வீசிநகரொல்லைகண்டகறைசொண்டகண்டசரணம்.

மைந்தனிலாழிமேருமகவானகந்தைமடிவித்தநித்தசரணஞ்
சுந்தரநாமவாளிபணிகொண்டுகிள்ளிதொகைவென்றவீரசரணம்
வெந்திரன்மாறன்முன்கலுழுருவானைகன்னன்மிசைவித்தசித்தசரணம்
முந்தியகல்லின்மாதர்பெறவட்டசித்திமுயல்வித்தயோகிசரணம்.

திருமணிமைந்தன்மைந்தன்முடிசூடவிற்றதிருமல்குசெல்வசரணம்
மருமகனென்றுமாமனுருவாய்வழக்குவலிபேசுமைந்தசரணங்
குருமொழிதந்துநாரைகுருவிக்குவீடுகுடிதந்தவெந்தைசரணம்
வருபழியஞ்சிவேடமகனுக்கிரங்குமதுராபுரேசசரணம்.

விருத்தகுமாரபாலவருண்மேனிகொண்டுவிளையாடுமண்ணல்சரணங்
குரத்தியைநச்சுபாவியுயிருண்டுசோரிகுடைவாகைவேலசரணங்
கருத்திஞ்சபாணனுளினிசைபாடிமாறுகளைவேதகீதசரண
நரித்திரண்மாவைமீளநகரங்கலங்கநரிசெய்தநம்பசரணம்.

முற்பகலாறிரண்டுசிறுபன்றியுண்ணமுலைதந்தவன்னைசரணம்
பொற்புறுமாயவாவையடலேறுகொண்டுபொருதட்டசிட்டசரணம்
பற்பலஞாலமெங்குமடையப்பிரம்புபடுமட்டமூர்த்திசரணங்
கற்பிளொருத்திமன்றலறிவிக்கமூன்றுகரிதந்தவள்ளல்சரணம்.

அளவைகளாலும்வேதமுதனூல்களாலுமயன்மாயனாலுமளவாக்
களவையுனக்குநாமகுணசின்னசாதிகதிசெய்தியில்லையவையு
முளவெனயாமறிந்துதுதிசெய்யவேகொலுலகஞ்செயன்பினெளிதாய்
விளையருண்மேனிகொண்டிவ்வறுபத்துநாலுவிளையாடல்செய்தபடியே.

என்றுதுதித்த வசிட்டர்முதலான இருடிகளையும் அகஸ்தியரையும் தேனைச்சிந்துகின்ற கடம்பவனத்திலே வாசஞ்செய்கின்ற சிவபெருமானானவர்இலிங்கத்தினின்றும் ஒருதிவ்வியசொரூபங்கொண்டுவந்து நின்றுபார்த்து கோபத்தைப்போக்கி மனந்தெளிந்த முனிவர்களே நீங்கள் பண்ணின பூசையும் தோத்திரமும் எல்லாத்தெய்வஸ்தலங்களுக்கும் எல்லாவுயிர்களுக்கும் நிறைவாகி நமக்கும் பேரானந்தமாயிற்றென்று பெரிதானகிருபைகூர்ந்து அகஸ்தியரைவருகவென்று அருகேஅழைத்து தமதுகையை

அவர்தலைமேலேவைத்து முதுகைத்தடவி நம்மைஒப்பானவன்நீயே நம்முடையதருமசொரூபியான பார்வதியை ஒப்பானவள் உனதுகற்புடைமனைவியான உலோபாமுத்திரையே ஆனபடியினாலே உங்களை ஒப்பவர் உலகத்திலேயாரிருக்கிறார் ஆனாலும் நிறைந்ததவத்தைச்செய்தவனும்அந்தத்தவத்தால்வலிமைபெற்றவனும் நீயேஅல்லவோ ஆகையாலே உனக்குக்கிடையாத வரங்கள்தருகிறதெப்படி உனக்குக்கிடையாத பொருள்களொன்றுமில்லை என்றருள்செய்து அந்த இலிங்கத்துக்குள்ளேபுகுந்து தமதிச்சைவடிவாயமர்ந்தனராக அப்போது அப்படிதமக்குவேண்டிய வரங்களெல்லாங்கொடுக்குஞ் சிவலிங்கமொன்று தமதுபெயராலே அகத்தீஸ்வரலிங்கமென்று அங்கேபிரதிஷ்டைபண்ணினார் அப்படியேமற்றைவசிட்டர்முதலான முனிவர்களும் தங்கள்தங்கள்பெயராலே இலிங்கங்கள் நிலைபெறச்செய்தார்கள் அப்படிபிரதிஷ்டைசெய்து துதித்து அருச்சனைசெய்துநினைவுக்கரியராய் அன்புக்கெளியவராய் அஷ்டமூர்த்தியான அங்கயற்கண்ணம்மைக்கு மகிழ்நரைமூன்றுகாலமும்போய் தலைவணங்கி பேரின்பம்பெருகின மனத்தையுடையவர்களாய் தேன்கூட்டைமொய்த்த வண்டுகள்போல அந்தப்பெரிதான ஸ்தலத்திலேதானே வசிட்டர்முதலான முனிவர்களெல்லாம் தபோவனஞ் செய்திருந்தனர்கள்.

அருச்சனைப்படலம் – முற்றுப்பெற்றது.

திருவிளையாடற்புராணம்

முற்றிற்று - முற்றும்.

திருச்சிற்றம்பலம்.

## விளம்பரம்.